ஸ்ரீ:

जयति सकलविद्यावाहिनीजन्मशैलः
जनिपथपरिवृत्तिश्रान्तविश्रान्तिशाखी ।
निखिलकुमतिमायाशर्वरीबालसूर्यः
निगमजलधिवेलापूर्णचन्द्रो यतीन्द्रः ॥

## தேஹம் க்ஷேத்ரம்

பகவத் கீதையில் அர்ஜுனனுக்கு உபதேசம் பண்ண ஆரம்பித்த ஸ்ரீகிருஷ்ணன் முதலில்

अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्मात् युध्यस्व भारत ॥

என்ருர். நாம் காண்பது உடல். இதை உடையவன் ஒருவன் இருக்கிருன். இவனை சரீரி-சரீரத்தை உடையவன்-என்பர். இவன் நித்யன். ஒருநாளும் அழிவில்லாதவன். இது என் சரீரம் என்று உணர்கிறவன். சரீரம் பஞ்ச பூதங்களால் ஆகியது, அழிவு உள்ளது. அநித்யமானது. நித்யமான ஆத்மாவுக்கு அநித்யமான சரீரம் ஏற்பட்டிருக்கிறது. இப்படி நித்யமான ஆத்மாவைப் பற்றியும் வருந்த வேண்டாம்? அழிகின்றதான சரீரத்தைப் பற்றியும் வருந்த வேண்டாம் யுத்தம் செய் என்றிப்படி அர்ஜுனனுடைய மோஹம் நீங்குவதற்காக சரீரம் வேறு ஆத்மா வேறு என்று உபதேசித்தார். இதையே மறுபுடியும் பதின்மூன்ரும் அத்தியாயத்தில் சரீரம் க்ஷேத்ரம் என்றும் இதிலுள்ள ஆத்மா க்ஷேத்ரஜ்ஞன் என்றும் கூறி விளங்க வைக்கிருர்

க்ஷேத்ரம் என்று தான்யம் விளையும் நிலத்திற்குப் பெயர், சரீரம் தன் ஆத்மாவுக்குப் பலவற்றை விளைவிக்கின்றதாகையால் இது தான்யம் விளையும் நிலம் போன்றது ஆகையால் இது க்ஷேத்ரமெனப்படுகிறது. இதிலிருந்து ஆத்மாவுக்கு விளையும் பொருள்கள் பல வகைப்பட்டவை. அவற்றுள் விருப்பம் வெறுப்பு ஸுகம் துக்கம் என்பவை சில. இவற்றை விகாரம் என்ற சொல்லால் கூறுகின்ருர் பகவான். விகாரம் என்ருல் அவஸ்தை அல்லது வந்து போகுமது என்பது பொருள். ஒன்றை விரும்புகிருன். அதை அடைந்து களிக்கிருன். அதைப் பெருவிட்டால் அல்லது பெற்று இழந்தால் துக்கப் படுகின்ருன். ஒன்றை வெறுக்கிருன். அது நேர்ந்துவிட்டால் துக்கப்படுகின்ருன். ஒழிந்தால் களிக்கிருன் ஆகவே இவை விகாரம் என்ற வ்யவஹாரத்திற்கு உரியவை.

ஸ்ரீ:

# யதார்த்த ராமாநுஜன் - 1

மீமாம்ஸார்ணவ, மீமாம்ஸா கேஸரீ, பூர்வோத்தர தந்த்ர

ப்ரதீப, தேசிக தர்சந துரந்தர, பண்டிதராஜ

ஸ்ரீ இம்படி திருமலை லக்ஷ்மீகுமார

கோடிகந்யகாதாநம்

## திருவரங்கம் திருமலை தாதாசாரியர்

ந்யாய மீமாம்ஸா சிரோமணி, M. O. L.

Rtd. Reader in Sanskrit

S. V. Oriental Research Institute,

Tirupati

जयति यतिराजसूक्तिः

जयति मुकुन्दस्य पादुकायुगली ।

तदुभयधनास्त्रिवेदी-

मवन्ध्ययन्तो जयन्ति भुवि सन्तः ॥

1971

விலை. 2. 50

# விற்பனைக்காக உள்ள புத்தகங்கள்

1. விசிஷ்டாத்வைத கோசம் ரூ
   இந்த ஸித்தாந்தத்தைச் சேர்ந்த வடமொழி நூல்களிலும் பகவத் விஷயத்திலும் காணும் சொற்களின் பொருளைக் கூறும் அகராதி 20

2. விசிஷ்டாத்வைதஸித்தி
   அத்வைத நூல்களில் கூறப்பட்ட ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் கூறி இந்த ஸித்தாந்தத்தை நிலைநாட்டும் வடமொழி நூல். அத்வைதத்தையும் விசிஷ்டாத்வைதத்தையும் பற்றிய ஆங்கில முகவுரையுடன் கூடியது. 12

3. சரீரஸித்தி.
   ஸ்ரீபாஷ்யத்தின் மேல் பிறர் கூறின தூஷணங்களைப் பரிஹரித்து உண்மைப் பொருளை விளக்கும் நூல் ஆங்கில முகவுரையுடன் கூடியது. 5

4. ராமாயண ஸாரஸங்க்ரஹம்
   ஸ்ரீமத் ராமாயணத்தில் கூறப்பட்ட ஒவ்வொரு விஷயத்தைப் பற்றியும் கால நிர்ணயம் செய்யும் வடமொழி நூல் 1

5. ப்ரபந்தஸாரவைபவம்
   ப்ரபந்தஸாரம் தேசிகன் செய்தருளின நூலன்று என்றதற்கு மறுப்பு 1

6. ஸர்வசக்தி * 0

7. கோதை போலும் * 0

8. பாமஹரின் காவ்யாலங்காரம் உரையுடன் 7

9. காவ்யாதர்சம் (தண்டி) 4 உரைகளுடன் 7

10. குவலயாநந்தம் புதரஞ்ஜனி என்ற புது உரையுடன் கூடியது. 6

11. ஸம்ஸ்கிருதசிக்ஷை (பாலர்களுக்கு) 1

கிடைக்குமிடம்: 113, தக்ஷிண மாட வீதி, திருபதி.

---

*இந்த இரண்டும் தேசிகன் ஸ்ரீஸூக்திகளைப் பற்றிய தூஷணங்களுக்கு மறுப்பு நூல்கள்

# விஷயங்கள்

| ப்ரஸ்தாவம் | பக்கம் |
|---|---|
|  |

| ப்ரஸ்தாவம் 2. | |
|---|---|
|  |

| யதார்த்த ராமாநுஜன் | |
|---|---|
|  |

கிடைக்குமிடம் 113, G. South Mada Street, Tirupati.

---

## திருத்தம்

| பக்கம் | வரி | |
|---|---|---|
| 5 | 33 | (காத: |
| 39 | 21 | யோsஹமஸ்மி |
| 47 | 36 | ஸாதனம இது'' |
| 64 | 9 | க்ந்தியன்று என்று |
| „ | 32 | பிறகு |
| „ | 38 | என்ற ஹேதுவை |
| 68 | 31 | பாஷ்யகாரர் |
| 73 | 31 | அஸ்து தே |
| 74 | 4 | இசையாமல் |
| „ | 14 | திஷ்டாநஞ்ச |
| 105 | 27 | க்ஷீரவத்தி |
| „ | 33 | யாமியாயி |
| 108 | 32 | துஸ்தர தயா- |

# ப்ரஸ்தாவம்

ஸித்தாந்த ஜீவாதுக்களும் பரமாசார்யர்களுமான மஹான்களிடத்தில் ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் த்ரிவித கரணத்தாலும் அஸஹ்யாபசாரப்பட்டு வாழும் வ்யக்தியைப் பார்த்து க்லேசப்படுகின்றவர்கள் பலர் இருப்பர். அவர்களுக்கு ஒருவிதமான ஆச்வாஸம் உண்டாவதற்காகப் போலும் ஸ்ரீ ராகவன் ஒரு வ்யக்தியை ஸ்ருஷ்டித்து அது செய்யும் கோர அபசாரங்களைத் தானே ஸாக்ஷாத் பெற்று வருகிறான், ஆகையால் ஸ்வாமி தேசிகன் ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநாதிகாரத்தில் ஸாதிக்கிறபடி நமக்கு அந்த வ்யக்திகள் விஷயத்தில் நிர்வேதம் கோபம் வெறுப்பு எதுவுமில்லாமல் உபகார ஸ்ம்ருதியும் கரைபுரண்ட க்ருபையும் க்ருதஜ்ஞதையும் இருக்கவேணும். ஆயினும் உலக க்ஷேமத்திற்காக முன்னோர்கள் இயற்றிய நூல்களுக்கு அபார்த்தம் சொல்லி அவற்றை ப்ரயோஜனமற்றவையாகச் செய்வது அறிவாளிகளுக்கு ஸஹிக்கமுடியாத ஒரு கோர நிகழ்ச்சி. ஆகையால் உள்ள பொருளை விளக்கி அந்த க்ரந்தங்களைக் காப்பது இவர்களுக்குக் கடமையாகிறது.

உலகத்திலேயே தனக்கு ஒத்தார் மிக்கார் ஒருவருமில்லையென்று கர்வப்பட்டு தூஷணம் வித்வான்கள் எழுதும் மறுப்புகளுக்குமட்டுமன்றி எழுதுகின்றவர்களுக்கும் மிகவும் கேவலமான முறையில் ஸம்பாவனை செய்துவருகிறது. தேசிகன்ஸ்ரீஸூக்திகளில் இது செய்த குசோத்தியங்களுக்கெல்லாம் நாம் இது வரையில் ஸமாதானம் சொல்லிவந்திருக்கிறோம். இப்போது அது செய்த தூஷணங்களுக்கு பரிஹாரம் இந்த க்ரந்தத்தில் செய்கிறோம். நம்மையே பலபடியாக தூஷித்திருகிறது. அதைப் பார்த்த அல்லது கேட்ட சிலர், இவரும் தூஷிக்கிறார் அவரும் தூஷிக்கிறார், இவரும் எழுதுகிறார் அவரும் எழுதுகிறார் என்றிப்படி எண்ணக் கூடும். ஆகையால் அதற்கும் நமக்கும் உள்ள விசேஷத்தைச் சிறிது இங்கே விளக்க உத்தேசிக்கிறோம்.

## குவலயாநந்தம்

குவலயாநந்தத்தில் அதியஜேத என்ற யாதவாப்யுதய ச்லோகம் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. இதன் மூன்றும் பாதம் க்ஷிதிப்ருதைவ ஸதைவதகா வயம என்று ப்ரஸித்தம், அப்படியே மூலம் அச்சிடப்பட்டது. குவலயாநந்தத்தின் புது வ்யாக்யானம் ஒன்று நம் உத்யான பத்ரிகையில் அச்சிட்டு வெளியிடப்பட்டது அதில் "ஸதைவதகா" என்ற இடத்தில் ஸதேவதகா: என்ற பாடம் கொண்டு இதற்கு பாணிநிஸூத்ரமும் உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. இதை மூலத்தில் "ஸதை (தே) வதகா:" என்று காட்டியிருக்கலாம் ஆனால் என்ன காரணத்தினாலோ விட்டுப் போயிற்று, ப்ரூப் பார்க்கும போது மூலத்தை மட்டும் படித்துவிட்டுப் பிறகு வ்யாக்யானம் படிப்பது என்ற பழக்கமும் உண்டு அப்போது வ்யாக்யானத்திலுள்ள விசேஷத்தை மூலத்தில் காட்ட வேண்டிய அவதானம் இல்லாமற் போவது இயற்கை. இதுவே காரணமோ வேறு காரணமோ வ்யாக்யானத்தின்படி உள்ள பாடம் மூலத்தில் காண்பிக்கப்படவில்லை.

பிறரிடத்தில் குற்றம் காண்பதையே தன் ஜீவநத்திற்கு லட்சியமாகக் கொண்ட தூஷணம் இதற்காகவே பத்ரிகையைப்படித்து "ஆஹா கிடைத்தது தூஷிப்பதற்கு அவகாசம்" என்று துள்ளிக் குதித்து எழுந்து "இதோபார் தவறு கண்டு பிடித்துவிட்டேன்" என்று கோஷித்து இதை எடுத்துக்காட்டிற்று. நாம் இதை வரவேற்று "மஹோபகார:" என்ற தலையங்கத்தின் கீழ் குறிப்பிட்டு 'சுத்தி பட்டியில் இதை வெளியிடுகிறோம்' என்று உத்யான பத்ரிகையில் 1945 நவம்பர்-டிஸம்பர் ஸஞ்சிகையில் சொன்னோம். இதைக் கண்ட தூஷணம்

> ஸந்தோஷம் வழிக்கு வந்து விட்டார், ப்ராமாணிகர்களின் வழி இது. இவ்விதமான பதிலே விசார விஷயங்களில் எல்லாவற்றிலும் இருப்பது மிகவும் நன்று.

என்று எழுதிற்று. நாம் ஸாத்விக முறையில் சொன்னதை ஏற்க சக்தியற்று தாமஸ முறையில் இப்படி எழுதினதைக் கண்ட நாம்

> "இப்படி எழுதும் இவர்கள் இதே போன்ற தம் தவற்றில் என்ன செய்கிறார்கள் என்று அறிய நமக்கு பேரவா.

> 1) கீதாபாஷ்யத்தில் (16–2) "தயா பூதேஷ்வலோலுத்வமிதி வா பாட:" என்று ஸாதிக்கப்பட்ட பாடாந்தரத்தை மூலத்தில் ஏன் காட்டவில்லை.

2) திருவாய்மொழியில் "பார் விண் நீர் முற்றும் கலந்து பருகிலும்" என்று மூலத்தையும் "பருகினும்" என்று வ்யாக்யானத்தையும் அச்சிட்டது ஏன் ?

3) அடைக்கலப் பத்தில் "ஆறுபயனெனவே கண்டு" என்று மூலத்தையும், எனவே கொண்டு - என்கிற சாஸ்திரார்த்தத்தை உட்கொண்டு என்று வ்யாக்யானத்தையும் அச்சிட்டது ஏன்?

என்று 1946 ஸெப்டம்பர் - டிசம்பர் ஸஞ்சிகையில் கேட்டிருந்தோம். இதற்கு ருஜுவாகவும் ப்ராமாணிகமாகவும் எவ்வித பதிலும் சொல்லாமல் இருந்துவிட்டு 25 வருஷத்திற்குப் பிறகு இப்போது நாம் எடுத்துக்காட்டியதைப்பற்றி எதுவும் பேசாமல் நாம் மாபெருந்தவறு செய்து விட்டது போலவும் தம்முடைய அபாரஸாமர்த்தியத்தாலே அதைக் கண்டு பிடித்துச் சொன்னது போலவும் எழுதுகின்றது. நாம் எழுதினது,

"ஸதை (தே) வதகா:" என்று அங்கே இருக்கவேண்டும் சுத்தி பட்டியில் இதைக் காண்பிக்கிறோம்:

என்று. இந்த இடத்தில்.

அதைக் கடாக்ஷித்த ஸ்வாமி தவறுதலையெடுத்துக்காட்டி என்னுடைய மருளை விளக்கிப் பத்திரிகை அச்சிட்டார். பிறகு நான் விழித்துக் கொண்டேன் அடுத்த என் பத்திரிகையில் சோதனம் வெளியிட்டேன் (அதாவது) ஸதைவதகா: என்று அச்சிட்டது மருள் ஸதேவதகா என்று திருத்திக் கொள்க வென்று திருத்தம் வெளியிட்டேன்

என்று நாம் சொன்னதாக எழுதுகிறது. இது ஏமாந்து போனதை ஒன்றுக்கு மூன்று இடத்தில் எடுத்துக் காட்டியிருந்தோம். ஆர்ஜவம் பெருந்தன்மை ஸௌஜந்யம் இவை முதலிய குணங்கள் இருந்தால் ஆம் நானும் அதே தவற்றைத் தான் செய்திருக்கிறேன் க்ஷமிக்க வேணும் என்று அப்போதே க்ஷமை கொண்டிருக்கவேண்டும். அதற்குறிய தைரியமும் காம்பீர்யமுமில்லை. அதனால் க்ஷமை கொள்ளாவிடினும் வாயை மூடிக்கொண்டாவது இருக்கவேண்டும். இப்படி ப்ராப்தமானதைச் செய்யாமல் நாம் சொல்லாததும் அஸம்பத்தமுமான விஷயங்களை இப்போது எதற்காகச் சொல்லுகிறது.

1) ஸதைவதகா: என்றபாடம் இப்பொழுதும் யாதவாப்யுதயத்தில் காணப்படுவதும் அப்பையதீக்ஷிதர் ஆதரித்ததும் குவலயாநந்தத்தில் காணப்படுவதுமான பாடம் அதை மருள் என்பது மருள்

2) நாம் அதை மருள் என்று ஒப்புக்கொண்டதாகச் சொல்வது ஒரு பெரும் பொய்

3) இப்படி நாம் அடுத்த ஸஞ்சிகையில் வெளியிட்டதாகச் சொல்வது மற்றொரு பெரும் பொய்

4) (தே) என்று 'தை' என்பதற்குப் பிறகு அச்சிட்டிருக்க வேண்டும். அச்சிடாதது கவனக் குறைவு, அநவதானம்! மருள் அன்று. இது தூஷணத்தினிடத்தில் மலிந்திருக்கிறது.

5) இவ்விதக்குற்றம் தனனிடத்தில் இல்லைபோல் பேசுவது அநார்ஜவம்

## 2. வித்யமாநயோ :

காஞ்சீபுரம் ஸ்ரீ பட்டப்பாஸ்வாமி ஸாதித்த ஸுபாஷிதநீவீ வ்யாக்யானத்தின் ப்ரதியில் " அபுத்ரதயா ஹதபுத்ரதயா ச வித்யமாநயோ: " என்று பதங்கள் இருந்தன. வித்யமாநயோ: என்ற இது கித்யமாநயோ: என்றிருக்க வேண்டுமென்று சிறிது ஸம்ஸ்கிருதம் கற்றவர்கள் கூட அறிவார்கள். இப்படித் திருத்திப்படிப்பவர்கள் படித்துக்கொள்ளட்டும், இருப்பதும் குற்றமற்றதாகையால் நாம் திருத்தவேண்டியதில்லை என்று பார்த்து அப்படியே பத்திரிகையில் அச்சிட்டோம். 'கட: கடத்வேந வித்யதே, ந படத்வேந' பகவான் ஸர்வஸ்யாபி வஸ்துந: ஆத்மத்வேந அவதிஷ்டதே' என்ற இப்படிப்பட்ட ப்ரயோகங்கள் சாஸ்த்ரக்ரந்தங்களில் உண்டு. வ்யாக்யானகாரர் பெரிய வித்வானாகையால் நாம் அதை மாற்றக் கூடாது என்று அப்படியே விட்டோம். நாம் மாற்றாமல் அச்சிட்டதைப்பார்த்து தூஷணம் குறை கூறிற்று. பிறகு வ்யக்யானத்திற்கு மற்றொரு எழுத்துப்ரதி இருப்பதாகவும் அதில் கித்யமாநயோ : என்றே இருந்ததாகவும் தெரிய வந்தது. அதனால் தூஷணத்தின் தாண்டவம் அதிகமாயிற்று. இங்கே நம்மிடத்தில் குற்றம் ஏதாவது உண்டா என்பதை தடஸ்த வித்வான்கள் சிந்திக்க வேணும். அச்சிட்டபடி யாருக்கு அந்வயிக்கவில்லையோ அவர்கள் உடனே கித்யமாநயோ: என்று திருத்திக்கொள்வார்களாகையால் அதை நாம் அச்சிடாததனால் குறை ஒன்றுமில்லை. இருக்கிறபடி

சாஸ்த்ரஜ்ஞர்களுக்கு அந்வயிக்கு மாகையினாலும் ஒரே ப்ரதியிலுள்ள மஹாபண்டிதருடைய வாக்யத்தில் நாம் மாறுதல் செய்யக்கூடாது என்ற எண்ணத்தினாலும் நமக்கு கிடைத்த ப்ரதியிலிருந்ததை அப்படியே நாம் அச்சிட்டோம். இதை நாம் 1946 மே-ஜூன் ஸஞ்சிகையில் விரிவாக எடுத்துரைத்திருக்கிறோம். ஆகிலும் தான் சொன்னதையே சொல்லிக்கொண்டு இங்கு ஏதோ மஹாப்ரமாதமான தவறு ஒன்று எற்பட்டது போல் இப்போது ஆர்ப்பாட்டம் செய்கிறது.

குற்றமே இல்லாத இடத்தில் பெரும் குற்றம் இருப்பதாகத் தம்பட்டம் அடிக்கும் இது ஒவ்வொன்றும் ஒவ்வொரு மலைபோல் இருக்கும் பல பல தவறுகளைச் செய்திருக்கிறது. அவற்றில் சிலவற்றை 1946 ஸெப்டம்பர்-டிஸம்பர் ஸஞ்சிகைலேயே எடுத்துக் காட்டினோம். அவற்றை மறுபடியும் இங்கே காட்டுகிறோம்.

1. ஈச்வரோ' ஹமஹம் போகீ, என்ற இடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ' தத்ர ஹம் சேத்,ந தர்மஸ்வபாவாத் ஏவம்பூத :'' என்று இது அச்சிட்டிருக்கிறது இங்கு சேத்.ந என்பது அபத்தமும் அநந்விதமுமான பாடம் ''சேதந'' என்றிருக்க வேண்டும். இதை க்ரஹிக்க இதற்கு வ்யுத்பத்தி இல்லை

2. அநேகசித்த விப்ராந்தா : என்றவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகா ''ஈச்வரே ந்யஸ்தபரா ஹி ப்ராயசோ நிச்சிதா:'' என்றிருக்கிறது. இங்கு ''நிச்சிந்தா :'' என்றிருக்க வேண்டுமென்பது வித்வான்களுக்கு விளங்காமல் போகாது இதற்கு விளங்கவில்லை.

3. 'பரிசர்யாத்மகம் கர்ம' என்ற விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் உதாஹரிக்கப்பட்ட யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதிச்லோகம் ''சூத்ரஸ்ய த்விஜ சுச்ரூஷா தயா ஜீவந் வணிக் பவேத்'' என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இங்கு தயா 'ஜீவந் அதாவது தயா அஜீவந் என்று திருத்த வேண்டும். திருத்த வில்லை. இவை திருத்த வேண்டிய இடத்தில் அஜ்ஞானத்தினாலும் அவ்யுத்பத்தியினாலும் திருத்தாமல் விட்ட சில இடங்கள். இனி திருத்தம் அபேக்ஷிக்காத போது திருத்திய இடங்களில் சில.

4. ''பசாம்யந்நம் சதுர்விதம்'' என்ற விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் 'த்ரேதா'ந்நப சநம் காத: ' என்றிருக்கிறது. இங்கு இங்கு (காத [த] என்று இது செய்த திருத்தத்திற்கு அபேக்ஷையேயில்லை. அநந்வயமும் உண்டு.

5. உத்தம: புருஷஸ்த்வந்ய: என்ற விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகை

அத்ர ஆவேச பரண ஈச்வரத்வாநாம் கர்ம கர்த்ரு பாவேந அந்யத்வோபஸ்தாபகத்வம்

என்றுள்ளது. ஆவேசாதிகள் தமக்குக் கர்த்தவாகையாலே ஈச்வரனையும் கர்ம காரகமாகையாலே உலகத்தையும் பரஸ்பரம் வேறுபட்டதாகக் காட்டுகிறது என்பது இதன் பொருள். இது புரியாமல் கர்ம கர்த்ருபாவேந (நிர்திஷ்டயோ:) என்று அநந்விதமான புது பதமொன்றைச் சேர்த்து அச்சிட்டிருக்கிறது.

6. ஓம் தத் ஸத் இதி நிர்தேச: என்கிற விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் லக்ஷ்யேஷு உத்திஷ்டேஷு லக்ஷணவிதிஸ்து அபேக்ஷித: என்றிருக்கிறது. எவற்றுக்கு லக்ஷணம் சொல்லவேண்டுமோ அவற்றைக் கூறிய பிறகு லக்ஷணம் சொல்வது அபேக்ஷிதம் என்று இதன் பொருள். உத்தேச: லக்ஷண பரீக்ஷா என்று சாஸ்த்ர க்ரந்தங்களில் விஷயங்களை நிரூபணம் செய்வதில் க்ரமம். இதை ந்யாய பாஷ்யகாரரான வாத்ஸ்யாயநர் சொல்லி யிருக்கிறார். இதை மநஸில வைத்துக்கொண்டு ஸ்வாமி ''லக்ஷ்யேஷு உத்திஷ்டேஷு லக்ஷணவிதி:'' என்கிறார் இது இதற்குத் தெரிய ப்ரஸக்தியே இல்லை. ஆனால் என்ன எண்ணியோ லக்ஷ்யேஷு (துஷ்டேஷு) என்று திருத்தம் செய்திருக்கிறது. இதைப் பற்றி என்ன சொல்வது சோம்பல் இல்லாமல் ஒருவன் இந்த கல்பம் முடியும் வரையில் சிரித்தாலும் போதாது என்று ஒரு ச்லோகம் இங்கே எழுதி நின்றோம்.

7. த்ருத்யா யயா தாரயதே என்கிற ச்லோகத்தின் பாஷ்யம் யோகேந ப்ரயோஜநபூதேந அவ்யபிசாரிண்யா யோகோத்தேசேந ப்ரவ்ருத்தா; தத்ஸாதநபூதா: மந:ப்ரப்ருதீநாம் க்ரியா. யயா த்ருத்யா தாரயதே ஸா ஸாத்விகீத்யர்த்த:

என்றிருக்கிறது. இங்கே 'அவ்யபிசாரிண்(ய:) ண்யா' என்று இது திருத்தம் செய்திருக்கிறது. த்ருதிக்கு விசேஷணமாகையால் த்ருதீயாந்தம் இந்த பதம். அது தெரியாமல் க்ரியைக்கு விசேஷணமென்று மருண்டது. க்ரியா: என்பது த்விதீயா பஹுவசனம். அது தெரியாமல் ப்ரதமாபஹுவசனம் என்று மருண்டு (ண்ய:) என்று 'ண்யா'வைத் திருத்துகிறது. இதை யார் என்ன செய்ய முடியும். பிறவிக்குருடன் ஸூர்யன் ரதத்திற்கு வழி காட்டுவது போல் இருக்கின்றது இது என்று சொல்லி நின்றோம்.

இப்படி மஹாக்ரந்தங்களை இது நாசம் செய்திருக்கிறது. இவ்வளவு நாம் எடுத்துக் காட்டியபிறகு 'நாம் செய்யாத குற்றங்கள் எதையும் பிறர் செய்யவில்லை' என்பதை உணர்ந்து மறுபடி பிறர் மேல் தூஷணம் எதுவும் சொல்லாமல் காலத்தைக் கழிக்கவேண்டும். நாம் காட்டியிருக்கும் ஒவ்வொரு பிழைக்கும் கைகூப்பி நிற்க வேண்டியது தவிர வேறு எதுவும் செய்யமுடியாது. ஆகிலும் லஜ்ஜை சிறிதும் இல்லாமல் அச்சுப்பிழைகள் சிலவற்றைக் காட்டியிருக்கிறார் என்று எழுதிவிட்டுப் பழையபடியே தனது துர்மார்க்கத்தில் பெரும் உத்ஸாஹத்துடன் போய்க்கொண்டிருக்கிறது.

ஸம்ப்ரதாயாந்தர க்ரந்தங்களை அவற்றிலுள்ள தோஷங்கள் கண்ணில் படுமே யென்று பயந்து நாம் பார்ப்பதே இல்லை ஆகிலும் தூஷணம் செய்யும் துர்வாதங்களுக்கு நிரஸநம் செய்யவேண்டியது அவச்யமானபோது அவற்றைப்பார்க்க நேரிடுகிறது அந்த ரீதியில் இது வெளியிட்ட ஸ்ரீவரவரமுநிக்ரந்தமாலா ஸம்புடத்தை பார்த்தோம். அதில் இது செய்திருக்கும் சில தவறுதல்களைக் காட்டுகிறோம். தத்த்வத்ரயவ்யாக்யாநம் 61-ம் பக்கத்தில்

> இது, ஸஹகாரித்வேந லீலோபகரணமாயிருக்கும்; ஈச்வரன் ஸ்ருஷ்ட்யாதிகளை நிர்வஹிக்குமிடத்தில் ஸத்யஸங்கல்பனான தான் அடியில் பண்ணிவைத்த காலநியமம் தப்பாதபடி அவ்வவ காலாகமனம் பார்த்திருந்தே நிர்வஹிக்கையாலே இது தன்னை நிமேஷகாஷ்ட்டாதிரூபேண பரிணமிப்பிக்கையாலே, இதுதான ஸ்ருஷ்டிவிஷயமுமாயிறே இருப்பது

என்று அச்சிட்டிருக்கிறது. இதில் 'ஸஹகாரித்வேந' என்ற ப்ரதிஜ்ஞைக்கு ஹேது 'பரிணமிப்பிக்கையாலே' என்றவரையில் என்று தோன்றுகிறது. ஆனால் இது ஸரியன்று. நிர்வஹிக்கையாலே என்பது வரையில்தான் இந்த ப்ரதிஜ்ஞைக்கு ஹேது. 'இது தன்னை' என்று ஆரம்பித்துச் சொல்வது வேறு ஹேது. இதற்கு ஸாத்யம் இதுதான் என்று ஆரம்பித்துச் சொல்வது. காலம் ஸஹகாரியாயிருந்தும் லீலோபகரணமாயிருக்கும். ப்ரக்ருதிபுருஷர்கள் போலே ஸ்ருஷ்டிகர்மீபூதமாயும் லீலோபகரணமாயிருக்கும் என்பது மாமுநிகளின் திருவுள்ளம். இதை க்ரஹிக்கவில்லை.

2. ப்ரஹ்மவர்சஸமுள்ளவன் ப்ரஹ்மவர்சஸீ. அவனுடைய தன்மை ப்ரஹ்மவர்சஸித்வம். ''இதற்குறுப்பாக மார்பிலிட்ட யஜ்ஞோபவீதாதிகள்'' என்று மாமுனிகள் ஸாதிக்கின்றார். இந்த இடத்தில் ''ப்ரஹ்மவர்ச்சஸ்த்வத்துக்குறுப்பாக'' என்று இது அச்சிட்டிருக்கிறது'

3 வாகபூஷணத்தில் 129ம பக்கத்தில்

இதில் கர்ணைறயிலே. ச்லாக்யையேயுள்ளது

என்றிருக்கிறது ச்லாகையேயுள்ளது என்றிருக்க வேணும். இவையெல்லாம் அச்சுப்பிழையல்ல

## 3. திருச்சந்த விருத்தம்

ஸ்ரீ திண்டுக்கல் ராமஸ்வாமி அய்யங்கார் இங்கிலீஷில் எழுதிய ஒரு க்ரந்தத்தை அநுஸரித்து ஆழ்வார்களுடைய வைபவத்தை ஸம்ஸ்கிருதத்தில் எழுதி பத்ரிகையில் வெளியிட்டுக் கொண்டு வந்தோம். திருமழிசையாழ்வார் விஷயம் வந்தபோது ராத்ரியில் அந்த இங்கிலீஷ் புஸ்தகத்தைப் பார்த்து எழுதும்போது அதில் இருந்த 120 என்ற எண் 126 ஆகக் கண்ணுக்குப்புலபட்டது. அப்படியே எழுதி விட்டோம். இதில் ப்ரமாதமென்ன? இதில் என்ன அநர்த்தம் விளைந்துவிடும். நாம் எழுதினதைப் பார்த்து பாட்டுக்கள் 126 என்று எண்ணிக் கொண்டவர்களும் புஸ்தகத்தைப் பார்த்து 120 தான் என்று கண்டபோது நாம் எழுதியது 126 என்ற எண் ஏதோ தவறி விழுந்திருக்கிறது என்று உண்மையை உணர்வார்கள். 126 தான் என்று அவதாரணம் பண்ணி நாம் சொல்லியிருக்கவில்லை.

> இங்ஙனே ஸங்க்யா வாசக சப்தத்தை நேரேயிட்டு இயற்றப்படுவது கிடையாது இது கொண்டே ச்லோகம் பாத்ரத்தனியன் போலவே பச்சாத் கல்பிதமென்பது கல்வெட்டாம்

என்று அத்யூர்ஜித ப்ரதிஜ்ஞை செய்துவிட்டு

> மந்தாக்ராந்தா ஜலதிஷ்டகை:
> ந்ரீதசயதி: ப்ரஹர்ஷணீ

இத்யாதிகளை எடுத்துக் காட்டிய பிறகு வாய் திறக்க வழியில்லாமல் நின்றவர்கள் மறுபடி வாய் திறப்பதேன்.

“ஸ்ரீமான் கபிஸ்தலம் அநந்தாண்பிள்ளை அநந்தாசார்ய ஸ்வாமிகளாலும், சங்ககிரி-பிரமு குருஸ்வாமி நாயுடு அவர்களாலும் பாடபாடாந்தரங்களுக்கு இதமாக பரிசோதிக்கப்பட்டு பரசமயக் கோளரி ஸ்ரீமான் முடிச்சூர் அப்பாவு முதலியார் அவர்களால்

ஏற்படுத்தப்பட்டுள்ள ஸ்ரீமத் வர வர முநீந்த்ரரை வாழ்த்தும் ஸபையைச் சேர்ந்தவருமாகிய ஸ்ரீராம கிருஷ்ண பிள்ளை அவர்களால் சென்னை ஆதிகலாநிதி அச்சுக்கூடத்தில் கலி 4885 ஸ்வபாநு ஹு-த்தில் படிப்பிக்கப்பட்ட முதலாயிரத்தில்'' திருப்பல்லாண்டு முதல்பத்தின் முதல் திருமொழியாகவே அச்சிடப்பட்டிருக்கிறது. ஆர். வெங்கடேசகம்பெனி அவர்களால் 1908ல்தெலுங்கு லிபியில் பதிப்பிக்கப்பட்ட முதலாயிரத்திலும் அப்படியே. ஆகவே திருப்பல்லாண்டைத் தனி பிரபந்தமாக்கினவர்கள் வெகு ஸமீப காலத்திலேயே ஆக்கினார்கள் என்பது ஸ்பஷ்டம். இவர்களுடைய அஜ்ஞானமும் வீண் ஆக்ரஹமும் முதல் பத்தை ஒன்பது திருமொழிகளே உள்ளதாக நொண்டியாக்கினதிலிருந்தே விளங்குகின்றது. இதற்கு தூஷணம் கூறிய நொண்டி ஸமாதானத்தின் சீர்கேடு பாரிஜாத புஷ்பத்திலேயே நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

ராமனுச நூற்றந்தாதியை நாலாயிரத்திலிருந்து பிரித்தவர்கள் இயற்பாவை மூன்றாவது ஆயிரமாக மாற்றினார்கள். நூற்றந்தாதி திருவாய்மொழிக்குப் பிறகு தனியே நின்றது. ஆனால் தூஷணம் 1956ல் தமிழில் அச்சிட்ட நாலாயிரத்தில் இப்படியே வெளிப்படுத்திவிட்டு 1959ல் அச்சிட்ட தெலுங்கு லிபி வெளியீட்டில் மூன்றுவதான இயற்பா முடிவிலேயே நூற்றந்தாதியை வைத்து

''நாலாயிரதிவ்யப்ரபந்தத்தில் இயற்பா ஆயிரம் முற்றிற்று ''

என்று முடித்திருக்கிறது. இதனால் திவ்யப்ரபந்தத்தை இவர்கள் மனம் போனபடி மாற்றிப் பாழ்படுத்திக்கொண்டிருக்கிறார்கள் என்பது வெளிப்படை. நூற்றந்தாதிக்கு நியதமான இடம் ஒன்று இல்லையா?

இது நாலாயிர ஸ்வரூபம் படுகிற பாடு. இனி அதன் பொருளைப்பற்றிப் பார்ப்போமேயாகில் கிருஷ்ண கிருஷ்ண அது முற்றிலும் விபரீதமாக்கப்பட்டிருக்கிறது. இக்காலத்தில் நமக்குப் பரமஹிதம் ப்ரபத்தி. இது புகலொன்றில்லாவடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே என்று ஸந்தேஹத்திற்கு இடமில்லாமல் கூறப்பட்டிருக்கிறது. ''இது நம் வாயில் வராமலா இருக்கிறது?'' என்று கேட்கிறது தூஷணம். ஸந்தை திருவை சொல்லும் போதும் பாராயணம் ப்ரவசநம் பண்ணும் போதும் வாயில் வருவதைப் பற்றியா ப்ரக்ருதத்தில் கேள்வி. சரணௌ சரணம் ப்ரபத்யே என்றும் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே என்றும் சொல்லப்படுகிற மாநஸவ்யாபாரமான உபாயத்வாத்யவஸாயம்

மோக்ஷத்துக்காக நிகழ்கின்றதா இல்லையா என்பது கேள்வி, உண்டு என்றால் அது உபாயம். அதை அநுஷ்டிக்க வேண்டும் என்றதாயிற்று. இல்லை என்றால் ஹிதபோதகத்வமில்லை அருளிச்செயல்களுக்கு என்றதாகிறது. இது எழுதுகிறது

> எம்பெருமானைப் பற்றுகிறவன் இவன் தானாயிருக்கையாலே ஸ்வீகாரம் ஸ்வகதம் போல் தோன்றினாலும், 'ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ' என்று அவன் தான் சொல்லியிருந்தாலும், விடுவிப்பவனும் பற்றுவிப்பவனும் அவனேயென்பதாக தேசிகன் திருவுள்ளம் தேறிவிட்டபடியால் ஸ்வகதம் போல் மேலெழத் தோற்றுகிற ஸ்வீகாரத்தை உண்மையில் பரகதமென்று தான் இசைந்து தீர வேண்டும். தேசிகனன்றோ இப்படி சதுரச்ரமாக உபபாதித்து விட்டார்.

என்று. தனக்குள்ள அவிவேகம் முழுவதையும் இதில் கொட்டியிருக்கிறது தூஷணம்.

1 எம்பெருமானைப் பற்றுகிறவன் இவன். பற்றுதல்தான் ஸ்வீகாரம். அது இவனிடத்தில் இருக்கிறது. ஆகையால் ஸ்வகதம். இது உண்மை. இப்படியிருக்க "ஸ்வகதம் போல் தோன்றினாலும்" என்பது என், ஸ்வகதமல்லாததா அது? சுக்தியில் ரஜதம் போலவா அது தோன்றுகிறது?

2. பற்றுவிக்கிறவன் அவன், ஸர்வ கார்யங்களுக்கும் காரணமான அவன் இவன் அவனைப் பற்றுவதற்கும் காரணம். இவனுடைய பூர்வ ஸுக்ருதவிசேஷம் ஒன்று பக்வமானவுடன் அதன் பலமாக இவனைத் தன்னைப் பற்றும்படி செய்கிறான். இவனிடத்திலிருக்கும் பற்றுதலுக்கு அவன் நிமித்த காரணம். ஸுக்ருதம் ஸஹகாரி காரணம். பற்றுதல் என்ற கார்யம் இவனிடத்திலுள்ளதேயன்றி காரணமான அவனிடத்தில் போகாது. ஆகையால் இது பரகதமன்று. உபாயமான இந்த ஸ்வகதஸ்வீகாரம் நடந்த பிறகு இவனை நான் விடுவிப்பேன். அதற்கேற்றது செய்வேன், என்று அவன் ஸங்கல்பிக்கிறான். இது தான் அவனிடத்திலுள்ள ஸ்வீகாரம் அதாவது பரகத ஸ்வீகாரம். ஸ்வகதஸ்வீகாரத்திற்குப் பலம் இது. ஸ்வகதஸ்வீகாரமான பற்றுதலே பரகத ஸ்வீகாரமாகாது.

ஒரு மகாராஜா ஒருவரை கவி பாடச்சொல்லி அவர் பாடிய பிறகு அவருக்கு நல்ல பஹுமானம் செய்தால் பாடச் சொன்னதும் பஹுமானம் பண்ணினதும் மஹாராஜாவே ஆகையால் கவி பாடினதும் அவரே என்று சொல்லுவார் உலகத்தில் யாராவது இருப்பார்களா?

3. யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: என்றவிடத்தில் மந்த்ரம் முழுவதையும் பராமர்சித்து அதில் அநுவாத்யம் எது விதேயம் எது என்பதை விவேகிக்க சக்தியிருந்தால் விவேசநம் செய்ய வேணும். உள்ளபடி அது செய்தால், வேதாந்தங்களில் உபாயமாக விதித்த உபாஸநத்திற்கு ஒரு விசேஷத்தை ப்ரதிபாதிக்கிறது அந்த மந்த்ரம் என்ற ஸ்ரீ பாஷ்யாதி ஸ்ரீ ஸூக்திகளின் பொருள் விளங்கும். பரகதஸ்வீகாரத்தை ப்ரதிபாதிப்பது போல் தோன்றினபோதிலும் உண்மையில் ஸ்வகதஸ்வீகாரத்தையேதான் விசேஷிக்கிறது அது, என்பது ஸ்பஷ்டமாகும்.

இப்படி திவ்யப்ரபந்தத்தின் ஸ்வரூபத்தையும் விஷயங்களையும் கெடுக்கும் இவர்களுக்குத்தான் அதில் பூர்ணுதிகாரமாம். ராமாநுச நூற்றந்தாதி இயற்பாவில் சேர்ந்ததா அன்று? சேர்ந்ததானல் தமிழ வெளியீட்டில் திருவாய்மொழிக்குப் பிறகு அதை வைத்தது தவறு. அன்றுகில் தெலுங்கு வெளியீட்டில் அதை இயற்பாவில் சேர்த்தது தவறு. அநுஸந்தானம் பண்ணுகிறவர்களுக்கு இங்குக் கலக்கம் வருமா வராதா. திருச்சந்த விருத்தம் நூற்றிருபத்தாறு பாட்டுள்ளது என்றதனல் ஏதோ ப்ரமாதம் விளைந்து விட்டதென்று கோஷமிடுகிறவர்கள் இங்குத் தகுந்த மறுமொழி கூற வேண்டும். முடியுமா?

சதகார்த்தத்தை தசகார்த்தமாகச் சொன்னவர்கள் பிறரை தூஷிப்பது மானக்கேடு

## 4. ஸ்வீகாரம்

"பரகதஸ்வீகாரந்தான் ரக்ஷகம். (ஸ்வகதஸ்வீகாரமன்று) என்ற தன்பக்ஷத்திற்கு "அஹமேவ தம் வ்ருணே" என்ற கீதா பாஷ்ய ஸ்ரீ ஸூக்தியை ப்ராமணமாகக் காட்டினது வெறும் வஞ்சனை" என்றும் ஸம்ப்ரதாயப்ரதீபத்தில். இது எப்படி வஞ்சனையாகும் என்று கேட்கப்படுகிறது. எப்படியென்பதை விளக்குகிறோம். முதலில் இந்த ஸ்ரீ ஸூக்தி 'அநந்ய சேதா: ஸததம்' என்கிற எட்டாம் அத்யாயச்லோகத்திலுள்ளது என்பதை நாம் ஸ்பஷ்டமாகக் காட்டியிருக்க "அநந்யாச் சிந்தயந்தோ மாம்" என்ற ஒன்பதாம் அத்யாயச்லோகத்திலுள்ளதாக நாம் சொல்வதாக எழுதியிருப்பது ஒரு ப்ரமம். உண்டா, இல்லையா, வெட்கப்படாமல் ஸ்பஷ்டமாய் எல்லோருமறிய ஸாதிக்க வேண்டும். ப்ரம ப்ரமாதங்கள் எப்போதும் எவ்விடத்திலும் உண்டாகாதபடி எந்த தெய்வமாவது வரம் கொடுத்திருக்கிறதா? அநந்யாச் சிந்தயந்த: என்று பஹுவசநம் அந்த ச்லோகத்தில் இருக்கிறது. ய: ஸ்மரதி

தஸ்ய என்று ஏகவசநம் பாஷ்யத்திலிருக்கிறது இந்த அநுபபத்தி புத்தியில் படவில்லையே இதை எல்லாம் காணும் பிறர் யாவரும் "ஆஹா என்ன ஸாதிக்கிறார் ஸ்வாமி" என்று ஸ்துதி பாட வேணுமா. திருச்சந்த விருத்தம் 126 பாட்டு என்றதற்குக் குறைந்த தவறு இது. அல்லது தவறே அன்று.

நிற்க தத்வியோகம் அஸஹமாந : அஹமேவ தம் வ்ருணே என்பது ச்லோகத்தில் ஸுலப: என்ற பதத்திலுள்ள ஸு என்பதன் கருத்து விளக்கம். இக்கருத்து ச்ருதியின் கருத்தே என்பதை ஸூசநம் பண்ணுவதற்காக ' அஹமேவ தம் வ்ருணே ' என்றார். இதன் அர்த்தத்தை உடனே விளக்கினார்— "என்னை அடைவதற்கு உபாயமானஉபாஸநம் பரிபக்வமாவதையும் அதற்கு விரோதியான பாவங்களின் நிவ்ருத்தியையும் என்னிடத்தில் மிகுந்த ப்ரீதியையும் நான் உண்டாக்குகிறேன் என்று அர்த்தம்" என்று, இப்படி இங்கு உபாஸநமாகிற உபாயத்தை அநுஷ்டிக்கிறவனுக்கு அதை நிறைவேற்றி வைக்கிறேன என்று அஹமேவ தம் வ்ருணே என்பதற்கு அர்த்தமே தவிர உபாயமில்லாமலே ஒருவனை என்னிடம் சேர்த்துக் கொள்ளுகிறேன் என்று அர்த்தமில்லை.

இப்படி இல்லாத அர்த்தத்தை இருப்பதாக வைத்துப் பேசுவது வஞ்சனையல்லாமல் வேறு என்ன. உள்ள அர்த்தத்தை க்ரஹிக்காமல் இப்படிப் பேசினதேயன்றி வஞ்சனை யில்லையென்னில் அஜ்ஞானத்தையாவது இசையவேணும். பாஷ்யகாரர் உதக்ஷரமாக ஒன்றும் ஸாதிக்கவில்லை. ஸுலப: என்ற பதத்தின் கருத்தை விளக்கினார் என்று முன்னமே சொன்னோம்.

அத்ர வரணசப்தேந கிமுச்யதே என்றாரம்பித்து தேசிகன் அருளியிருக்கும் அவதாரிகையை ஊன்றி ஸேவிநதால் வரண பதார்த்தம் இன்னதென்று நன்கு விளங்கும். இந்த அர்த்தத்தில் அதிவாத சங்காவாரணத்தை ஸ்வாமி ஸாதித்தாரேயன்றி மற்றொன்றில், அதாவது உபாயமில்லாமலே மோக்ஷம் கிடைக்கும், என்பதில் அன்று.

இங்கு ஸாரம்

"இவன் தான் உபாயாநுஷ்டானம் பண்ணிற்றும்",

"அவன் காட்டின உபாயத்தை அவன் துணை செய்ய அநுஷ்டித்து"

"உபாயபூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜ மாத்ரத்தை"

என்று தேசிக ஸ்ரீ ஸூக்திகளில் எங்கும் ஸ்வகதஸ்வீகாரம் சொல்லப் பட்டே இருக்கிறது. இது இல்லாமல் பரகதஸ்வீகாரம் உண்டா காது, அவன் இதற்கு காரணமானாலும் பலப்ரதனானாலும் இந்த ஸ்வகதஸ்வீகாரம் பரகதஸ்வீகாரமாகாது. ஸ்வகதஸ்வீகாரம் உபாயாநுஷ்டானம். அநுஷ்டிக்கப்படும் இந்த உபாயத்தை பல பர்யந்தமாக நிறைவேற்றி வைப்பது பரகதஸ்வீகாரம். இதனால் பலம் உண்டாகிறது. ஆகவே தேசிக ஸ்ரீ ஸூக்திகளில் பிறர் சொல் லும் பரகதஸ்வீகாரத்திற்கு ஸாதகம் காண்பது, ஸ்ரீ பாஷ்யத்தில் அத்வைத ஸித்தாந்த ஸாதகம் காண்பதும் ஸூர்யரதத்தில் இருட்டைக் காண்பதும் போன்றது.

இது எழுதுகிறது :-

அப்பெருமான் தன்னுடைய பொருளான நம்மைத்தேடுகிறான். தேடிப் பிடிக்கிறான். பிடித்து அநுபவிக்கிறான். அநுபவித்து மகிழ்கிறான். மகிழ்ந்து தன்னை மறக்கிறான் தேடியும் கிடைக் காத காலத்திலே கதறியழுகிறான். அழுகைக்குப் பரிஹாரம் நேர்ந்த போது மதுவனம் புக்க வானர முதலிகள் போலே துள்ளுகிறான்.

என்று. ஆனால் இதன் கருத்து மட்டும் இதற்குத் தெரியாது. ஏன் தேடுகிறான். நாம் தான் அநாதியாக அவனை விட்டுப் பிரியாமல் இருக்கின்றோமே. அவனுக்குக் கண்ணில்லையா பார்ப்பதற்கு. எண்ணற்ற ஆத்மாக்களிலே தன்னைத் தேடுகின்ற ஆத்மா துர்லப மாகையாலே அப்படிப்பட்ட ஆத்மா ஒன்று கிடைக்குமா என்று தேடுகின்றான். தேடிக்கிடைத்து விட்டால் பிடிக்கிறான். மற்றும் பல செய்கிறான். தன்னைத் தேடுகின்றவன் கிடைக்காத காலத்திலே அழுகிறான். பரமசாஸ்த்ரார்த்தம் இங்குள்ளது இதில் யாருக்கு என்ன விப்ரதிபத்தி ? இப்படிச் சொல்லிக் கொண்டே பகவத்ப்ர ஸாதத்திற்காக நாம் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை என்பது ஆச்சர்யம்,

## 5. பூர்ணத்வம்

வாதங்களில் பராஜயப்ரஸங்கம் வரும்போது பிறரிடமிருந்து வாங்கிய ப்ரசம்ஸாபத்ரங்களை தூஷணம் வெளியிடுவது வழக்கம்.. அவற்றில் ஒன்றை வெளியிட்டு இப்போது அதிலுள்ள

"இம்மாதிரியான ஆக்ஷேபங்களுக்கு, எம்பெருமானுக்கு அற் புதமான சக்தி உண்டாகையால் இவை பரஸ்பர விருத்தமாக இருந்தாலும் அவன் விஷயத்தில் அது இயலும் என்று ஸமா தானத்தை சாஸ்த்ரங்களே கூறுகின்றன.''

என்ற இந்த வரிகளை தன் பக்ஷத்திற்கு பரமப்ரமாணமாகப் படிக்கிறது. அந்த ஸமாதானத்தை சாஸ்த்ரங்கள் கூறவில்லை. "நைகஸ்மிந் அஸம்பவாத்" என்று அதைக் கண்டித்திருக்கின்றன சாஸ்த்ரங்கள். பாஷ்யகாரர் ஜாதியை ஒப்புக் கொள்ளுகிறவர்கள் அதற்கு எப்படி ப்ரதிவ்யக்தி பூர்ணத்வம் சொல்லுகிறார்களோ அப்படி பரப்ரஹ்மத்திற்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வம் என்றார். ஜாதி தன்னுடைய அற்புத சக்தியினால் ப்ரதிவ்யக்தி பூர்ணமாயிருக்கிறதென்று அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. நம்முடைய ஸர்வசக்தி என்ற க்ரந்தத்தில் விரிவாக நிரூபித்தபடி ஒவ்வொரு வ்யக்தியிலும் இதர வ்யக்தியை அபேக்ஷிக்காமல் இருப்பதும் தோன்றுவதுமே ஜாதிக்கு ப்ரதிவ்யக்தி பூர்ணத்வம். அதேபோல் ஒவ்வொரு வஸ்துவிலும் இதர வஸ்துவின் அபேக்ஷையில்லாமல் இருப்பதும் தோன்றுவதுமே பரப்ரஹ்மத்திற்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வம். இங்கு அற்புத சக்தி ஒன்று வேண்டியதில்லை. விருத்தஸமுச்சயம் ராமாநுஜ ஸித்தாந்தமன்று.

விரிவு நம்முடைய ஸஜ்ஜநாராதனம் முதல் பாகம் 81–87 பக்கங்களில் காணலாம்.

## 6. பூயிஷ்டாம்தே

ஸஜ்ஜநாராதனம் இரண்டாம் பாகத்தில் ப்ரதிப்ரச்நம் என்ற தலைப்பின் கீழ் பகவத் விஷய வ்யாக்யாநங்களிலுள்ளவை முதலான பதினொரு விஷயங்களைப்பற்றி கேள்விகள் கேட்டிருந்தோம். அவற்றில் ஒன்றுக்கும் பதில் சொல்ல முடியாது இது வரையில் சொல்லவில்லை. அவற்றில் ஒன்று " ஆளவந்தார் அருளிச் செய்ததாக அவற்றில் உதாஹரிக்கப்பட்ட ஸ்வாபாவிகாநவதிகாதிசயாஸங்க்யேய கல்யாணகுணகண: என்ற இது ஆளவந்தாருடைய எந்த க்ரந்தத்தில இருக்கிறது" என்பது. எந்த க்ரந்தத்திலும் இல்லை என்று தான் இங்கே பதில் கூறவேண்டும். இப்போது உபநிஷத்பாஷ்யகாரரை மிகவும் ப்ரசம்ஸித்து அவர் தம்முடைய திருவாய்மொழி ஸம்ஸ்கிருதவ்யாக்யாநத்தில் முன் வ்யாக்யநங்களில் போலவே சொல்லியிருப்பதை எடுத்துக் காட்டியதாகக் கூறுகின்றது இதனால் கேள்விக்கு ஸமாதானம் வந்துவிட்டதா?

இப்படியே 'பூயிஷ்டாம்தே' என்கிறவிடத்திலும் நாம் சொல்வதற்கு "பூர்வ வ்யாக்யாநங்களில் கூறப்பட்ட இதன் அர்த்தத்தை ஸாக்ஷாத் ஸ்வாமியும் ஸாதித்திருக்கிறார்" என்பது ஸமாதாநமாகாது. பூர்வ வ்யாக்யாநத்திலுள்ளதை இவர்கள் அநுவதித்திருக்

கிறார்கள். என்ன அபிப்பிராயத்தினால் அநுவதித்திருக்கிறார்கள், என்பதை நாம் நிஷ்கர்ஷிக்க வேணும். "இப்படியும் சிலர் சொல்லுகிறார்கள். அதை யதோசிதம் விமர்சித்து யுக்தமானால் பரிக்ரஹிப்பது. இல்லாவிட்டால் விட்டுவிடுவது" என்பது தான் அபிப்ராயம். அநுபபத்தி தோன்றுமிடங்களில் "பரமத மூலம் வா" என்று நிர்வாஹம் செய்கிறார்கள். இது சாஸ்த்ர காரர்களுடைய வழி.

'பூமிஷ்டாம் தே' விரிவு ஸஜ்ஜநாராதனம் முதல் பாகம் 50-54ல்

## 7. ரகுவம்சம்

அடிக்கடி 'ரகுவம்சம் ஒரு உபயோகமற்ற காவ்யம்.' ஸம்ஸ்க்ருதத்தில் அரிச்சுவடியோ அதற்கும் தாழ்ந்ததோ என்று தோன்றும்படி இது எழுதுகிறது. இது ஒன்றே போதும் இதற்கு பிறர் சொன்னதை உள்ளபடியேயோ விபரீதமாகவேயோ-அநேகமாக இப்படித்தான்-சொல்லத் தெரியுமே தவிர தானே இது ரஸ்யம் இது ரஸமில்லாதது என்று அறிய சக்தியில்லை என்பதைக் காட்ட. ரகுவம்சம் ராமாயணத்திலுள்ள பலஸூக்ஷ்மார்த்தங்களை வெளியிடுகிறது. குமாரிலர் சங்கரர் முதல் கொண்டு ஸகல சாஸ்த்ர காரர்களும் அதிகரித்து ரஸித்துக் கொண்டாடின மஹாகாவ்யம் இது. ஸர்வ சாஸ்த்ரார்த்தஸாரங்களையும் விசேஷித்து வேதாந்த தத்த்வங்களையும் அடக்கிக் கொண்டிருக்கின்றது. இந்த காவ்யத்திற்கு மல்லிநாதன் செய்த வ்யாக்யானத்தில் உள்ள ஒரு வாக்யத்துணுக்குக்கு அர்த்தம் புரியாமல் வெகுநாள் சண்டையிட்டு கடைசியில் நாம் இன்னது சொல்லுகிறோம் என்று புத்தியில் பட்ட பிறகு காகதந்தபரீக்ஷை போன்ற இதனால் என்ன ப்ரயோஜனம் என்று சொல்லி ஓய்ந்தது.

"ஸர்வாவஸ்தஸக்ருத்ப்ரபந்ந" என்ற தேசிகன் ஸ்ரீ ஸூக்தியில் ஸர்வாவஸ்த என்றது தவறு. 'ஸர்வாவஸ்தாம் கதோபி வா' என்ற வைதிகர் ச்லோகத்தையநுஸரித்து ப்ரயோகிக்கப்பட்டது என்று இது ஆர்ப்பாட்டம் செய்தது. பிறகு ஸ்ரீபாஷ்யத்திலும் கீதாபாஷ்யத்திலும் உள்ள ப்ரயோகம் இது என்று எடுத்துக் காட்டினோம். இதற்குமேல் ஏதாவது சொன்னால் பாஷ்யகாரருக்கு வசவாகுமே என்று பயந்து ஓய்ந்து நின்றது. இல்லாவிட்டால் இன்னும் அதைச் சொல்லிக்கொண்டே இருக்கும்.

## 8. மிகுந்த வருத்தம்

"அவலீலையாக எதையும் பேசிவரும் பரம நீச ப்ரக்ருதிக்கு தன்னைப்பற்றிச் சிறிது சிந்திக்கும்படியான மனோநிலையை

உண்டாக்க வேறு வழியில்லாமையால் நாமும் உண்மையில் விருப்பமில்லாமலே மிகுந்த வருத்தத்துடன் உபதேசரத்ந மாலையிலுள்ள சில குற்றங்களைக் கூறுகின்றோம்"

என்று ஆரம்பித்து பாரிஜாத புஷ்பத்தில் அதிலுள்ள பல குற்றங்களைக்காட்டியிருக்கிறோம். இங்கு பிறர் நூலில் நாம் குற்றம்கூறுவது தகாது. அநுசிதம். ஆகிலும் வேறு வழியில்லாமல் நிர்ப்பந்தமாய்க்கூற வேண்டியிருக்கிறதே என்று நம் வருத்தத்தை தெரிவித்தோம். இதை இது கோணலாக எடுத்துக் கூறுகிறது.

"அது கட்டத் தொடங்கும்போது "மிகுந்த வருத்தத்துடன் சில குற்றங்களைக் கூறுகிறோம்." எனகிறார். உடனே லகுடப்ரஹாரம (தடியடி) கிடைக்கும்—கிடைத்தே தீருமென்று தெரிந்தே மிகுந்த வருத்தத்துடன் என்கிறார் பாவம்

என்று இதன் ஏச்சுக்கோ திட்டுக்கோ சிறிதும் பயப்படாமல் அவற்றால் உத்ஸாஹம் சிறிதும் குன்றாமல் அவச்யம் செய்ய வேண்டிய ஆசார்ய ஸ்ரீஸூக்திரக்ஷணகைங்கர்யத்தை நீண்டகாலமாக செய்து வருகிறோம். இனியும் செய்து வருவோம். நாம் ஒன்று எழுதினால் இது வேறொன்றாக எடுத்துக்காட்டுவதும் ஸம்பந்தமில்லாமல் ஏதாவது எழுதுவதும் இதன் ஸ்வபாவம் என்று காட்ட இதைச் சொன்னோம். இனி நமக்கு லகுடப்ரஹாரம் கிடைக்கிறதா என்று பார்த்தால் நாம் கூறிய 10, 12 குற்றங்களில் ஒன்றுக்கு "எல்லா பதிப்புகளிலும்" "நாள்கடமை"—"நாள்கள் தமை" என்று தானிருக்கிறது என்று ஓர் அழுகை அழுகிறது. இதன் கருத்து "தவறுதான் பாடத்தை நான் வெளியிடும் புஸ்தகங்களில் மாற்றிக் கொள்கிறேன்" என்பது.

மற்றொன்றுக்கு "இங்கு தோஷலேசமுமில்லை. தேசிக மங்களத்தில் யஸ்மாதேவ மயா ஸர்வம் சாஸ்த்ரமக்ராஹி நாந்யத: என்றதில்தான் இந்த தோஷம் துஷ்பரிஹரம்" என்று தெளிவில்லாமலே பேசுகிறது. இனி மற்ற குற்றங்களைப் பற்றி என்ன? மௌநந்தானே. இது ஸர்வத்ர இருந்தால் ஆத்மா கடைத்தேறுமே.

## 9. பரிபவம்

பரிபவம் என்று அடிக்கடி பேசுகிறது தூஷணம். ஏதோ ஒரு வித பகவத்க்ருபையினாலும் ஆசார்யாநுக்ரஹத்தாலும் பாகவத கடாக்ஷங்களாலும் " அதீதம் அத்யாபிதம் ஆர்ஜிதம் யச: " என்ற நிலையில் இருந்து வருகிறோம். இதன் துர்பாஷணங்களால் நமக்கு ஹாநி ஒன்றுமில்லை. "மனக்குற்ற மாந்தர் பழிக்கில் புகழ்."

இனி தூஷணத்தின் ஸ்வரூபத்தைப் பற்றிப் பார்ப்போம். எந்த சாஸ்திரத்திலும் சிறிதும் பரிசயமில்லை. பால்யத்தில் ஒன்று இரண்டு இடத்தில் போய் வாசிக்க ஆரம்பித்து ஒன்றும் மனஸில் படுவதில்லையாகையால் வாசிக்காமலே நின்று விட்டது- ஸ்ரீபாஷ்யத்தைக் கையாலேயே தொட்டதில்லை. திவ்யப்பிரபந்தங்களையும் ஸ்தோத்திரங்களையும் சிறு வயதிலேயே சொல்லி வைத்துவிட்டார்களாகையால் அவைதான் மூலச்சரக்கு. அப்போது முதலே சண்டைக்கு ஆரம்பமாகையால் வித்வான்கள் சொல்லும் சில விஷயங்களை அவ்வப்போது அரைகுறையாகவும் கோணலாகவும் தெரிந்துகொண்டு அபத்தச்சுவடிகளை ஓயாமல் எழுதிக்கொண்டிருக்கிறது. ஒவ்வொரு சுவடியிலும் இந்த அட்டை முதல் அந்த அட்டை வரையில் அபத்த விஷயங்களே நிறைந்திருக்கும் ஒருவருடைய வாக்கு அப்ரமாணமாவதற்கு அவருடைய குற்றமே காரணம். அந்தக் குற்றம் நான்கு வகைப்பட்டது என்று சாஸ்த்ரகாரர்கள் நிர்ணயித்திருக்கிறார்கள். அறியாமை, கவனக் குறைவு, அசக்தி, வஞ்சனைக்கருத்து என்றவை அக்குற்றங்கள். இவையெல்லாம் ஒருங்கே இதனிடத்தில் இருக்கின்றன. ஆகையால் ஒவ்வொரு சுவடியும் முற்றிலும் அபத்தமானது.

எண்ணூற்றுக்கு மேல்பட்ட நூல்களை எழுதியதாகப் பெருமை கொள்கிறது. விஷயங்கள் அபத்தமாயிருப்பதன்றி ஒவ்வொரு சுவடியிலும் குறைந்தது நூறு ப்ரஹ்மவிதபசாரம் அல்லது ப்ரஹ்ம ஹத்யாபாவம் இருக்குமாதலின் எண்பதாயிரம் பெரும் பாவம் செய்திருக்கிறது இது என்று இதனால் தெரிந்து கொள்ளலாம்.

வேதவிசாரத்திற்காக மன்னார்குடியில் கூடினஸபையில் பெரிய வித்வான்கள் வருகிறார்கள் என்பதை அறிந்து விஷயங்களை எல்லாம் எழுதி அனுப்புகிறேன் என்று சொல்லிக் கொண்டு ஓடி வந்து விட்டது.

'அத்ய மே மரணம் வாபி' என்ற ராமாயணச்லோக சர்ச்சையில், க்ரந்தமானால் எதையாவது எழுதிக்கொண்டிருக்கிறது. ஸபையில் நேராக வாதம் செய்துதான் நிர்ணயம் செய்யவேணு மென்று ஸ்ரீபெரும்பூதூரிலிருந்த வித்வான் ஆஸூரி சின்ன ராமானுஜாசாரியர் ஸ்வாமி கூட்டின ஸபையில் அவர் கையைப் பிடித்திழுத்தும் திமிரிக் கொண்டு ஓடிவந்து விட்டது.

ச்ருங்கேரி சங்கரா சார்யர் அத்யக்ஷராயிருந்து திருமலையில், நடந்த வித்வத் ஸபையில் தர்க்க சாஸ்த்ரத்தில் வ்யாப்தியைப் பற்றி விசாரம் நடக்கும் போது இது நடுவில் ஒரு வார்த்தை,

சொல்லிற்று. இதைக்கேட்டவுடனேயே இதற்கும் சாஸ்த்ரத்திற்கும் வெகு தூரம் என்றறிந்த அத்யக்ஷர் படித்தவர்கள் பேசட்டுமே என்று சொல்லி இதன் வாயை மூடச் செய்தார்.

மன்னார்குடியில் உபன்யாஸம் செய்யும்போது இது ஸ்ரீபாஷ்யத்தில் ஷட்கபேதவத் அத்யாயபேதவச்ச என்றிருப்பதை ப்ரஸ்தாவித்து "கீதையில் மூன்று ஷட்கம் இருப்பதால் அங்கு ஷட்கபேதம் எப்படியோ அப்படி" என்று விவரணம் செய்தது. ஸ்ரீபாஷ்யாதிகாரிகள் கேட்டு பரமாநந்த மடைந்தார்கள். ஸ்ரீபாஷ்ய ஆரம்பத்திலேயே உள்ள இந்த இடத்தில் இப்படி வ்யாக்யாநம் பண்ணின இது, ஸ்ரீபாஷ்ய விஷயங்களைப் பற்றிப் பேச, விசாரிக்க எவ்வளவு யோக்யதை பெற்றிருக்கிறது என்பதை எளிதில் அறியலாம்.

நம்மாழ்வார் ஸ்ரீஸூக்தி தெரியாதாகையால் சங்கரருக்கு உபநிஷதர்த்தம் ஸரியாக விளங்க வில்லை யென்று இது சொல்லிற்று. உடனே ஒரு அத்வைதி சங்கரர் அதைப் பார்த்துத் தான் உபயோகமில்லை என்று தள்ளி விட்டார் என்றார். அதற்கு மேல் ஒன்றும் சொல்லமுடியாமல் இது விழித்தது.

ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத: என்ற கீதாச்லோகத்தில் தத்வத: என்பதற்கு ஸரியான அந்வயம் சங்கரர் காட்டவில்லை. ராமாநுஜன் காட்டியிருக்கிறார் என்று சொல்லிற்று. மறு நாள் காலையில் அந்த அத்வைதி புஸ்தகத்தை எடுத்து இரண்டு பாஷ்யத்தையும் பார்த்தார். "தத்வதோ யோ வேத்தி" என்று அந்வயப்படி பதங்கள் ராமாநுஜ பாஷ்யத்தில் இருக்கின்றன, அந்வயக்ரமமில்லாமல் ச்லோகத்தில் இருக்கும் க்ரமத்திலேயே பதங்களுக்கு அர்த்தம் சொல்லியிருக்கிறார் சங்கரர்—

ஏவம் யதோக்தம் ய: வேத்தி தத்வத: தத்வேந யதாவத்

என்று. இவருக்கும் அந்வயக்ரமம் தத்வதோ வேத்தி என்பது தான். ஆனால் இங்கு தத்வத: என்றதற்குப்பிறகு முற்றுக் கோடு இல்லை. அதனால் தத்வத: என்பதை மேல் உள்ள த்யக்த்வா என்பதோடு சங்கரர் அந்வயித்திருக்கிறார் என்று க்ரஹித்து இது குற்றம் கூறிற்று என்பது தெரிந்தது. உடனே ஸபாப்ரவர்த்தகரிடம் போய் புஸ்தகத்தைக் காட்டி இப்படிப்பட்டவர்களை யெல்லாம் நீங்கள்ஏன் ஸபைக்கு அழைக்க வேண்டுமென்று குறை கூறினார் அந்த அத்வைதி.

## 10. ரஹஸ்யத்ரயஸாரம்

கேட்ட கேள்விக்கு ஸமாதானம் சொல்ல முடியாமல், புதிதாகப் பிடித்துக் கூட்டில் அடைக்கப்பட்ட துஷ்ட ம்ருகம் போல் பதறி, "ரஹஸ்யத்ரயஸாரத்தைப் பற்றி ஒன்றும் சொல்லாமல் வசநபூஷணத்தை மட்டும் உபதேசரத்னமாலையில் புகழ்ந்திருப்பதில் நாம் பொறாமை கொண்டு நிந்திக்கிறோமென்று இல்லாத விஷயத்தைச் சொல்லி ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு ஒரு ப்ரஸக்தியை உண்டாக்கிக் கொண்டு "முன்னோர் மொழிந்த ....மூர்க்கராவார் என்ற பாட்டிலுள்ள ஸம்பாவனை அதற்கு" என்கிறது தூஷணம். பாஷ்யகாரர் வரையிலுள்ள முன்னோர் மொழிந்த முறையை மாற்றி பக்தி ப்ரபத்திகள் உபாயமல்ல என்று தம் நெஞ்சில் தோன்றியதைச் சொன்னவர்கள் யார்? முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு பின்னோர்ந்து 'தாமதனைப் பேசிய பரமாசார்யரின் க்ருதியன்றோ ரஹஸ்யத்ரயஸாரம்.

## 11. பாடசோதனம்

புதரஞ்ஜனி என்ற புதிய வ்யாக்யாநத்துடன் நாம் வெளியிட்ட குவலயாநந்தத்தில் ஓரிடத்தில் மந்ததாப: என்று பாடம் இருந்தது. இங்கு 'மந்ததாத:' என்ற பாடத்தை ப்ராஜ்ஞர்கள் ஆதரிக்கிறார்கள் என்று நாம் எழுதினோம். இதைப்பார்த்த தூஷணம் இந்த ப்ராஜ்ஞர்கள் நாம்தான். நாம் சொல்லித்தான் உத்யான பத்ரிகாகாரர் எல்லாம் தெரிந்து கொள்கிறார் என்று எழுதிற்று. தத்த்வம் என்னவெனில் 1928ல் உத்யானபத்ரிகையின் முதல் வருஷத்து ஸஞ்சிகைகளில் குவலயாநந்தத்தில் உள்ள பல பாடங்களுக்கு சோதனம் வெளியிட்டிருந்தோம். அவற்றில் இரண்டு சோதனங்களை இது தானே கண்டுபிடித்து செய்தது போல் தன் சுவடி ஒன்றில் வெளியிட்டது. இதை நாம் பார்த்தும் பாராதது போல் பேசாமல் இருந்தோம். அதனால் தானே இந்த சோதனங்கள் செய்தது என்றும் நாம் அதைப் பின்பற்றி செய்தோம் என்றும் உலகத்திற்குக் காட்ட கீழ்க்கண்டவாறு கோஷம் செய்தது. இந்த வஞ்சனையை 1948 மார்ச்சு-ஏப்ரல் ஸஞ்சிகையில் வெளிப்படுத்தியிருக்கிறோம்.

## 12. கோதா

"கோதார்த்தோக்ஷாவமர்தே' என்ற தேசிகனுடைய த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி ஸ்ரீ ஸூக்தியில் தோஷம் கூறிற்று தூஷணம். இதற்கு ஸமாதானம் கோதை போலும்

(1946) என்ற நம் நூலில் சொன்னோம். இதற்கு விமர்சம் செய்யப்புகுந்த தூஷணம்.

' ஸாமாந்ய சப்தங்களையிட்டு விசேஷ வ்யக்தியைப் பெறுவிக்கும் முறை தமிழில் மாத்திரமே உள்ளதென்றும், ஸம்ஸ்கிருதத்தில் கிடையவே கிடையாதென்று ...... விளக்கியுள்ளோம். **இந்த ப்ரதிஜ்ஞையில் நாம் தோல்வியடைந்தோமாகில் இந்த வாதத்தில் கை கூப்பி நிற்கக் கடமைப்பட்டேயிருக்கின்றோம**

என்றது. இந்தப்ரதிஜ்ஞை அர்த்தமற்றது என்பதை யாவரும் எளிதில் அறியலாம். பசு வருகிறது என்றபோது பசு என்ற பொதுப் பெயரால் குறிப்பிட விரும்பிய ஒரு பசுவையே குறிப்பது போல் **கௌ : ஆகச்சதி** என்று கௌ : என்ற பொதுப் பெயரால் ஒரு வ்யக்தியே குறிக்கப்படுகிறது, என்பதில் எவருக்கும் எவ்வித ஆக்ஷேபமும் இருக்காது. இதைப் பலபடியாக

(1951 மே-ஜூன் ஸஞ்சிகைமுதல் 1952 மே-ஆகஸ்ட் ஸஞ்சிகை வரை)

விளங்க வைத்தோம். ஆகிலும் கைகூப்பி நிற்காததோடு நாம் செய்த நிரூபணங்களை யெல்லாம் ப்ரஸ்தாவிக்காமல் ' கோதார்த் தோக்ஷாவமர்தே'' என்ற தேசிகன் ஸூக்தி ஸாவத்யம் என்று இன்னும் எழுதி வெளியிடுகிறது.

மோக்ஷத்திற்காக நாம் பகவானிடத்தில் எதுவும் செய்ய வேண்டியதில்லை. நாம் செய்யும் அக்ரமங்கள் எல்லாம் அவனுக்கு போக்யமே என்ற ஸித்தாந்தத்தைப் பற்றினவர்களாகையால் எதற்கும் அஞ்சாமல் கூசாமல் எதையும் செய்ய பேச எழுத முற்படுவது ஸஹஜமாயிருக்கிறது.

## 13. காரகம்

ஏழு விபக்திகளில் ஷஷ்டீ தவிர மற்ற ஆறு விபக்திகளின் அர்த்தம காரகம் எனப்படும். காரகே என்ற அதிகார ஸூத்ரத்தின் கீழ் விதிக்கப்பட்டவையாகையால். சேஷே ஷஷ்டீ என்று காரகமல்லாத வேறு அர்த்தத்தில் விதிக்கப்பட்டபடியால் ஷஷ்டீ காரகத்தை சொல்லாது. இதை அறியாத இது ஷஷ்டியும் ஒரு காரகந்தானே என்றது அன்று என்று தெளிவு படுத்தினோம்.

**ததிதராவ்ருத்தித்வே ஸதி ததேகவ்ருத்தித்வம்** தந்மாத்ர வ்ருத்தித்வம் என்று ஒரு பரிஷ்காரம் செய்தது. ஸத்யந்தம் தனியே

இருக்கிறபடியால் ஏக சப்தமில்லாமல் தத்வ்ருத்தித்வம் என்றதே பர்யாப்தம் என்று உணர்த்திஞெம்.

## 14. உபலக்ஷணம் விசேஷணம்

''இங்கே உபலக்ஷணத்வமாவது என்ன? விசேஷணத்வமாவது என்ன? என்பதைச் சிறிது விசாரிப்போம்'' என்று ஆரம்பித்து இது எழுதுகிறது: (சாஸ்த்ரார்த்த சந்திரிகை 5-2-52)

க்ரியாந்வயித்வே ஸதி வ்யாவர்த்தகத்வம் உபலக்ஷணத்வம்:
க்ரியாநந்வயித்வே ஸதி வ்யாவர்த்தகத்தவம் விசேஷணத்வம்

என்று. இது நேர் விபரீதம். முதலில் சொன்னது விசேஷணத்வம் இரண்டாவது உபலக்ஷணத்வம்.

இதற்குமேல் எழுதுகிறது

என்று சிலர் சொல்லுவர். இப்படி லக்ஷணசிக்ஷை பண்ணி யிருப்பதை நாம் சாஸ்த்ரங்களில் காண்கின்றிலோம்

என்று. எல்லா சாஸ்த்ரங்களிலும் இது காண்கின்றது. ஆநந்தம யாதிகரணத்தில் நம் ஸ்ரீபாஷ்யத்திலேயே காணலாம்.

## 15. ஸ்ரீ பாஷ்ய வைதுஷ்யம்

வ்யாக்யாநம் சடகோப திவ்ய வசஸாம் யத் தாக்ஷிணுத்யை:
க்ருதம் ஸ்ரீ பாஷ்யாதி விருத்தமேவ ததிதி க்யாதம்

என்ருர் ஸ்ரீபரகாலஸ்வாமி. ஜகத்வ்யாபாரவர்ஜாதிகரணத்திற்கு விருத்தமாக ''முக்தர்கள் ஜகத் வ்யாபாரங்களில் சக்தராகிலும் உதாஸீநராயிருப்பர்'' என்று ஸ்தோத்ரரத்ந வ்யாக்யாநத்தில் பிறர் சொல்லியிருப்பது இப்போது ஸர்வப்ரஸித்தமாயிருக்கிறது. ப்ரஹ்மஸூத்ரம் ஸாதநாத்யாயத்தில் நிரூபிக்கப்பட்ட பக்தி உபா யத்வத்திற்கு விருத்தமாக ''ஸ்வஸ்வாதந்த்ர்ய பயத்தால் பக்தி நழுவிற்று'' என்று லோகாசார்யர் சொல்லியிருப்பதும் ப்ரஸித் தம். மாமுநி ஸூத்ரார்த்தத்தையே மாற்றியிருக்கிருர் என்பது பராயத்தத்தில் சொல்லப்பட்டது. ''ஜகத்ரூப கார்யோத்பத்தி யில் ஈச்வரனே த்ரிவித காரணமுமாயிருக்கும்'' என்று தத்வத்ரயம் 165 லும், ''ஆகையிறே வேதாந்தஸூத்ரத்திலும் இது-ஸஹகாரி காரணத்வம்—விசேஷித்துச் சொல்லா தொழிந்தது'' என்று 170 லும் இவர் சொன்னது ஸூத்ரஸ்ரீபாஷ்ய விருத்தம். பரம் ப்ரஹ்ம ஸஹகாரி நிரபேக்ஷமாகவே ஜகத்ஸ்ருஷ்டிக்குக் காரணம், என்

ருன்றே உபஸம்ஹாரதர்சநாதிகரணத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. ஜ்ஞாந சக்த்யாதிகள் ஸஹகாரிகாரணமாறல் 'க்ஷீரவத்ஹி' என்ற த்ருஷ்டாந்தமும் அதனுல் ஸித்திக்கிற ஸஹகாரிகாரண நிரபேக்ஷத்வமும் ஸங்கதமாகமாட்டா.

ஸ்வகதஸ்வீகாரமான உபாஸநம் பக்திரூபம் என்பதற்கு ப்ரமாணமாக ஸ்ரீபாஷ்யாதிகளில் உதாஹரித்து விவரணம் செய்யப்பட்ட நாயமாத்மா மந்த்ரத்தை பரகதஸ்வீகார ப்ரமாணமாகக் காட்டியிருப்பதும் விருத்தம். இப்படி இவர்களுடைய க்ரந்தங்களில் விரோதம் ஸ்பஷ்டமாயிருப்பதால் ''இம்மூவரும் ஸ்ரீ பாஷ்ய ஸாகரபாரங்கதர்களாகையாலே இவர்களுடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் ஸ்ரீ பாஷ்யவிரோத லேசமும் காட்ட முடியாது'' என்றது உண்மையன்று. அபிமாந மூலமான மித்யாவாதம்.

## 16 விட்டுணு

> மற்ற விடங்களில் விட்டுசித்தன் என்றே இருந்த போதிலும் நாவகாரியத்தில் மட்டும் ''விட்டுணு சித்தன்'' என்று காண்கிறது''

என்றும் ப்ரபந்தஸாரவைபவத்தில். அதற்கு மறுப்பு

> திவ்ய ப்ரபந்தங்களுக்கு அபத்தப் பதிப்புகளும் சில உண்டு. அவற்றிலும் காணக்கிடைக்காத அபத்தமன்றே இவர் காட்டும் விட்டுணு...... ஒரு ஸபையைத் தானே கூட்டி அந்தஸபையில் நாவகாரிய நிகமநப் பாசுரத்தில் விட்டுணுசித்தன் என்றிருப்பதைக் காட்டி அங்குச் சேரும் மஹான்களேயாவது உகப்பிக்கட்டும். அதற்கு வழி ஏது

என்று எழுதப்பட்டிருக்கிறது. 1929ல் தமிழ்ப்பண்டிதர் T. C பார்த்தஸாரதி அய்யங்காரால் பரிசோதிக்கப்பட்டு சென்னை பூமகள்விலாஸ அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டதும், A. இரங்கசாமி முதலியார் & ஸன்ஸ் அவர்களால் ப்ரசுரிக்கப்பட்டதுமான நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் ''விட்டுணு'' என்றே பாடம். இப்படியே பல பண்டிதர்களால் பரிசோதிக்கப்பட்டு B. ரத்தினநாயகர் ஸன்ஸ் அவர்களால் பதிப்பிக்கப்பட்ட புஸ்தகத்திலும் காண்கிறது. ஆகவே இப்பாடமே இல்லையென்றது முழுப்பொய். இனி இது அபத்தபாடம் எனலாம். ஆனால் உண்மையில் ''விட்டுசித்தன்'' என்று மற்றவிடங்களில் இருந்தபோதிலும் இங்கு 'விட்டுணு சித்தன் என்பது தான் நல்ல பாடம். இந்த விருத்தம் எழுசீர் என்று கொள்ளப்பட்டிருந்த போதிலும் ஓசையை மட்டும் பற்றிப்

பார்க்கும் போது ஒவ்வொரு அடியிலும் மூன்று கூவிளங்கனியும் ஒரு கூவிளமும் இருக்கின்றன வென்பது ஸ்பஷ்டம்.

நாவகாரியம் | சொல்லிலாதவர் | நாள் தொறும் விருந் | தோம்புவார்

இப்படியே கடைசி பாட்டு மூன்றும் அடியும் இருக்கவேண்டும்.

கோதில் பட் டர்பி | ரான் குளிர் புது | வைமன் விட் டுணு | சித்தன் சொல்.

நான்காம் அடியையும் அளபெடையால் சரிப்படுத்திப் படிக்க வேண்டும்.

ஏதமின் றியு | ரைப்பவர் இரு | டீஇ கே சனுக் | காளரே.

## ப்ரஸ்தாவம் 2.

1 மைஸூர் பரகால மடத்தில் இருபத்தோராவது ஆசார்ய ராக எழுந்தருளியிருந்த பெரிய பரகால ஸ்வாமி செய்தருளிய திவ்ய ப்ரபந்த வ்யாக்யானங்களை அச்சிட்டுக் கொடுக்கும்படி காஞ்சீ வ்யக்தியை, ஸமீபத்தில் திருநாட்டுக்கெழுந்தருளிய ஸ்ரீமத் அபிநவ ரங்கநாத ப்ரஹ்மதந்த்ர பரகால மஹா தேசிகன் நியமித் தருளினர். அதன்படி பல பாகங்களை சென்னை அச்சுக்கூடங்களில் தெலுங்கு லிபியில் இது அச்சிட்டுக் கொடுத்தது. அதில் முதலாயிர ப்ரஸ்தாவனையில் இது எழுதியிருப்பதாவது.

இவன் வ்ருத்திக்கு வரவேண்டுமென்று மஹாத்மாக்கள் செய்யும் கடாக்ஷம் இரும்பையும் பொன்னுக்கும் என்பதில் சிறிதும் ஸந்தேஹமில்லை. அவ்விதமாகவே ஸர்வஜ்ஞராய் பரம யோகியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ ஸ்வாமியினல் நிர்வ்யாஜ கருணையால் நன்முக கடாக்ஷிககப்பெற்று ஹார்த்தமான நம்பிக்கைக்குப் பாத்ரமாகக் கொள்ளப்பட்ட நான் மிகப் பெரிதான இந்த கார்யத்தை எல்லோரும் கொண்டாடும்படி யான ரீதியில் தன்கு நிறைவேற்றுவேன் என்று வித்வான்கள் நம்பவேணும். ஆசாஸநமும் பண்ண வேணும.

முடிவில் இது ஒன்று அவச்யம் விஜ்ஞாபிக்க வேண்டியதாக மிகுந்திருக்கிறது. வேறு ஸம்பரதாயத்தில் இருப்பவனேயாகி லும் ஸ்வ ஸம்ப்ரதாயத்தில் மிகுந்த பற்று உள்ளவனே யாகி லும் நான் ஸ்ரீஸ்வாமியினல் நிர்வ்யாஜ பரம க்ருபையோடும் தம் ஹ்ருதயம் மட்டுமே அறியக்கூடிய மிகுந்த நம்பிக்கை

யோடும் இந்த கைங்கர்யத்தில் நியமிக்கப்பட்டிருக்கிறேன் என்று அறியும் பெரியோர்கள் எவ்விதத்திலும் ஸாவதான ராகவே இருந்து எவ்வித வார்த்தைக்குமிடமில்லாமல் இந்தக் கைங்கர்யத்தை நிறைவேற்ற ஆவல் கொள்வர் இவர் என்று திடமாக நம்பிக்கை கொள்ளவேணும்.

இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணின வ்யக்தி உடனே என்ன செய்தது என்பதை உலகம் அறியவேணும். முதலாயிரத்தில் முதல் ப்ரபந்தம் பெரியாழ்வார திருமொழி. இதன் முதலிலுள்ள திருப் பல்லாண்டுக்கு மட்டுமே பெரிய பரகால ஸ்வாமி வ்யாக்யாநம் செய்திருக்கிறார். ஸ்ரீமத் அபிநவ ரங்கநாத மஹாதேசிகன் இதை நியமிக்கும் போது மேலுள்ள பாகத்துக்கும் ஸம்ப்ரதாய விரோதம் இல்லாமலும் சுருக்கமாகவும் அர்த்தம் எழுதி அச்சிடும் என்று ஸாதித்தார்.

திருப்பல்லாண்டு பெரியாழ்வார் திருமொழியின் முதல் திரு மொழி. இதை ஸமீப காலத்தில் அதாவது 60, 70 வருஷங்களுக் குள் தென்கலையார் தனி ப்ரபந்தமாகப் பிரித்து விட்டார்கள். வண்ணமாடங்கள் சூழ் முதலே பெரியாழ்வார் திருமொழி என்ற ப்ரபந்தம். இதன் முதல் பத்து ஒன்பது திருமொழிகளே உள்ள தென்றார்கள். இப்படி இங்கு ஸம்ப்ரதாய பேதம் உண்டாயிற்று. பரகால ஸ்வாமி நியமநத்தின்படி அச்சிட்ட இந்த வ்யக்தி தானே செய்த ப்ரதிஜ்ஞையைக் காப்பாற்றவும் அச்சிடுவது வடகலையார் க்ரந்தம் என்பதை நினைத்தும் திருப்பல்லாண்டை பெரியாழ்வார் திருமொழியின் முதல் திருமொழியாக வைத்து அச்சிட வேண்டும். அப்படியன்றி தன் ஸம்ப்ரதாயப்படியே இதைத் தனி ப்ரபந்தமாக வும் வண்ண மாடங்கள் திருமொழியைப் பெரியாழ்வார் திரு மொழி முதல் பத்தின் முதல் திருமொழியாகவும் அச்சிட்டு பெரிய நம்பிக்கை த்ரோஹம் செய்திருக்கிறது.

மற்றொரு மஹா த்ரோஹமும் செய்திருக்கிறது. வண்ண மாடங்கள் திருமொழிக்குத் தானே எழுதிய உரையில "அதில் முதல் திருமொழியிலே" என்று இதை முதல் திருமொழியாக எழு திற்று. தமிழ் பரிசயமில்லாத பரகால மடம் ஸ்வாமி இதை நம்பி ஒப்படைத்த கார்யத்தில் இப்படி மோசம் செய்திருப்பதை ஒருவரும் தெரிந்து கொள்ள முடியாதென்று நிச்சயித்து இது, திருப்பல்லாண்டு விஷயமாக வாதம் கிளர்ந்தபோது தான் எழுதிய உரையை பெரிய பரகால ஸ்வாமியே எழுதியதாக வைத்து தன் வாதத்திற்கு இதையே ப்ரமாணமாகப் பறை சாற்றிற்று. ப்ரபந்த ஸார தத்வஸாரம் என்ற நூலில் இது எழுதுகிறது :-

## ஸ்ரீபரகாலஸ்வாமி வ்யாக்யாந ப்ரதர்சனம்

தென்கலை ஸம்ப்ரதாயத்தில்போல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீபரகாலஸ்வாமியின் வியாக்யானம் தோன்றியே யுள்ளது. அதிலும் திருப்பல்லாண்டைத் தனி ப்ரபந்தமாகவும் பெரியாழ்வார் திருமொழியைத் தனி ப்ரபந்தமாகவுமே கொண்டமை ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. திருப்பல்லாண்டு வியாக்கியானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் பெரியாழ்வார் திருமொழி வியாக்யானத் தொடக்கத்தில் ஒரு ச்லோகமும் அவர் இட்டிருக்கிறார் ... இதனால் இது தனிப்பட்ட பிரபந்தமென்பது ஸுஸ்பஷ்டமாகக் காட்டப்பட்டது. அடுத்தபடியாக அவதாரிகையிலும் "கீழ் திருப்பல்லாண்டில் மங்களா சாஸநம் செய்து" இத்யாதி வாக்யங்களாலே இது ப்ரத்யேக ப்ரபந்தமே என்பதை நன்கு காட்டியிருக்கிறார்.

என்று. மாறுவேஷம் போட்டுக்கொண்டு மறுபடியும் எழுதுகிறது:

தென்கலை ஸம்ப்ரதாயத்தில் போல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் திருப்பல்லாண்டுக்கும் பெரியாழ்வார் திருமொழிக்கும் ஸ்ரீபரகாலஸ்வாமியின் வியாக்கியானம் வெளிவந்திருப்பதைக் காட்டி அதிலும் திருப்பல்லாண்டு தனி ப்ரபந்தமாக விளக்கப்பட்டிருப்பதை ச்லோக பூர்வகமாக ஸ்வாமி நிரூபித்துள்ளார்.

என்று. இந்தப் பெரும் த்ரோஹத்தையும் வஞ்சனையையும் கண்டு பிடித்து நாம் நமது பாரிஜாத புஷ்பத்தில்

நம்பிக்கை த்ரோஹம் செய்து வண்ண மாடங்கள் முதலான பெரியாழ்வார் திருமொழிக்குத் தானே வஞ்சனையாய் எழுதிய உரையைப் பெரிய பரகால ஸ்வாமி ஸாதித்ததாகக் காட்டி உடனே கையும் களவுமாகப் பிடிபட்டிருப்பதற்காக

जिह्वामुत्पाट्य सपदि मर्तव्यं ननु मानिना

என்றோம். இதனால் சிறிதும் ஸங்கோசமடையாமல் ப்ரஹ்மசாரி கர்பாதானக் கதை ஒன்றைக் கட்டி "நான் இப்படித்தான் செய்தேன். அதனாலென்ன" என்கிறது. தன் ஸம்ப்ரதாயத்தை ஸ்தாபிப்பதற்கும் பிற ஸம்ப்ரதாயத்தை ப்ரதிக்ஷேபம் பண்ணுவதற்கும் இது அநுஸரிக்கும் வழி இது என்று உலகமறிய வேணும் என்பதற்காக இவ்வளவு எழுதினோம். இத்தகைய வ்யக்தி இந்தப் பூமண்டலத்தில் மற்றொன்று இருக்குமா என்பதை எல்லோரும் சிந்தித்துப் பார்க்கவேணும்.

[வாக்ய ரசனையில் தன்னை விஞ்சினவர்கள் எவருமே உலகத்தில் இல்லை என்ற கர்வம் இதற்கு அபாரம். தென்கலை ஸம்ப்ரதாயத்தில் போல், என்றுரமபித்து இது எழுதின வாக்யம் மிகவும் அவலக்ஷணமானது "தென் கலை ஸம்ப்ரதாயத்தில் போல் வடகலை ஸம்ப்ரதாயத்திலும் ஸ்ரீ பரகால ஸ்வாமியின் வியாக்கியானம் தோன்றியுள்ளது" என்கிறது இது. தென்கலை ஸம்ப்ரதாயத்தில் கூட பரகால ஸ்வாமி வ்யாக்யானம் தோன்றியுள்ளதா? வடகலை ஸம்ப்ரதாயத்திலும் வியாக்யானம் தோன்றியுள்ளது. இது ஸ்ரீ பரகாலஸ்வாமி செய்தருளியது என்று எழுத வேணும்].

2. இப்படி பெரும் நம்பிக்கை த்ரோஹம் செய்து தமிழே அறியாத பரகால மடம் பெரியோர்களை வஞ்சித்துத் தானே அச்சிட்டுக்கொடுத்த இது இப்போது எழுதுகிறது:-

ஸமீப காலத்தில் "பரகால யதீந்த்ரக்ரந்த மாலாயாம்—பகவத் விஷயம்" என்று அச்சிட்ட பரகால மடம் "துணிந்த கட்டைக்குத் துக்கமில்லை" என்று கொண்டு துணிந்து "ஓடும் புள்ளேறி", "இவையுமவையும்" என்கிற இரு திருவாய்மொழிகளினுடையவும் ஆருயிரப்படியையே உருமாற்றிவிட்டது. "ஓடும் புள்ளேறி ஆருயிரபடியில் ஸூக்ஷ்ம (ரு) பமான ஆச்ரயணமுடைய ஈச்வரன் கரணத்ரயத்தாலும் கிட்டமாட்டாத சேதநரிடத்தில் ஆர்ஜவ குணத்தோடே ஆச்ரித ஸம்ச்லேஷம் பண்ணிக்கொண்டிருப்பானென்று அருளிச்செய்கிறார்" என்றும், "இவையுமவையும்" ஆருயிரப்படியில் இப்போது இவர் காட்டும் வாக்யத்தையும் ப்ரக்ஷேபம் பண்ணி விட்டது இங்ஙனே ப்ரக்ஷேபித்து அச்சிட்டது 1941-ல். பிறகு 1943-ல் அந்த மடமே ஆருயிரப்படியை மட்டும் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறது முன்பு ப்ரக்ஷிப்தமானது அதில் உதக்ஷிப்தமாய் விட்டதென்பதைக் கண்ணுடையார் காணலாம்

குருகுல வாஸம் பண்ணியறியாத இவர் இது ஸங்கதமா அஸங்கதமா என்று கூட ஆலோசிக்கமாட்டாமல் தன்னுடைய மருளை நம்மீதேற்றி அட்டஹாஸம் பண்ணுவதை ஆராய்ந்து புடைக்க ஆருமில்லையா

என்று, அச்சிட்டது முழுக்க இதுவே இதில் வேறு எவருக்கும் எவ்விதமான ஸம்பந்தமும் இல்லை. இந்த உண்மையை மறைத்து "பரகால மடம் அச்சிட்டது ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களைச் செய்தது" என்று தனக்கு அதில் யாதொரு ஸம்பந்தமும் இல்லை

போல் எழுதுகிறது. இந்த ப்ரக்ஷேப உத்க்ஷேபங்களைச் செய்தது இதுவே. முதலாயிரத்தில் பெரியாழ்வார் திருமொழியில் இதன் துஷ்க்ருதங்களை அறிந்தபோது கூட பகவத் விஷயத்தில் இதன் இந்த அகார்யங்களை நாம் அறியவில்லை. ஆறுயிரப்படி வாக்யமே இது என்று நம்பி உதாஹரித்தோம். இப்போது இதன் நிர்லஜ்ஜ பாஷணத்தாலேயே உண்மையை அறிகிறோம். ப்ரக்ஷிப்த வாக்யத்தில் உடனே ஸந்தேஹம் வரும்படியான தப்பு ஒன்றுமில்லாமையால் ஆறுயிரப்படி வாக்யமே அதென்று எண்ணி

"இது சொல்வது அஜ்ஞாநத்தினலா வெறும் வஞ்சனையைக் கருதியா என்பது விளங்கவில்லை"

என்று எழுதினேம். இப்போது இது தன் அகார்யத்தை முன்னமே நாம் கண்டு பிடிக்காததற்காக நம்மைப் புடைக்க ஆருமில்லையே என வருந்துகிறது. ஏனையா இல்லாத ஒரு வாக்யத்தை ஒரு முத்ரணத்தில் சேர்த்தீர், மற்றொரு முத்ரணத்தில் எடுத்தீர் என்று கேட்டு இதைப் புடைக்க வேணுமா நம்மைப் புடைக்க வேணுமா என்று க்ருதயுகமானல் உடனே தெளிவு ஏற்பட்டிருக்கும். இது மேலும் எழுதுகிறது:-

"பொய் வஞ்சனை மருள் துயக்கு மயக்கு
ஆகிய எல்லாவற்றுக்கும் கொள்கலமான இவர்
ஏதோ க்ருத்ரிமம் செய்கிறபடி இது.

என்று. எப்படியிருக்கிறது? நாம் க்ருத்ரிமம் செய்கிறோம்?

3. இந்த சண்டை வ்யக்தி ப்ரபந்தஸாரம் தேசிக க்ருதியன்று என்ற வாதத்தை கிளப்பிற்று. அதற்கு மறுப்பு "விவேக பாரிஜாதம்" என்ற பெயரால் 1960–ல் வெளியிட்டோம். அதற்கு மறுப்பு வெளிவந்தது இதற்கு மறுப்பாக "பாரிஜாத புஷ்பம்" என்கிற ப்ரபந்தஸார வைபவத்தை 1961ல் வெளியிட்டோம். இது அச்சாகும்போதே இதன்கையாள்ஒன்று அச்சாபீஸில் நுழைந்து 4 பக்கம் ப்ரூப்பை ஒருவருக்கும் தெரியாமல் எடுத்துக் கொண்டுபோய் இதனிடம் கொடுத்தது. உடனே அதன் பேரால் ஒரு மறுப்பு எழுதி புரூப் திருட்டை மறைக்க ஒரு கதையைக் கட்டி "பாரிஜாத புஷ்பமானல் துர்நாற்றம் வீசுமோ" என்ற கேள்வியுடன் வெளியிட்டது. இதனல் நம் பாரிஜாத புஷ்பம் அப்போதே வெளிவந்தது இதற்கு நன்ருகத் தெரியும் என்பது ஸ்பஷ்டம்.

இதன் துர்வாதங்களைக் கண்டித்து நாம் எழுதும் க்ரந்தங்களை இதற்கு அனுப்புவது நிஷ்ப்ரயோஜநமாகையால் நாம் அனுப்புவதில்லை. தேசிகன் திருவடியை ஆச்ரயித்தவர்கள் இதன் மாயை

யினால் மயங்கக் கூடாது என்பதற்காக நாம் உண்மையை விளக்கி மறுப்பு எழுதுகிறோமேயன்றி இது தெளிவுபெறுமென்பதற்காக எழுதவில்லை. ஆகிலும் எந்த விஷயத்திலும் தனக்கே ஜயம் என்று காட்ட அபிநிவேசம் கொண்ட இது அப்போதே அதாவது, 1961 லேயே, ஒருவரை இடையிட்டு வி. பி. மூலமாக இந்தப்பாரிஜாத புஷ்பத்தை வரவழைத்து அதிலுள்ள ஒரு விஷயத்திற்கும் பதில் சொல்ல முடியாமல் நமக்கு "அஷ்டோத்தரம்" ஒன்று எழுதி திருப்பதி ஸ்ரீமான் T. K. கோபாலஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமிக்கு அனுப்பிற்று. இதைப் பொறுக்காத நம் மித்ரர்கள் சிலர் ந்யாயஸ்தலத்தில் வ்யவஹாரம் பண்ண முயன்று இதற்குநோடீஸ் கொடுக்கச் செய்தார்கள். இவ்வித வ்யவஹாரபலத்தைமுன்னேயே பூர்ணமாக அநுபவித்திருக்கிற இது உடனே க்ஷமாப்ரார்த்தனை பண்ணிற்று. இத்துடன் இந்த விஷயம் நின்றது.

தற்கால வாஸத்திற்காக 1969-ல் நாம் சென்னை வந்த பிறகு யாத்ருச்சிகமாக சென்ற வருஷத்தில் திவ்யப்ரபந்தத்தைப் பற்றியும் நம் பாரிஜாத புஷ்பத்தைப் பற்றியும் நம் ஸௌஹ்ருத்கோஷ்டியில் ப்ரஸ்தாவம் வந்தது. இதை எப்படியோ அறிந்த இது தன் ஆள் ஒருவரை அனுப்பி பாரிஜாத புஷ்பத்தின் ஒரு பிரதியை விலைக்கு வாங்கிக்கொண்டு வரச்சொல்லி வேறு ஒன்றும் செய்ய வியலாமல் முன் அஷ்டோத்தரம் போல் ஒரு வசவு நூலை வெளியிட்டது ஸ்ரீராமாநுஜன் 262ல் கண்டன பாவனையும் பண்ணியிருக்கிறது- இங்கும் பொய் பித்தலாட்டம் மலிந்திருக்கிறது. இது எழுதுகிறது:-

> "பாரிஜாத புஷ்பம் என்கிற இந்தச் சுவடி இது காறும் என் கண்ணில் பட்டதில்லை. பட்டிருந்தால் அந்த க்ஷணத்திலேயே பொடி பொடியாகியிருக்குமல்லவா? இது 1961 ல் அச்சிட்டதாகக் காண்கிறது. இதைப்பற்றி இரண்டு விதமாக ஊகிக்கிறேன். இதைச் சில நாட்களுக்கு முன்பு அச்சிட்டு விட்டுப் புராதனமென்று காட்டுவதற்காகப் பழைய வருஷத்தைக் குறிப்பிட்டிருக்கலாம். அல்லது ஒன்பது வருஷங்களுக்கு முன்னமே அச்சிட்டிருந்து அப்போதே வெளியிட்டால் அன்றே மாய்ந்தொழியுமே. சில காலமாவது ஜீவித்திருக்கட்டுமே. சில பாமரர்களாவது சில நாட்களாவது மயங்கிக் கிடக்கட்டுமே என்றெண்ணி குப்த ப்ரசாரம் செய்திருக்கலாம்.

என்று. பெரும் பொய்யும் பொய் கற்பனைகளும் இங்கே ஸ்பஷ்டமாய்க் காணப்படுகின்றன. நம்மைப்பற்றி இது செய்த தூஷணங்களைப் பொறுக்காத நம் ஸௌஹ்ருத்துக்கள் இப்போது வ்யவஹாரம்

பண்ணியே ஆகவேண்டுமென்று தீர்மானித்து ஸகல ஏற்பாடுகளை யும் பண்ணி நோடீஸும் கொடுத்தார்கள். ஆகிலும் பிறகு துஷ்ட நிக்ரஹத்தின் பொருட்டு கூட நாம் வ்யவஹார ஸ்தலத்திற்கு நேராகப்போவது உசிதமில்லையென்று உபரதரானார்கள்.

இனி 'பூதிகந்தி புஷ்பப்ரஸூநம்' என்று தலைப்பிட்டு இது எழுதி யிருப்பதில் நாம் பாரிஜாத புஷ்பத்தில் நிரூபணம் செய்திருக்கும் எந்த விஷயத்திற்கும் மறுப்பில்லை. நாம் சொல்லியிருக்கும் ஸர்வ விஷயங்களும் ப்ராமாணிகமாகையால் அவற்றை இல்லை செய்ய முடியாது. ஆறுயிரப்படியில் தான் செய்த அகார்யத்தை வெளி யாக்கியிருக்கிறது. தேசிக தூஷணம் செய்திருக்கிறது.

ஓடும்புள்ளேறி (1—8) திருவாய் மொழியில் ப்ரதிபாத்யம் ஆர்ஜவகுணமென்று பட்டர் திருவுள்ளம். இதை நஞ்ஜீயர் ஸாதித் திருக்கிறார். இந்த ஆர்ஜவத்தை பெரியவாச்சான் பிள்ளை ஒரு விதமாக நிரூபணம் செய்திருக்கிறார். இது யுக்தமன்று என்று தேசிகன் சிக்ஷித்திருக்கிறார். இதை ஸஜ்ஜநாராதநம் இரண்டு பாகங்களிலும் (1952) விரிவாக நிரூபணம் பண்ணியிருக்கிறோம்.

> "ஓடும் புள்ளேறி, பொருமாநீள்படை, அலைவதரவலை மேல் இவ்விடங்களில் தாத்பர்ய ரத்நாவளியில் தேசிகன் பல பரிஷ்காரங்களைச் செய்திருக்கிறார் என்பதைபலவருஷங்களுக்கு முன்பே விரிவாய் நிரூபித்திருக்கிறோம். இதைக் காட்டிக் கொள்ளாமல் இங்கு பேசியிருப்பது மிகவும் வருந்தத் தக்க விஷயம். பெரும் வஞ்சனை"

என்று பாரிஜாத புஷ்பத்திலும் கூறினோம். இதைப்பற்றி ஒன்றும் பேசாமல் மறுபடியும் தேசிகன் பெரியவாச்சான் பிள்ளை சொன் னதையே சொல்லுகிறார் என்று எழுதுகிறது. இப்படி ப்ரதிவாதி கள் சொன்ன ப்ராமாணிக விஷயங்களை ஏற்காமலும் சொன்ன தாகவே காட்டிக் கொள்ளாமலும் தான் சொன்னதையே திருப் பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருப்பவர்கள் வித்வான்களா? வாதயோக்யர்களா என்பதை தடஸ்தர்கள் பராமர்சிக்கவேணும்.

> "இப்படி ஆர்ஜவ சபளித திவ்யைச்வர்யத்தை அநுஸந்தித்த ஆழ்வார்"

என்று தானே ஒரு வரியை பரகால ஸ்வாமி வ்யாக்யாநத்தில் நுழைத்துவிட்டு "என்றெழுதி ஒருவாறு துயர் தீர்ந்தார் பரகால ஸ்வாமி" என்று அதை அவர் எழுதினதாகச் சொல்லி இப்போது தானே அதை தூஷிக்கிறது—

ஆர்ஜவ சபளித என்றால் என்ன அர்த்தமோ. அவரைத்தான் கேட்கவேண்டும். ஆர்ஜவத்திற்கும் ஐச்வர்யத்திற்கும் என்ன ஸம்பந்தமோ ? அது தொலையட்டும்.

என்று. இப்படி இன்னும் எத்தனை இடங்களில் என்னென்ன கோணல் செய்திருக்கிறதோ? வித்வான்கள் சோதித்துப் பார்க்க வேண்டும்

4. இப்படி குண விசேஷத்தைப் பார்த்தோம். இனி பாண்டித்யத்தைப் பார்ப்போம். முநிவாஹநபோகத்தில் உள்ள ஸ்வாமி ஸ்ரீ ஸூக்தி ஒன்றைப்பற்றி நாம் எழுதியதற்குமேல் இது எழுதினதை அப்படியே வெளியிடுகிறோம்.

திருப்பாணாழ்வாரருளிச்செயலான அமலனாதிபிரானுக்கு நம் தேசிகன் இட்டருளின வியாக்கியானம் முனிவாஹநபோக மென்பது. இது தேசிகரஹஸ்யங்களுள் ஒன்றாகப் பரிகணிதம். இதில் முதற் பாசுரத்தின் கடையடி — "திருக்கமலபாதம் வந்து என் கண்ணினுள்ளன வொக்கின்றதே" என்பது. இங்கு தேசிக திவ்ய ஸூக்தி

"இத்திருவடிகளில் வைத்த கண் வாங்கவொண்ணாதபடியான போக்யதாதிசயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச் செய்கிறார்"

என்றுள்ளது. இங்கு உத்ப்ரேக்ஷையென்கைக்கு அவகாசமேது? என்றும், வஸ்தூத்ப்ரேக்ஷையா? ஹேதூத்ப்ரேக்ஷையா? பலோத்ப்ரேக்ஷையா என்றும் ஒரு ஸமயம் மன்னார்குடி ஸதஸ்ஸில் விசாரம் வர அங்குக் குழுமியிருந்த வித்வான்கள் த்வங்காரஹூங்காரங்களாலே வாக்யார்த்த பூர்த்தி செய்தார்களே யல்லது ஒருவராவது ப்ராமாணிக நெறியில் நின்று விடையளித்தவரல்லர். அதற்கு விடையளிக்க எழுந்துள்ளது உத்யானபத்ரிகை. அளித்திருக்கும் விடையாதெனில்;—

"இங்கு தேசிகனுடைய அவதாரிகையில் சொல்லப்பட்ட உத்ப்ரேக்ஷையாவது ஸ்ரீரங்கநாதனுடைய திருவடித்தாமரைகள் ஆழ்வாருடைய திருக்கண்களில் இருக்கையாகிற வஸ்துவைப்பற்றியது. உண்மையில் எம்பெருமானுடைய திருவடிகள் ஆழ்வாருடைய திருக்கண்களில் இல்லையன்றோ. ஆதலால் உத்ப்ரேக்ஷை. உத்ப்ரேக்ஷையென்பதைக் காட்டும்படியான சொற்கள் மூலத்திலில்லாமையால் இங்கு கம்யோத்ப்ரேக்ஷை ——ஒக்கின்றதேயென்பதற்கும் என் கண்ணினுள்ளனவென்

பதற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லை. ஒக்கின்றதேயென்பது தனிவாக்கியம். அதனுல் ஆச்சரியம் தெரிவிக்கப்படுகிறது. இச்சொல்லில் ஒரு உத்ப்ரேக்ஷையும் கிடையாது இருப்பதாக தேசிகன் திருவுள்ளம் பற்றவுமில்லை''. என்பதாக

1. இதெல்லாம் நிரம்பிய மருளையே நிரூபிக்க வல்லது.

2. ''உத்ப்ரேக்ஷையாலேயருளிச்செய்கிறார்'' என்ற உடனே (என் கண்ணினுள்ளனவொக்கின்றவே) என்ற வரையில் ப்ரதீகம் எடுக்கப்பட்டிருக்கிறது.

3. ஒக்கின்ற (து) என்பதற்குத் தனியாக ப்ரதீகதாரணமு மில்லை அர்த்த நிரூபணமுமில்லை.

4. முநிவாஹநபோகத்திற்கு முன்னே அவதரித்த வியாக்கியானத்தில் ''கண்ணினுள்ளனவொக்கின்றவேயென்று ஒரு பதமாய் என் கண்ணினுள்ளனவானுப்போலேயிராநின்றதே! என்றபடி'' என்றருளிச் செய்திருக்கையாலே அதையடியொற்றியே தேசிகனருளிச் செய்தது ஸுஸ்பஷ்டமாயிருக்க ஒக்கின்றதே யென்பதைத் தனி வாக்யமாக ஒதுக்குவதும் அபார்த்தம் செய்வதும் குருமுகமாகக் கேளாமை ஸ்வாமி அவதாரிகையில் ப்ரஸ்தாவித்த உத்ப்ரேக்ஷைக்கு (ஒக்கின்றதே) என்கிற விதுவே மூலமாதலால் ''इवादिशब्दाभावादस्या'' என்றதும் இருளும் மருளுமான பேச்சேயாகும்.

5. இங்கு முக்கியமான விசாரவிஷயம் எதுவோ அது தன்னில் உத்யானம் சிறிதும் கண் செலுத்தவில்லையே. ''இத்திருவடிகளில் வைத்த கண் வாங்கவொண்ணுதபடியான போக்யதாதிசயத்தை ஒரு உத்ப்ரேக்ஷையாலே அருளிச் செய்கிறார்'' என்றன்றோ ஸ்வாமி ஸூக்தியுள்ளது. அப்படிப்பட்ட போக்யதாதிசயத்தைக் காட்டுகின்ற உத்ப்ரேக்ஷையை உத்யானம் நிரூபித்ததோ? இல்லை. உண்மையில் 'தமது கண்களில் இல்லாத திருவடிகளைக் கண்களிலுள்ளனவாகச் சொன்னது உத்ப்ரேக்ஷை என்று உத்யானம் எழுதுவதற்கும், மூலமான தேசிக திவ்யஸூக்திக்கும் ஸம்பந்தலேசமேனு முண்டோவென்று பார்க்கவேணும்.

6. பாசுரத்தில் கமலபாதம் இருப்பதனுல் அது கொண்டு போக்யதாதிசயம் தெரிய வரலாம். அங்கு உத்ப்ரேக்ஷையென்கைக்கு இடமில்லையே.

7. கண்களில் இல்லாததைக் கண்களிலிருப்பதாகச் சொன்ஞல் இதை அதிசயோக்தியென்னலாமத்தனே போக்கி உத்ப்ரேக்ஷையென்கைக்கு ப்ரஸக்தியேது? போக்யதாதிசயப்ரஸ்தாவத்திற்குத்தான் ப்ரஸக்தியேது? என்றன்ரோ விசாரம் ப்ரஸக்தமானது.

8. ஏதோ நெஞ்சில் தோன்றினதொன்றை யெழுதிப் பத்ரபூரணம் செய்வதென்கிற இயல்வுக்கே மிக மிக வொக்குமிது.

9. வஸ்தூத்ப்ரேக்ஷையின் ஸ்வரூபம் இன்னதென்றே அறியாமையும் இங்கு ஸுவ்யக்தமாகிறது.

10. சந்த்ரமண்டலத்தை ஸ்பர்சியாத கோபுரத்தை ஒருவர் சந்த்ரமண்டல ஸ்பர்சியாகக் கவிபாடிஞல் இதை வஸ்தூத்ப்ரேக்ஷையென்று சந்த்ராலோகமாத்ரமே வாசித்த வித்யார்த்தியும் சொல்லத்துணியான்.

11. ஸுதராம் தாம் தலையிடத் தகாத விஷயத்தில் வலுவில் தலையிட்டுத் திணறுவதென்னே?

இனி இதை விமர்சிப்போம்.

1 ப்ரதிபக்ஷிகளுக்கு இது செய்யும் ஸாதாரண ஸம்பாவனை இது. இதைத் திருப்பிப்படிக்க வேணும்.

2. அருளிச் செய்கிறுர் என்பது என் கண்ணிலுள்ளன என்ற இதற்கு மட்டுமே அவதாரிகை. ஒக்கின்றதே என்பது வ்யாக்யேயபதம். அவதாரிகை இல்லாமல் எடுக்கப்பட்டிருக்கிறது, (என் கண்ணிலுள்ளன) (ஒக்கின்றதே) என்று அச்சிட்டிருக்க வேணும். ஒரே குண்டலத்தில் அச்சிட்டிருந்தாலும் வித்வான்கள் இப்படியே அநுஸந்திப்பாரகள்.

3. ஒரே பதத்திற்கு ப்ரதிகதாரணவ்யஹாரம் அயுக்தம். ஒரேபதம்ஒக்கின்றதே என்று. அது எடுக்கப்பட்டேஇருக்கிறது. ஒரே ஸம்புடத்தில் காணப்படுவதால் இது முன்னேடு சேர்ந்தது என்பது ப்ரமம். இதற்குத் தனியாக அர்த்த நிரூபணமில்லை, என்பது மற்றொரு ப்ரமம். அதவா அஜ்ஞாநம். அவன் திருக்கமலபாதம் என் கண்ணினுள்ளன, இது ஒக்கின்றதே. இது ஒக்குமோ என்று இது ஆழ்வாருடைய ஆச்சர்யத்தைக் காட்டுகின்றது. இதை ஸ்வாமி "தேவாதிகளில் தலைவரான, என்றுரம்பித்து ஆச்சர்யப்படுகிறுர் என்றளவாக உள்ள வாக்யத்தால் ஸாதிக்கிறுர்.

4. முநிவாஹந போகத்திற்கு ப்ராசீனமான வ்யாக்யாநம் ஒன்றில் ஒக்கின்ற என்பதைத் தனி வாக்கியமாக்கிப் பல தாத்பர்யங்கள் கூறப்பட்டிருக்கின்றன.. மற்றொன்றில் தனியாக வைத்துத் தாத்பர்யம் சொல்லிவிட்டு முன்னோடு ஒரு வாக்யமாகப் பண்ணியும் பொருள் கூறப்பட்டிருக்கிறது. இந்த யோஜனையில் உத்ப்ரேக்ஷை உண்டு. ஆனால் கம்யையன்று. வாச்யை. ஆனல் இது ஸ்வாமிக்குத் திருவுள்ளமில்லை. தனி வாக்யமாய் நல்ல தாத்பர்யமிருக்கும்போது வேறு விதமாக ஏன் அந்வயிக்கவேணுமென்று அபிப்ராயம். தனியே வைத்து முன் வ்யாக்யாநங்களில் சொன்ன கருத்துக்களிலும் ஸ்வாமிக்குத் திருவுள்ளமில்லை. கண்ணினுள்ளன என்றதற்கு ஸம்பந்தபட்டதாகவே இதன் தாத்பர்யமிருக்க வேண்டுமே யன்றி வேறு விதமாக இருக்கக்கூடாதென்று அபிஸந்தி. வாக்ய ரீதியில் ஒக்கின்றதே என்பதற்கு முன்னோடு அந்வயம் ஸர்வதா இல்லை. ஆகிலும் ஒக்கின்றதே என்ற ஆச்சர்ய காகு முன் வாக்யத்தின் பொருளைப் பற்றியதே. இது முன்னோடு சேர்ந்து ஒரு வாக்யமாகிறதென்று மஹா மஹா மஹாப்ரமம்.

5. கண்ணினுள்ளன போலும். இந்த உத்ப்ரேக்ஷைக்கு ஹேது கண்கள் திருவடிகளைவிட்டு அகலாமல் அவற்றையே நிரந்தரமாகப் பார்த்துக்கொண்டிருப்பது. அவற்றில் வைத்த கண்ணை வாங்க முடியவில்லை ஆழ்வாருக்கு. அதேன்? திருவடிகளின் போக்யதாதிசயத்தால். இப்படி இந்த உத்ப்ரேக்ஷை திருவடிகளின் போக்யதாதிசயத்திற்கு வ்யஞ்ஜகம். அலங்காரேண வஸ்துத்வநி. இதை அறிவதில் வித்வான்களுக்கு என்ன கஷ்டம்.

6. கமலபாதம் என்றதில் உள்ளது உபமை. இதனால் திருவடிகளின் அழகு மார்தவம் பரிமளம் இத்யாதி வ்யங்க்யம்.

7. அல்லாத வஸ்துவை அதுபோலவும் ஹேதுவல்லாததை ஹேது போலவும் பலமில்லாததை பலம் போலவும் ஸம்பாவனை செய்வதுதான் உத்ப்ரேக்ஷை. ஒன்றை மிகையாகக் கூறுவது அதிசயோக்தி. இங்கு ஸம்பாவனை இல்லை.

8. இந்த இயல்பு யாருக்கு என்பதைத்தான் உணரவேணும்.

9. வஸ்தூத்ப்ரேக்ஷை இன்னதென்று ஸ்வாபிப்ராயத்தை வெளியிட்டிருந்தால் யாருக்கு இதில் அறியாமை என்பது விளங்கியிருக்கும்.

10. சந்த்ரமண்டலத்தைத் தொடாத கோபுரத்தை அதைத் தொடுவதாகப் பாடுகிறவன் என்ன கருத்துடன் பாடுகிறுன். தொடுகின்றது போலும் என்ற கருத்துடன் பாடிஞல் உத்ப்ரேக்ஷையே அங்குள்ளது. கோபுரம் மிகவும் உயரமானது என்பதை அறிவிக்க தொடுகின்றது என்றே பாடிஞுகில் அதிசயோக்தியே உள்ளது. இது ஸம்பந்தாதிசயோக்தி எனப்படுகிறது. இல்லாத ஸம்பந்தத்தை இருப்பதாக வைத்து கோபுரத்தின் உயரம் மிக அதிகமானது எனப்படுகிறது. ஸம்பந்தத்திற்கு ஸம்பாவனையில்லை. ஆகையால் உத்ப்ரேக்ஷை இல்லை.

11. இதை யார் யாரைப்பார்த்துச் சொல்ல வேணும் என்பதை உணர்ந்தால் எல்லோருக்கும் க்ஷேமம் உண்டு. ஒரு சாஸ்த்ரமும் கற்காமல் ஒருவருக்கு ஒன்று கற்பிக்காமல் ஒரு விஷயத்தையும் நேரில் வாதம் செய்யச் சிறிதும் சக்தி இல்லாமல் வித்வத்ஸபை என்றுல் ஒரு காததூரம் ஓடி ஒளிகின்றவர்களுக்குத்தான் எல்லா விஷயங்களிலும் தலையிடத் தகுதி உண்டு. மற்றவர்களுக்கு எப்படி இருக்கும். அதவா அப்ராமாணிகமாக, தாறுமாறுக, ஒன்றுக்குப் பத்தாக நிந்தையே நிறைந்ததாக எழுதக் கற்றவர்கள் எல்லாத்திலும் தலையிடலாமென்பது உண்மையே.

இவ்வளவு நாம் எடுத்துக்காட்டியதிலிருந்து எல்லோருக்கும் தெளிவாக விளங்கும் விஷயங்கள் இவை.

1. ஸ்ரீ ஸூக்தி ஒன்றுக்கும் உள்ள அர்த்தம் மனஸ்ஸில் படாது.

2. வித்வான்கள் எடுத்துச் சொன்னுலும் எளிதில் க்ரஹிக்க சக்தி இல்லை.

3. உள்ள அர்த்தத்திற்கு நேர்மாறுன ஒரு அர்த்தத்தைக் கூறும்.

4. கூறி வித்வான்களை ஏசும், திட்டும், பழிக்கும், அஹங்காரத்துடன் கண்டபடி பேசும்.

இதையெல்லாம் மனஸ்ஸில் வைத்துக்கொண்டு மேலே நாம் நிருபணம் செய்வதை யெல்லாம் ஸாவதானமாக வாசிக்க வேண்டும். ஒருவரும் மாயாவியின் வலையில் விழக்கூடாது. தேசிக தூஷணத்திற்காக இது வைத்திருக்கும் அஸ்த்ரங்களில் இந்த முநிவாஹந போக ஸ்ரீஸூக்தி ஒன்று. இதன் உண்மைப் பொருளை

நாம் விளங்கவைத்திருக்கிறோம். இதற்கு மேல் அது என்ன சொல்லுகிறது என்று பார்க்கக் குதூஹலமுள்ளவர்கள் யாராவது இருந்தால் அவர்கள் ஒரு ஸபையைக் கூட்டி அதையும் வரவழைத்து மத்யஸ்தர்கள் முன்னிலையில் தகுந்த பந்தோபஸ்துடன் வாதம் நடக்க ஏற்பாடு செய்யலாம். நாம்அதற்கு ஸித்தமாயிருக்கிறோம். நாம் சொல்வது அர்த்தமில்லையென்று தேறினல் ஆயிரம் ரூபாய் அபராதம் கட்டவும் துணிந்திருக்கிறோம்.

ஸ்ரீ ஸூக்திக்கு இன்னது அர்த்தம் என்று தெரியாமலே, நாம் சொன்ன வாஸ்தவ அர்த்தத்தை க்ரஹிக்காமலே, பெரிய காகிதத்தில் 2-பக்கம் பூர்ணமாக அஹங்காரமமகார பரதிக்காரங்களைக் கொட்டி கண்டநம் எழுதியிருக்கிறது. இது போலுள்ளவைதான் இது எழுதும் எல்லா நூல்களும். எது தன்பக்ஷத்திற்குநேர்விருத்தமான வசநமோ அதையே தனக்கு பரமப்ரமாணமாக எழுதிக் கொண்டேயிருக்கும். தன்னைப் பற்றி வித்வான்கள் சொல்ல வேண்டியதை யெல்லாம் அவர்களைப்பற்றி இது சொல்லிக்கொண்டிருக்கும்.

இதன் ஸம்ப்ரதாயத்திலுள்ள வித்வான்களில் எவரும் இதை ஒரு பொருளாகவே நினைப்பதில்லை. தேசிக ஸ்ரீ ஸூக்திகளைப் படித்து அபண்டித வடகலை ஸ்ரீ வைஷ்ணவர்களை வஞ்சித்தும் ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்திகளுக்கு அபார்த்தம் சொல்லி பொய் ஐதிஹ்யங்களை உபந்யஸித்து பக்கம் பக்கமாக ஆபாஸ விஷயங்களை எழுதி உடனுக்குடனே அச்சடித்து மேல் மேலும் ஆபாஸ நூல்களை வெளியிட்டு பாமரர்களை ப்ரமிக்கச் செய்தும், இவற்றாலேயே தான்ஜகதாசார்ய பதம் அடைய முடியும் என்று மநோரதித்து இவற்றையேதொடர்ந்து செய்து வருகிறது, என்கிற உண்மையை உலகம் உணரவேணும்.



ஸ்ரீ:

ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரப்ரஹ்மணே நம:

பகவதே பாஷ்யகாராய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹா குரவே நம:

# யதார்த்த ராமாநுஜன்

श्रीमद्वेङ्कटनाथं देवमिवाचार्यमभिवन्द्य ।
उभयोः कैङ्कर्यमिदं निबन्धरूपं विरचयामः ॥

वाचाटोक्तिवितत्या भ्राम्यतु नो कोऽपि साधुरिति मत्या ।
विषयाणां वैशद्यं विधीयते विबुधजनहृद्यम् ॥



## வேதபாஷ்யம்

1. "வேதபாஷ்யம் செய்த ஸாயணாசார்யர் பதபாடத்திற்கும் ஔசித்யத்திற்கும் முரணாக பாஷ்யமியற்றியிருக்கு மிடங்களை நாம் எடுத்துக் காட்டி வே த பா ஷ் ய பரிசீலன மென்னும் நூலை வெளியிட்டிருக்கிறோம். ஸ்மார்த்த வித்வான்கள் அனைவரும் அதை வாசித்து யுக்தமே யென்கிறார்களே யொழிய யுத்தத்திற்கு வருவாரில்லை. அப்படியே தேசிகோக்திகளில் நாம் காட்டும் அவத்யங்களும் அவரவர்கள் பார்த்துக்கொண்டிருக்கத்தக்கவையே யன்றி மறுவாய் திறக்க முடியாதென்பதை மீண்டும் மீண்டும் உரைக்கத் துணிவுடையோம் யாம்" என்கிறது தூஷணம்.

இதனால் வெளியாகும் கருத்தென்ன வெனில் தான் பரம அபத்தமாகச் சொன்னாலும் பிறர் எல்லோரும் அதெல்லாம் ஸுபத்தமே, பரம ஆச்சர்யமான விஷயமே என்று புகழ வேண்டுமேயன்றி மறுப்பாக ஒன்றும் சொல்லக்கூடாது, எழுதக்கூடாது என்பது. அவித்வான்கள் அஜ்ஞானத்தினாலேயே பேசாமல் இருந்து விடுகிறார்கள். வித்வான்களிலும் பலர் க்ரந்தம் எழுதும் பழக்கம் வைத்துக் கொள்ளாமையால் மறுப்பு எழுதுவதில்லை. பழக்க முள்ளவர்களிலும் பலர் தூஷிப்பதையும் அது மூலமாக வரும் சண்டையையுமே ஜீவனமாகக்கொண்டிருக்கிறவ்யக்திக்குஉண்மை உணர்த்துவது நிஷ்ப்ரயோஜனமென்பதை நன்கு அறிந்து உபேக்ஷையாய் இருந்துவிடுகிறார்கள். முன்னோர்களின் குற்றமற்ற நூல்களை நாசமாக்குவதையும் ஸாமான்யர்களுக்கு ப்ரமம் உண்டாகும்படி எழுதி வெளியிடும் நூல்களையும் பார்த்துக் கொண்டு வெறுமனே இருக்க முடியாத சிலர் மறுப்பு எழுதியே வருகிறார்கள். நாமும் இந்த கோஷ்டியைச் சேர்ந்தவர்கள். நாம் எழுதுவது தூஷணம் த்ருப்தியடையு மென்பதற்காகவன்று. அதை எவரும் த்ருப்தி செய்ய முடியாது. அது சொல்வதைக்கேட்டோ பார்த்தோ பிறர் ப்ரமிக்கக் கூடாது, என்பதற்காக எழுதுகிறோம். வேத பாஷ்ய விமர்சனம் என்ற ஒரு சிறுநூலை யாரோ ஒருவர் நம்மிடம் கொண்டுவந்து கொடுத்தார். அதில் பதபாடத்திற்கு விருத்தமாக பட்ட பாஸ்கரர் வித்யாரண்யர் என்கிற இரண்டு பாஷ்ய காரர்களும் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள் என்று கூறி பல விடங்கள் எடுத்துக்காட்டப்பட்டிருந்தன.

பதபாடம் அநாதியன்று. ஆத்ரேயர் என்ற ஒரு மஹர்ஷி இயற்றியது. மஹாபாஷ்யத்தில் தாம் செய்யும் நிர்ணயம் பத

பாடத்திற்கு விருத்தமாயிருக்கின்றதே என்று கேட்டுக் கொண்டு பதகாரர் எங்களை அனுஸரிக்க வேண்டுமே யன்றி நாங்கள் அவர்களை அனுஸரிக்க வேண்டிய அவசியமில்லை யென்கிறார் பதஞ்ஜலி. வேதபாஷ்யகாரர்களும் பதபாடத்தை நன்றாக அறிந்துவைத்தே வேறுவிதமாகவும் பதத்தையும் பொருளையும் கூறலாமென்று கருதி அப்படி விவரணம் செய்கின்றார்கள். இவ்விடங்களில் இவர்களுக்கு அஜ்ஞானமுமில்லை மற்றஎவ்விதக்குற்றமுமில்லை. துஷணம் எடுத்த விஷயங்களில் பலவற்றில இந்த உண்மையை உத்யானபத்திரிகையில் கீலக வருஷம் சித்திரை மாஸம் முதல் ஆவணிவரையிலுள்ள ஸஞ்சிகைகளில் உபபாதித்திருக்கிறோம். வேறு பதங்களைப் பற்றிச் சிறிது இங்குக் கூறுகிறோம்.

ஸஸவாந் என்ற விடத்தில் 'தத்தவாந்' என்றது தவிர வேறு அர்த்தம் பொருந்தாமையால் பதகாரருக்கும் இதே அர்த்தம் தான் அபிமதம். இரண்டு ஸகாரம் இருப்பதை அவதானத்துடன் படிக்கவேண்டுமென்பதற்காக இங்கு பதகாரர் அவக்ரஹம் பண்ணினார் என்பது ஸாயணர் கருத்து. ஆயுவ : என்றவிடத்தில் உகாரம் இருப்பதை புத்தியில் தரிப்பதற்காக அவக்ரஹம் பண்ணினதுபோல் இங்கும் அவக்ரஹம் என்பது பொருந்தும்.

2. சர்ம யச்ம்ஸதஸ்மிந் ஹவே புருஹூத : புருக்ஷு" என்ற விடத்தில் புருக்ஷு என்பது 'சர்ம'வுக்கு விசேஷணமானால் தூராந்வயம் வரும். இதைப்பரிஹரித்து சாந்தஸரூபமாக்கி புருஹூதனுக்கே விசேஷணமாகக் கொண்டார் ஸாயணர்.—ஆகையால் இங்கும் குற்றம் ஒன்றுமில்லை. பஹுபதல்யவதாநமுள்ள தூராந்வயம் ஸஹ்யமா சாந்தஸரூபம் ஸஹ்யமா என்பது அவரவர்களுடைய ருசியைப் பொறுத்தது. வேதத்தில் பதவிசேஷங்களையே குறித்து ப்ரவர்தித்த ஸூத்ரங்களால் ஸித்தமான ரூபம் சாந்தஸரூபம் எனப்படும். புருஹூத : புருக்ஷு என்றவிதில் உள்ள புருக்ஷு என்பது ஸுபாம் ஸுலுக் என்கிற ஸூத்ரத்தினால் விதிக்கப்பட்ட லுக் வந்து நிஷ்பந்நமாகையால் இது சாந்தஸரூபம்.' வ்யத்யயோபஹுளம்' என்ற ஸூத்ரத்தை யநுஸரித்து விசேஷம் சொன்னால் அதுதான் முக்கியமாக வ்யத்யயவ்யவஹாரத்திற்கு உரியது.

3. தைவ்யா ஹோதாரா வநிஷந்த பூர்வே என்கிறவிடத்தில் மேல் வீதாம் என்பது போல் த்விவசனம் இல்லாமல் வநிஷந்த பூர்வே என்று பஹுவசனம் இருப்பதால் தைவ்யா: ஹோதார : என்று பஹுவசநமாகவே கொள்ளவேணும். ஸுபாம் ஸுலுக் என்ற ஸூத்ரத்தினால் தைவ்யௌ ஹோதாரௌ என்ற த்விவச

னத்திற்குப்போல் தைவ்யா: ஹோதாரா: என்ற பஹுவசனத்திற்கும் ஆகாரம் வந்து தைவ்யா ஹோதாரா என்று ரூபம் நிஷ்பந்நமாகலாமாகையால் த்விவசனமாகவே இருக்க வேணும் என்ற நியமமில்லை. தே கச்சத : என்றால் தே என்பது (ஸ்த்ரீலிங்க) த்விவசனம் என்றும் தே கச்சந்தி என்றால் (புல்லிங்க) பஹுவசனமென்றும் கொள்வது போல் ப்ரக்ருதத்திலும். "மேல்பதங்கள் அந்வயிக்க மாட்டாவே என்று ஸஹஸா சொல்லிவிட வேண்டா. தைவ்யா ஹோதாரா என்பவை த்விவசநாந்தமத்தனை." என்பது, சுக்லாம்பரதரம் என்பது பீதாம்பரனைவிட்டு மற்றொருவனைத்தான் சொல்லுகிறது. அப்படியானால் விஷ்ணும் என்ற மேல்பதம் அந்வயிக்கமாட்டாதே என்று ஸஹஸா சொல்லிவிடவேண்டா. சுக்லாம்பரதரன் வேறொருவன்தான்" என்பது போன்றது.

4. "ச்ரத்தயா தேவ:" என்கிறவிடத்தில் சொல்ல வேண்டியதை எல்லாம் உத்யான பத்திரிகை கீலக ஆவணி ஸஞ்சிகையில் சொல்லியிருக்கிறோம். வித்வான்கள் எல்லோரும் இங்கே ச்ரத்தயா தேவ: என்றுதான் பதவிபாகம் செய்கின்றார்கள். இது தான் மீமாம்ஸாந்யாயங்களை அநுஸரித்து சொல்ல வேண்டிய அர்த்தத்திற்குத் தகுந்த பதவிபாகம், ஆனால் ஸ்வரம் இதற்கு விருத்தமாயுள்ளது. அதை வ்யத்யயம் என்று கொள்ளவேணும் ப்ராஹ்மணத்தில் பலவிடங்களில் வ்யத்யயம் காணப்படுகின்றது. யோகஹமஸ்மி ஸஸந் யஜே, என்கிறவிடத்தில் யச்சப்தமிருப்பதால் அஸ்மி என்பது ஆத்யுதாத்தமாக இருக்க வேண்டும். ஸர்வாநுதாத்தமாகவே இருக்கிறது. இப்படியே "யதநேந ஹவிஷாசாஸ்தே" என்கிறவிடத்தில் சாஸ்தே என்கிற பதம் "ஆசாஸ்தேயம் யஜமாநோஸௌ" என்கிறவிடத்தில் போல் ஸர்வாநுதாத்தமே. இந்த வ்யத்யயத்திற்கெல்லாம் பொருளுண்டு. அதை அறிய முயல வேண்டுமேயன்றி ஸாதாரணமான ஸ்வரத்தைப் பிடித்துக் கொண்டு பொருளைப்பற்றிச் சிந்தை செய்யாமலும் அதை அநாதரித்தும் பாஷ்யகாரர்களை தூஷித்தும் சொல்வதெல்லாம் புத்திமான்கள் ஆதரிக்கக் கூடியதன்று. அர்த்தம் ப்ரதானம் ஸ்வரம் அப்ரதானம். மீமாம்ஸையில் இந்த்ரபீதாதிகரணம் என்பது ஒன்று. அதில் இந்த்ரபீதஸ்ய என்பது தத்புருஷனா பஹுவ்ரீஹியா என்று ஸந்தேஹம் வைத்து தத்புருஷன் என்று பூர்வபக்ஷம் பண்ணி பஹுவ்ரீஹி என்று ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. இதில் ஸ்வரம் பஹுவ்ரீஹிக்குத் தான் அநுகூலம். ஆகிலும் பஹுவ்ரீஹியில் இரண்டு பதங்களுக்கும் லக்ஷணை வருமாகையால் ஸ்வரத்தை அநாதரித்து பூர்வ பதத்திற்கு மட்டும் லக்ஷணை உள்ள தத்புருஷனைக் கொள்ள வேண்டுமென்பது பூர்வபக்ஷம்.

பதகாரர் ஒரு வழி செல்கின்றார். பாஷ்யகாரர்கள் சிலவிடங்களில் மற்றொரு வழியுமுண்டு என்று கருதி பாஷ்யம் இடுகின்றார்கள். பதபாடத்திற்கு விருத்தமென்று இவ்விடங்களில் குறை கூறுவது தகாது. விமர்சனம் எடுத்த இடங்களில் ஒன்றிலும் பாஷ்யகாரர்கள் அஞ்ஞானத்தினால் அல்லது ப்ரமத்தினால் அந்யதா சொன்னார்கள் என்பது இல்லையென்பதை நிரூபணம் செய்தோம், இந்த விமர்சனத்தின் வழி சென்றால் பதபாடத்திலேயே பல விமர்சங்கள் செய்யலாம்.

1. யதி தாஜக்ப்ரஸ்கந்தேத் என்றவிடத்தில் ப்ரஸ்கந்தேத் என்பதைப்போல யத் த்ரி: ப்ராயச்சத் என்கிறவிடத்தில் ப்ராயச்சத் என்பதையும் ப்ர என்பதை அநுதாத்தமாகக் கொண்டு ஒரு பதமாகப்படித்து வேஷ்டனை சொ லவேண்டும். ஆனால் ப்ர உதாத்த தனிப்பதமாகவும் அயச்சத் தனிப்பதமாகவும் படிக்கப்பட்டிருக்கின்றன. இது ஏன்? ஸந்தியினால் ப்ர உதாத்தமாயிற்றேயன்றி ஸ்வயம் அநுதாத்தம் தானே. திஙி சோதாத்தவதி என்ற ஸூத்திரத்தினால்.

2. த்வோ வேத, த்வம் வேத என்ற இடங்களில் த்வ: என்பதும் த்வம் என்பதும் ப்ரதமாந்தமும் த்விதீயாந்தமுமான தனிப்பதங்கள். இவற்றை வேதவோடு சேர்த்து ஒருபதமாகப் படித்து வேஷ்டனை சொல்வது ஏன்? இங்கு ஸமாஸம் அப்ராமாணிகம். அநுசாஸனமில்லை.

3. ஆஸந்தீ என்கிற பதம் இரண்டு இடங்களில் வருகிறது. ஒரு இடத்தில் வேஷ்டனை சொல்லப்படுகின்றது. மற்றோரிடத்தில் இல்லை. ஏன்?

4. வைச்வாநரோ ந ஊத்யா ப்ரயாது என்கிறவிடத்தில் ஸ்வரத்திற்கு அநபேக்ஷிதமான 'ஆ' உபஸர்கத்தை ஊத்யா என்பதற்குப் பிறகு படித்தது ஏன்?

5. ரிக்ஸாம சப்தம் அகாராந்தமாகப் பாணிநிஸூத்ரத்தினால் அநுசாஸநம் செய்யப்பட்டிருக்கிறது. ரிக் ஸாமயோ: என்றுஸம்ஹிதையிலும் இது ஸ்பஷ்டமாயிருக்கிறது. இப்படியிருக்க ரிக்ஸாமாப்யாம் என்றவிடத்தில் ரிக் ஸாமாப்யாமிதி ரிக்—ஸாமாப்யாம் என்று அவக்ரஹ வேஷ்டனைகள் செய்யப்படவேண்டியிருக்க ரிக்ஸாமாப்யாமிதி ரிக் ஸ ா ம - ப் ய ா ம் என்று படித்தது ஏன்? நகராந்தமாக இருந்தாலன்றோ இது ந்யாய்யமாகும்.

6. இப்படியே அந்யோந்யஸ்ய இத்யாதி பல இடங்கள் உண்டு. இவையெல்லாம் பல வருஷங்களுக்கு முன்பே எடுத்துக் காட்டப்பட்டவை.

## 2. ரூபக பரிசுத்தி

''பாராசர்ய வசஸ்ஸுதாம்'' என்கிற ஸ்ரீபாஷ்ய ச்லோகத்தில் வசஸ்ஸுதாம் என்பது ரூபகாலங்காரம் என்றும் இங்கு ஸமாஸம் ''உபமிதம் வ்யாக்ராதிபி: ஸாமாந்யாப்ரயோகே'' என்கிற ஸூத்ரத்தினுல் விதிக்கப்பட்டது என்றும் ச்ருதப்ரகாசிகையில் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஸூத்ரத்தினுல் விதிக்கப்படுவது உபமாலங்காரத்திற்கேற்ற ஸமாஸமேயன்றி ரூபகாலங்காரத்திற்கேற்ற ஸமாஸமன்று என்று நவீன ஆலங்காரிகர்களுடைய ஸித்தாந்தம். இது ஸரியன்று. ரூபகாலங்காரத்திற்கேற்ற ஸமாஸமே இந்த ஸூத்திரத்தினுல் விதிக்கப்படுகின்றது. ஆகையால் ச்ருதப்ரகாசிகா ஸூக்தி ஸங்கதமே என்று நிரூபணம் செய்வதற்காக எழுதப்பட்டது ரூபகபரிசுத்தி என்கிற நம்முடைய க்ரந்தம். இதில் வையாகரணர்களே நம் பக்ஷத்திற்கு அநுகூலமாகச் சொல்லியிருக்கிறுர்கள் என்பதைக் காட்ட பட்டோஜி திக்ஷிதர் ப்ரௌடமநோரமை என்கிற அவர் க்ரந்தத்தில் சொன்னதை உதாஹரித்தோம்.

''பாஷ்யாப்தி: க்வாதிகம்பீர:'' என்பது மஹாபாஷ்ய வ்யாக்யான ஆரம்பத்தில் உள்ள கையடர் என்கிற மஹா வையாகரணருடைய ச்லோகம். வெகு கம்பீரமான மஹாபாஷ்யமாகிற ஸமுத்ரம் எங்கே'' என்பது இதன் அர்த்தம். இங்கு ''பாஷ்யாப்தி'' என்பது கீழ் உதாஹரிக்கப்பட்ட பாணிநி ஸூத்திரத்தினுல் விதிக்கப்பட்ட உபமித ஸமாஸம். உபமிதஸமாஸம் என்றுல் 'உபமித' என்று தொடங்கும் ஸூத்ரத்தினுல் விதிக்கப்பட்ட ஸமாஸம் என்பது அர்த்தம். உபமாலங்காரத்திற்கேற்ற ஸமாஸம் என்பது அன்று. பாஷ்யமேவ அப்தி: என்பது விக்ரஹம். இங்கு ஒரு ஸந்தேஹம் வருகிறது. ஸூத்ரத்தில் ''ஸாமாந்யாப்ரயோகே'' என்ற ஒரு பதம் இருக்கிறது. ஸாமாந்யம் ஸாதாரண தர்மம். உபமானத்திற்கும் உபமேயத்திற்கும் பொதுவான தர்மம். காந்திமான் முக சந்த்ர: என்ற விடத்தில் முகம் உபமேயம். சந்த்ரன் உபமானம் காந்தி ஸாதாரண தர்மம், முகம் சந்த்ரன் இரண்டிலுமுள்ளது. இந்த தர்மம் ப்ரயோகிக்கப் படாமலிருந்தால் இந்த ஸமாஸம் வரும், ப்ரயோகிக்கப்பட்டால் வராது என்பது ''ஸாமாந்யாப்ரயோகே'' என்றதன் பொருள். பாஷ்யாப்தி: என்கிற விடத்தில் ''அதிகம்பீர:'' - வெகு கம்பீரமான என்று— ஸாமாந்யம், அதாவது ஸாதாரண தர்மம் ப்ரயோகிக்கப் பட்டிருக்கிறது. அப்படியிருக்க இந்த ஸூத்ரத்தினுல் விதிக்கப்படும் ஸமாஸம் இங்கே எப்படி வரும், என்பது அந்த ஸந்தேஹம்.

இதைப் போக்க பட்டோஜி தீக்ஷிதர் கூறியிருக்கும் ஸமாதான மாவது :—

ஸாமாந்யம் இரண்டுவிதம். கருதப்பட்டதும் கருதபடாததும். இது வடமொழியில் விவக்ஷிதம் என்றும் அவிவக்ஷிதம் என்றும் கூறப்படும். பாஷ்யாப்தி என்று ஸமாஸம் பண்ணும்போது பாஷ்யத்திற்கும், ஸமுத்ரத்திற்கும் கருதப்பட்ட ஸாமாந்யம் பரப்பு, எளிதாக அவகாஹிக்க முடியாமலிருப்பது, என்பவை போன்றது. இது ப்ரயோகிக்கப்படவில்லை யாகையால் ஸமா ஸத்திற்குத் தடையில்லை. ப்ரயோகிக்கப்பட்ட காம்பீர்யம் என்ற ஸாமாந்யம் கருதப்படாத ஒன்று, ஆகையால் அது ஸமாஸத்தைத் தடுக்காது என்பது.

இப்படி வையாகரணர்கள் சொல்லும் ஸமாதானம் பட்டோஜி தீக்ஷிதருக்கு முன்பட்ட காலத்திலேயே சொல்லப்பட்டு வந்தது என்பது ஸ்வாமி தேசிகன் தத்தவடீகையில் பாராசர்ய வசஸ் ஸுதாம் என்ற ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியின் விவரணத்தில் இதே ஸமாதானத்தை ஸாதித்திருப்பதால் தெரிகிறதென்று அந்த ஸ்ரீ ஸூக்தியை உதாஹரித்துக் காட்டியிருக்கிறோம். ச்ருதப்ரகாசிகை யிலும் இந்த ஸமாதானம் ஸூசிப்பிக்கப்பட்டிருப்பதால் ப்ராசீன வையாகரணர்கள் கூறி ஸம்ப்ரதாயமாகச் சொல்லப்பட்டு வந்த ஸமாதானமேயன்றி இது தேசிகன் ஸ்வயமே ஸாதித்த ஸமாதான மன்று. இந்த ஸமாதானம் சொன்ன ப்ராசீனர்களுக்கு இப்படியே தான் "ஸாமாந்யாப்ரயோகே" என்பதற்கு அர்த்தம் சொல்ல வேணும் என்ற அபிநிவேசம் இல்லை. "பாஷ்யாப்தி: க்வாதி கம்பீர:", "பாராசர்யவசஸ்ஸுதாம் உபநிஷத் துக்தாப்திமத் யோத்த்ருதாம்" "காந்திமான் முகசந்த்ர:" என்று சாஸ்த்ரங்களி லும் காவ்யங்களிலும் ஸாமான்யப்ரயோகம் இருக்கும் போதே ஸமாஸமும் வெகுவாகக் காணப்படுவதால் இதற்கு விரோதமில் லாமல் ஸாமாந்யாப்ரயோகே என்பதற்கு அர்த்தம் சொல்லவேண் டும். அதற்கு ஒருவழி விவக்ஷிதஸாமாந்யம் அவிவக்ஷிதஸாமாந்யம் என்று ஸாமாந்யத்தை இரண்டுவிதமாகப்பிரித்து விவக்ஷிதஸாமாந் யம் கூறப்படாமையால் ஸமாஸம் ஸாது வ்யாகரணவிருத்தமன்று என்று காட்டப்பட்டது. இதில் ஏதாவது குறையிருக்குமானல் வேறுவிதமாகவும் பொருள் கூறி ஸமாஸத்தை ஸாதுவாக்கலாம். எப்படியும் ஸாமாந்ய ப்ரயோகமுள்ள ஸமாஸம் விருத்தமன்று என்ற இவ்விஷயத்தில் ப்ராசீனர்களுக்கு அபிநிவேசம். "ஸாமாந் யாப்ரயோகே" என்பதற்கு தாம் சொன்ன பொருளே பொருள். அதைக்கொண்டுதான் ஸமாஸம் ஸாது என்று உபபாதிக்கவேணும் என்று இப்படி ஆக்ரஹமில்லை என்று கூறி இதில் உண்மையில் குறை இருக்கிறதென்று எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

ப்ரயோகிக்கப்பட்ட ஸாமாந்யத்தை அவிவக்ஷிதம் என்று விடுவது ஒரு குறை கூறப்படாத ஸாமாந்யத்தை விவக்ஷிதம் என்று கொள்வது ஒரு குறை. ச்ருதஹானம் அச்ருதகல்பனம் என்று இவ்விரண்டு குறைகளும் ஸம்ஸ்க்ருதத்தில் கூறப்படும். இனி ''ஸகல கல: புரசந்த்ர:'' என்றவிடத்தில் ''நகரமாகிய சந்த்ரன் ஸகலகலம் — சந்த்ரன் ஸகல கலைகளையும் உடையவன். நகரம் கல கல சப்தமுள்ளது என்று ச்லேஷத்தினால்—ஸகலகலத்வம் ஸாமாந்யம். இதுவே விவக்ஷிதம் அவிவக்ஷிதமன்று, விவக்ஷிதம் வேறென்று கிடையாது. ஆகையால் இந்த இடத்தில் புரச்ந்த்ர: என்ற ஸமாஸம் அஸாதுவாகும். இது ஒரு குறை-

இக்குறைகள் இருப்பதால் ப்ராசீனர்களுக்குத் தாம் சொன்னதுவே வழி என்ற கருத்தில்லை தகுந்தவேறுவழியையும் பின்பற்றலாம். எப்படியும் ஸமாஸம் குற்றமற்றது என்று கொள்ளவேண்டுமென்பது கருத்து என்று கூறினோம். அங்குள்ள நம்முடைய சொற்கள் இவை :

தஸ்மாத் ஸாமாந்யப்ரயோகவத: 'ஸமாஸஸ்ய ஸர்வதா ஸாதுத்வ ப்ரதிபாதந ஏவ தேஷாம் ஸம்ரம்ப:. ந து ஸாமாந்யாப்ரயோக இத்யஸ்ய உக்த ஏவார்த்தோ க்ராஹ்ய இத்யத்ர.

இங்கு ''ப்ராசீனர்கள் கூறிய பொருளிலும் ஸமாதானத்திலும் குறையிருக்கிறது'' என்று இதைக் காட்டி ஒருவர் அவர்களை தூஷிக்கப்புகுந்தால் அவர்களுக்கு இப்படியே பொருளும் ஸமாதானமும் கூறவேண்டுமென்று ஆக்ரகமில்லை. இது போன்ற ஒரு ஸமாதானம் கூறி ஸமாஸத்தை எவ்விதத்திலும் வ்யாகரணஸம்மதமாக்க வேண்டுமென்பது அவர்கள் கருத்து என்று அவர்களை பூஷித்திருக்கிறோமேயன்றி தூஷிக்கவில்லையென்பது ஸ்பஷ்டம். முன்னோர்களின் க்ரந்தங்களில் எங்காவது அநுபபத்தி தோன்றினல் இப்படி ஸமர்த்தனம் செய்வது பின்புள்ள ஆசார்யர்கள் பின்பற்றிய முறை. இதற்கு நிதர்சனமாக ஓரிடம் காட்டுகிறோம்.

ஆளவந்தார் ஆத்மஸித்தியில் ஸம்யோகம் என்கிற குணத்திற்கு லக்ஷணம் சொல்லி ''இதுவே குணகர்மாதிகளில் இருக்கும் போது ஸமவாயம் என்று வைசேஷிகர்களால் சொல்லப்படுகிறது'' என்கிறார். ஸம்யோகம் த்ரவ்யத்திலிருக்குமேயன்றி குணதிகளில் இருக்காது என்பது ஸித்தாந்தம். இதற்கு விருத்தமாயிருக்கிறது ஆத்மஸித்தி ஸ்ரீஸூக்தி. ஆகையால் இந்த ஸ்ரீஸூக்தியை எடுத்து

இதில் அநுபபத்தியிருப்பதை விளக்கி இதற்கு தாத்பர்யம் வேறு என்று ஸ்ரீந்யாய ஸித்தாஞ்ஜனத்தில் ஸ்வாமி ஸாதிக்கின்றார். இப்படிப் பல இடங்கள் உண்டு. முன்னோர்கள் தவறிவிட்டார்கள், தெரியாமல் சொல்லிவிட்டார்கள் என்றால் இது தூஷணமாகும். அவர்களுக்கு தாத்பர்யம் வேறு. அநுபபந்நமான விஷயத்தில் அவர்களுக்கு கருத்து இல்லை என்று உபபாதித்தால் இது அவர்களுக்கு மண்டனமேயன்றி கண்டனமில்லை. எம்மாவீட்டுத் திருவாய்மொழி எட்டாம்பாட்டு ஈட்டில் "இதற்கு ஆளவந்தார் அருளிச்செய்யும்படி" என்று ஒரு தாத்பர்யத்தை சொல்லிப் பிறகு

> இத்தை எம்பெருமானார் கேட்டருளி. "இது பொருள் அழகியது. இவ்வாழ்வாருடைய ப்ருக்ருதிக்கு சேராது. பெறிலும் பெறுதொழிலிலும் சிறுகக்கோலமாட்டார். இங்ஙனே யாகவேணும் என்றருளிச்செய்வர்.

என்று தாத்பர்யாந்தரம் சொன்னவிடத்தில் ஆளவந்தாருக்கு கண்டனமே உள்ளது. தேசிகன் ஸாதித்த விடத்திலும் அதுபோல் நாம் சொன்னவிடத்திலும் கண்டநாபிப்ராயம் சிறிதுமில்லை.

வஸ்துஸ்திதி இப்படியிருந்தும் நாம் தேசிகதூஷணம் பண்ணிவிட்டதாக, தூஷணம் பாமரர்ாளுக்கு ப்ரமத்தை உண்டுபண்ணி வருகிறது. பல வருஷங்களுக்கு முன்பே இது இப்படி ப்ரசாரம் செய்தது. உண்மையை 1953ம வருஷம பிப்ரவரி மார்ச்சு மாஸத்து உத்யான பத்ரிகையில் குணஸம்ருத்தி என்ற தலைப்பின் கீழ் விளக்கினேம். இப்பொழுது மறுபடியும் அதே தோஷத்தை கோஷித்துவருகிறது. எந்த வாக்யத்தில எந்தபதத்தில தூஷணாபிப்ராயம் தோற்றுகிறது சொல்லவேணும், என்று பலதடவை கேட்டும் "தூஷித்தாய்" என்று மட்டும் சொல்லி வருகிறது. ஆகையால் இப்பொழுது தமிழிலும் உண்மையை விளக்கினேம்.

பாஷ்யாப்தி : க்வாதிகம்பீர: என்றவிடத்தில் அதிகம்பீர: என்ற ஸாமான்யம் அவிவக்ஷிதம். விஸ்த்ருதம் அகாதம் என்ற இப்படிப்பட்ட ஸாமான்யம் விவக்ஷிதம். இது ப்ரயுக்தமன்று. ஆகையால் ஸமாஸம் வரலாம் என்ற இந்த ப்ராசீன வையாகரணர்களுடைய ஸமாதானம் அர்வாசீன வையாகரணர்களாலேயே கைவிடப்பட்டது, அதிகம்பீர: என்கிற இதுதான் விவக்ஷித ஸாமான்யம், இது ப்ரயுக்தமானபடியால் இங்கு உபமித ஸூத்ரத்தினால் விதிக்கப்பட்ட ஸமாஸம் வராது. "மயூரவ்யம்ஸகாதயச்ச" என்று மற்றொரு ஸூத்ரத்தில் விதிக்கப்பட்ட ஸமாஸம் இது என்கிறார்கள் இவர்கள். இது பரிணமாலங்காரப்ரகரணத்தில்

அத்ர உதாஹரணம்:—ப்ராஸந்நேந த்ருகப்ஜேந வீக்ஷதே மதி ரேக்ஷணா. அத்ர ஹி அப்ஜஸ்ய வீக்ஷணோபயோகித்வம் நிபத் யதே. ந து த்ருச:, மயூரவ்யம்ஸகாதி ஸமாஸேந உத்தரபதா தார்த்த ப்ராதான்யாத். ந ச உபமிதஸமாஸாச்ரயணேந த்ருக் அப்ஜம் இ இதி பூர்வபதார்த்த ப்ராதான்யமஸ்து இதி வாச்யம். ப்ரஸந்நேநேதி ஸாமாந்யதர்மப்ரயோகாத். 'உப மிதம் வ்யாக்ராதிபி: ஸாமாந்யாப்ரயோகே' இதி ததப்ர யோக ஏவ உபமித ஸமாஸாநுசாஸநாத்.

என்று குவலயாநந்தத்தில் அப்பைய தீக்ஷிதருடைய உபபாதநத்தி னால் வ்யக்தம் ஆகவே ப்ராசீன வையாகரணர்களுடைய ஸமா தானம் த்ருப்திகரமானதன்று என்பது பின்பு வந்த வையாகரணர் களாலேயே அங்கீகரிக்கப்பட்ட விஷயம். நாம் அதை மேலும் விளங்க வைத்தோம். ப்ராசீன வையாகரணர்களுக்கும் தாம் சொன்ன ஸமாதானமேதான் ஸரி. மற்றொரு ஸமாதானம் சொல்லமுடியாது, சொல்லக்கூடாது என்று அபிநிவேசமில்லை. எப்படியாவது ஸமாஸத்தை ஸாதுவாக்கவேணுமென்பதிலேயே நோக்கு என்று சொன்னோம். ஆகையால் அர்வாசீனர்கள் இந்த ஸமாதானத்தை உபேக்ஷித்ததும், அதற்குக் காரணமாய் அதி லுள்ள தோஷங்களை நாம் எடுத்து உரைத்ததும் ப்ராசீனர்களுக்கு தூஷணமாகாது ஸ்வதராம் தேசிகதூஷணமன்று.

திருவாய்மொழி 2-5-8ல் எம்பெருமானுரை வ்யாஜமாக வைத்து ஈடு ஆனந்தரனை ஸ்பஷ்டமாக தூஷித்திருக்கிறது. இதை எவரும் மறுக்கமுடியாது. அப்படி ப்ரக்ருதத்தில் இல்லை, "ப்ராசீனர் சொன்ன ஸமாதானத்தை அங்கீகரித்து தேசிகன் ஸாதிக்கின்றார். ஆகையால் இதை தூஷித்தால் தேசிகதூஷணமா காதோ" எனில ஆகாது இந்த ஸமாதானமே தான் சொல்ல வேணுமென்று தேசிகன ஸாதிக்கவில்லை. இதில் குற்றமிருந்து மற்றொரு ஸமாதானத்தை வையாகரணர்கள் சொன்னால் ஸ்வாமி அதை ஏற்காமலிருகக காரணமில்லை. வையாகரணர்கள் எவ்வித மாக ஸமர்த்தித்திருந்தாலும் தமக்கு இஷ்டம். ஸாமாந்ய ப்ர யோகமுள்ள ஸமாஸம் ஸாது எனபதில தமக்கு த்ருஷ்டி என்று திருவுள்ளம். இதனால் "இனி தேசிக ஸ்ரீஸூக்திகளில் எதுவும் ஸாவத்யமன்று" என்று சொல்லமுடியாதே" என்று தூஷணம் கொள்ளும் பக்ஷாந்தரத்திற்கு சிறிதும் அவகாசமில்லை யென்பது ஸ்பஷ்டம். என் முடியாது இது வையாகரணர் சொன்னதன்றோ; ஸ்வாமி ஸ்வதந்த்ரமாய் ஸாதித்ததன்றே; வையாகரணர்கள் சொன்னதற்கு, இதுவே ஸமாதானமென்று அவதாரணமில்லாமல ஸமாதாநாந்தரங்களுக்கு நிதர்சனமாய் அநுவாதமன்றோ இங் ள்குளது.

## 3. தேசிக ஸ்ரீஸூக்தி ஹ்ருதயம்

### 1. பராயத்தம்

ஜீவாத்மாவுக்கு கர்த்ருத்வமுண்டு. ஆனால் இந்த கர்த்ருத்வம் பராயத்தம், அதாவது ஈச்வராதீனம் என்று ப்ரஹ்ம ஸூத்ரத்தி லும் ஸ்ரீபாஷ்யத்திலும் இரண்டாவது அத்யாயம் மூன்றும் பாதத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது இந்த ஜீவாத் மாவினுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீனம் என்னும்போது ஒரு ஸந்தேஹம் வருகிறது. ஈச்வராதீனம் என்றால் என்ன. ஆற்று வெள்ளமும் பெருங்காற்றும் மனிதனை அடித்துக்கொண்டு போகி றதுபோல் ஈச்வரன் ஜீவாத்மாவை பரவசமாக்கி செய்விக்கின்றானா? அல்லது அரசன் தன் வேலைக்காரனைக் கட்டளையிட்டுச் செய்விக் கின்றதுபோல் செய்விக்கின்றானா ? அல்லது ஜீவன் தன் சரீரத்தை இயங்க வைப்பது போல் ஈச்வரன் இவனை இயங்க வைக்கிறானா ? அல்லது வேறு விதமாகவா - என்று.

இவற்றில் முதல் பக்ஷத்தில் மரம் மட்டை முதலானவை போல் ஜீவனின் விருப்பம் ப்ரயத்னம் எதுவுமின்றி உடல் மட்டும் போய்க்கொண்டிருப்பதால் ஜீவாத்மாவுக்கு கர்த்ருத்வமே இல்லை. ஆகையால் அதன் கர்த்ருத்வம் பராதீனம் என்பதற்கு இடமில்லை. இரண்டாவது பக்ஷத்தில் கட்டளை இட்டதற்குப் பிறகு வேலைக் காரன் செய்யும் கார்யத்தில் இவனே ஸ்வதந்த்ர கர்த்தாவாகிறான் அரசனுக்கு இதில் எவ்வித ஸம்பந்தமுமில்லை. கட்டளை இடப் பட்ட கார்யத்தைச் செய்கிறான், என்பதனாலே மட்டும் வேலைக் காரன் பரதந்த்ரன் ஆகின்றானேயன்றி அவன் கர்த்ருத்வம் பரா தீனமன்று. அவன் ஒருவனே செய்கின்றானாகையால்,

இனி மூன்றும் பக்ஷத்தில் உடலுக்குள்ளிருக்கும் ஈச்வரனே ஜீவனை உபகரணமாக்கி கார்யங்களைச் செய்கின்றானாகையால் இவன் தன்னிச்சையால் முயன்று எதையும் செய்ய இயலாது என்ற தாகிறது. அப்போது விதி நிஷேத சாஸ்த்ரம் பயனற்றதாகும். தானே ஒன்றைச் செய்யக்கூடிய சக்தி உள்ளவனைக் குறித்தே யன்றோ 'இதைச் செய், இதைச் செய்யாதே' என்ற விதி நிஷேதங் கள் ப்ரவர்த்திக்கும். எல்லாக்காரியங்களையும் ஈச்வரனே ஸ்வதந்த் ரனாய் தன்னிச்சைப் படி செய்விக்கும்போது அவனுக்குப் பரதந்த் ரனாய் அவனிஷ்டப்படி செய்யும் ஜீவனுக்குத் தானே ஒன்றைச் செய்யவோ விடவோ யோக்யதை இல்லையாகையால் அவனைக் குறித்தே ப்ரவர்த்திக்கும் விதி நிஷேதங்கள் வ்யர்த்தங்களே.

இந்த ஆக்ஷேபத்தைப் பரிஹரித்து இப்பக்ஷத்தையே பரிஷ்கரித்து ஸித்தாந்தமாக்குகின்றார் ஸூத்ரகாரர். ஜீவன் செய்யும் ப்ரயத்னத்தை அபேக்ஷித்து, அதாவது அதைக் காரணமாகக் கொண்டு, மேலுள்ள கார்யத்தைக் செய்விக்கின்றான் பகவான் என்கிறார் அவர். இதை விவரிக்கும் ஸ்ரீபாஷ்யகாரர் ஸூத்ரத்திலுள்ள 'ப்ரயத்னம' என்ற சொல்லுக்கு 'உத்யோகம்' என்று பொருள்கூறி எல்லா க்ரியைகளிலும் புருஷன் செய்த ப்ரயத்னத்தை அபேக்ஷித்து அந்தர்யாமியான பரமாத்மா அவற்றுக்கு அநுமதி கொடுத்து ப்ரவர்த்திப்பிக்கின்றான், என்று அருளிச் செய்கிறார். இங்கு ஒரு த்ருஷ்டாந்தமும் கொடுக்கப்பட்டிருக்கிறது. இருவருக்குப் பொதுவான ஒரு வஸ்துவை அவர்களுக்குள் ஒருவன் மற்றொருவனுடைய அநுமதியின்றி வேறொருவனுக்கு தானம் செய்வது கூடாது ஆகிலும் மற்றொருவனுடைய அனுமதியினால் தானம் செய்தது இவனேயாகையால் தான பலம் இவனுக்கே யாகும். அதேபோல் ஜீவன் செய்யும் ப்ரவ்ருத்திகளில் இவன், ஈச்வரன், இருவரும் கர்த்தாக்கள். செய்கின்றானகையால் ஜீவன் கர்த்தா. தடுக்காமல் இவன் இதைச் செய்யட்டும் என்று அநுமதி பண்ணுகின்றான் ஆகையால் ஈச்வரன் கர்த்தா. ப்ரமாணங்களைக் கொண்டு இந்தப் பலனுக்கு இது ஸாதனமென்றறிந்து அப்பலனை விரும்பி அதன் ஸாதனத்தை அனுஷ்டிக்க யத்னம் செய்யக்கூடிய யோக்யதை உள்ளவனாகையால் ஜீவன் விதிநிஷேதங்களுக்கு விஷயமாகலாம். அதனாலேயே ஈச்வரனுடைய நிக்ரஹ அநுக்ரஹங்களுக்குப் பாத்ரமுமாகலாம். ஈச்வரன் தடுக்காமல் கூடவே இருந்து இது நடக்கட்டும் நடக்கட்டுமென்று அனுமதி பண்ணிக் கொண்டிருக்கிறானகையாலும் இந்த அநுமதியில்லா விட்டால் ஜீவன் தன் கார்யத்தை நிறைவேற்றமுடியாதாகையாலும் ஜீவனுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்பதும் கூடும். இனி இந்த வ்யவஸ்தைக்குப்ரமாணமெனன? உள்ளே ப்ரவேசித்து ஸர்வஜனங்களேயும் நியமிக்கிறான் ஸர்வாத்மாவான பகவான் என்ற ச்ருதிக்கு ஸங்கோசம் வராதபடி ஸர்வ ஸ்வதந்த்ரனை அவனே எல்லாக் காரியங்களையும் செய்விக்கிறான். ஜீவனுக்குக் கொஞ்சமும் ஸ்வதந்த்ரத்வம் இல்லை. அத்யந்த பரதந்த்ரன் இவன் என்று ஏன் கொள்ளக்கூடாது எனில் விதிநிஷேதங்களுடைய வையர்த்த்ய ப்ரஸங்கமே ப்ரமாணமென்கிறார் ஸூத்ரகாரர்.

இனி இங்கு சில விஷயங்கள் கவனிக்கப்படவேண்டும். ஜீவன் "இது பலம், இதற்கு ஸாதனம்'' இது என்று அறிகிறான். பிறகு இந்தப் பலத்தை நான் அடையவேணும். அதற்காக அதன் ஸாதனமான இந்தக் கர்மாவை நான் செய்யக்கடவேன் என்று

விரும்புகின்றான். அதன் பிறகு ப்ரயத்னம் செய்கின்றான் இந்த ப்ரயத்னத்தினால் வெளியில் காணக்கூடியதும் சரீரத்தில் உள்ளதுமான ப்ரவ்ருத்தி எனப்படும் க்ரியை அல்லது கர்மம் உண்டாகின்றது. ஸாதனமென்பது ஒன்றாயிருந்தாலும் அங்கியும் அங்கங்களுமாக பல க்ரியைகள் இருக்கும் இவையெல்லாம் ப்ரவ்ருத்தி எனப்படும் இப்ரவ்ருத்திகளில் முதல் ப்ரவ்ருத்தியில் ஜீவன் ஸ்வதந்த்ரன். அதில் ஈச்வரனுக்கு கர்த்ருத்வம் கிடையாது. மேல் ப்ரவ்ருத்திகளில் எல்லாம் அநுமதி பண்ணி அவன் கர்த்தாவாகிறான் முதல் ப்ரவ்ருத்தியில் ஸ்வதந்த்ரனாய் கர்த்தாவாகின்றபடியால் ஜீவன் விதிநிஷேதங்களுக்கு போக்தாவாகிறான். ப்ரவ்ருத்தியின் பலனும் அவனுக்கே உண்டாகிறது ப்ரவ்ருத்திக்குமுன் ஜீவாத்மாவுக்குள்ள முதல் ஜ்ஞான இச்சா யத்நங்களில் ஈச்வரன் ஸாதாரண காரணம். வாஸநாதிகள் விசேஷ காரணம். முதல் ஜ்ஞானம் இச்சை ப்ரயத்னம் ப்ரவ்ருத்தி என்ற இவற்றில் "இந்த ஜீவனுக்கு இப்போது இந்த ஜ்ஞானாதிகள் உண்டாகட்டும்" என்று ஈச்வரன் ஸங்கல்பம் செய்கிறதில்லை. ஆகையால் இவற்றில் அவன் உதாஸீனன். ஜீவன் ஸ்வதந்த்ரனாய் தானே இவற்றை உண்டாக்கிக் கொள்கின்றான். இரண்டாவது ஜ்ஞானம் முதலியவற்றில் ஈச்வரன் இவை உண்டாகட்டுமென்று ஸங்கல்பித்து அநுமந்தாவும் அதனால் கர்த்தாவுமாகிறான். ஆகையால் இரண்டாவது ஜ்ஞான இச்சா யத்ன ப்ரவ்ருத்திகளில் ஈச்வராதீனம் ஜீவனுடைய கர்த்ருத்வம். முதல் ஜ்ஞானாதிகளில் ஸ்வதந்த்ர கர்த்ருத்வமே. இப்படியாகில் முதல் ஜ்ஞானாதிகளில் ஈச்வரனுக்குக் காரணத்வமில்லாமல் போகிறதே என்னில் விதிநிஷேதங்கள் வ்யர்த்தமாகாமைக்காக இதை அங்கீகரிக்கவேண்டும் என்பது ச்ருதப்ரகாசிகையில் ஸ்வரஸமாகத் தோன்றும் நிஷ்கர்ஷம்.

இங்கு ஸ்வாமி தேசிகனுடைய நிஷ்கர்ஷம் சிறிது மாறுபட்டதாகத் தோன்றுகிறது. ஈச்வரன் கரணம் என்கிற இந்த்ரியங்களையும் களேபரம் என்ற சரீரத்தையும் கொடுக்கின்றான். பூமி முதலானது போல் ஸ்வரூபத்தாலும் ஸங்கல்பத்தினாலும் நமக்கு ஆதாரமாயிருக்கிறான். கரண களேபரங்களை நம் இஷ்டப்படி நியமனம் செய்யக்கூடிய சக்தியையும் நமக்குத் கொடுத்திருக்கின்றான். நாம் எவற்றைப்பற்றி ப்ரவ்ருத்தி செய்யவேண்டுமோ அந்த விஷயங்களையும் காட்டி வைத்திருக்கின்றான். இவையெல்லாம் ஜீவன் கர்த்தா ஆவதற்கு அநுகூலமானவைகள். இவை இல்லாவிட்டால் ஜீவன் கர்த்தாவாக முடியாது. ஆகவே இவற்றால் வரும் கர்த்ருத்வம் பராயத்தமென்பதில் ஒரு ஆக்ஷேபமும் இருக்க நியாயமில்லை.

இப்படி கர்த்ருத்வத்துக்கு யோக்யனுகச் செய்யப்பட்ட ஜீவன் சாஸ்த்ரம் முதலான ப்ரமாணங்களாலே பலன்களையும் அவற்றின் உபாயங்களையும் அறிந்து ஒரு பலனை விரும்பி அதன் உபாயமான க்ரியையை அனுஷ்டிக்க யத்னம் செய்கிறுன். இந்த ஜ்ஞானம் இச்சை யத்னம் மூன்றும் உடையவனுகையால் ஜீவன் காத்தாவாகின்றுன். ஸர்வ காரியங்களுக்கும் காரணமான ஈச்வரன் இம்மூன்று உண்டாவதற்கும் காரணமாகையால் இம் மூன்றுல் ஆகிய கர்த்ருத்வம் அவனுக்கு அதீனம் என்பதிலும் ஸம்சயத்திற்கு இடமில்லை. ஜ்ஞான இச்சா ப்ரயத்னங்கள் உண்டாவதற்கேற்ற சக்திகளைக் கொடுப்பது எல்லா ஜீவன் விஷயத்திலும் ஸமானமாகையால் இவ்விஷயத்தில் ஈச்வரன் ஸாதாரண காரணமாகின்றுன். கரண களேபரங்களில் சக்தி ஜ்ஞானம் இச்சை இவை முதலானவை ஒவ்வொரு ஜீவனிடத்திலும் வெவ்வேறுக இருப்பதற்கு அந்தந்த ஜீவனுடைய அத்ருஷ்ட வாஸநா ருசிகள் விசேஷ காரணமாகையால் ஸாதாரண காரணமான ஈச்வரன் அவ்விஷயத்தில் உதாஸீனன் எனப்படுகின்றுன். இப்போது இந்த ஜீவனுக்கு இந்த விஷயத்தில் ஜ்ஞான இச்சா ப்ரயத்னங்கள் உண்டாகட்டும் என்று அபிஸந்தி பண்ணுகிறுனுகையால் அவற்றிலும் ஈச்வரனுக்கு அந்தர்யாமி ச்ருதி ஸித்தமான காரணத்வம் உண்டு. ஆகிலும் அவற்றிலுள்ள வைஷம்யத்திற்கு அந்தந்த ஜீவனுடைய அத்ருஷ்டாதிகளே காரணமாகையால் அவற்றிலும் ஈச்வரன் உதாஸீனன் என்பதில் ஸம்சயமில்லை. ஜ்ஞான இச்சா ப்ரயத்னங்கள் ஈச்வரன் ஸங்கல்பத்தால் உண்டாவதால் அவனுடைய ஸங்கல்பத்தை அபேக்ஷிக்கின்றனவாகிலும் இவை ஜீவனுடையவையாகையால் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் உண்டு. தேர் இழுக்கும் போது பலர் இழுத்தாலும் ஒவ்வொருவருக்கும் தான் இழுப்பதில் ஸ்வாதந்த்ர்யம் இருப்பதுபோல். இங்கு ஸ்வாதந்த்ர்யமாவது ப்ரவ்ருத்தி சக்தி இருக்க, மற்றொருவரால் தடுக்கப்படாமல் இருக்கும் தன்மை என்பது ச்ருதப்ரகாசிகையிலும் தாத்பர்ய சந்த்ரிகையிலும் ஸாதிக்கப்பட்டிருக்கிறது. இவ்வித ஸ்வாதந்த்ர்யமுள்ளவனுகையால் ஜீவன் சாஸ்த்ர வச்யனும் பலபோக்தாவும் ஆகின்றுன்.

ஆத்ம குணமான ப்ரயத்னத்திற்குப்பிறகு ப்ரவ்ருத்தி எனப்படும் க்ரியை உண்டாகிறது. உடம்பிலுள்ள க்ரியை உண்டாவதற்கான ப்ரயத்னம் என்ற க்ருதி ஜீவாத்மாவினிடத்தில் இருப்பதால் ஜீவன் க்ருத்யாச்ரயத்வரூப கர்த்ருத்வமுள்ளவனுகிறுன். ஈச்வரன் கூடவே இருந்து முதல் ப்ரவ்ருத்தி முதல எல்லா ப்ரவ்ருத்திகளுக்கும் அநுமந்தாவாயிருந்து கர்த்தாவாகிறுன். க்ரியாபலம் க்ருத்யாச்ரயனுன கர்த்தாவுக்கேயன்றி அனுமதிகர்த்தாவுக்கு இல்லை. இது தர்மிக்ராஹகப்ரமாணத்தால் ஸித்தம். இப்படி ஜ்ஞான இச்சா

ப்ரயத்னங்களிலும் இவற்ருல் உண்டாகும் முதல் ப்ரவருத்தியிலும் கூட ஈச்வரனுக்குக் காரணத்வமுண்டாகையால் ச்ருதிஸங்கோசம் சிறிதுமில்லை. ஈச்வரன் அனுமதியில்லாவிட்டால் ஒரு ப்ரவருத்தியும் உண்டாகாதாகையால் அநுமந்தாவான ஈச்வரனை அபேக்ஷித்தே ஜீவன் தன் ப்ரவ்ருத்திகளை செய்கின்ருனுகிலும், அதனுல் பராயத்த கர்த்ருத்வமே அவனுக்குள்ளதாகிலும் அதில் ஸ்வாந்த்ர்யமும் சாஸ்த்ர வச்யத்வாதிகளும் வருவதில் விரோதம் ஒன்றுமில்லையென்பதை முன்போல் உணரவேணும்.

இப்படி ச்ருதப்ரகாசிகையில் விதிநிஷேதங்களுக்கு வையர்த்த்யம் வராதபடி ஈச்வரநியந்த்ருத்வத்திற்கு ஸங்கோசம் அங்கீகரிக்க வேண்டியது அவச்யமாகிறது என்றும் தேசிகன் ஸ்ரீ ஸூக்திகளில் அவ்வித ஸங்கோசமில்லாத பராயத்தகர்த்ருத்வத்தை ஜீவனுக்கு நிர்வஹிக்கலாம் என்றும் தோன்றுகிறபடியால் இங்கே இந்த இரண்டு ஆசிரியர்களுக்கும் பரஸ்பரம் அபிப்ராயபேதம் இருக்கிறதென்பது யதாச்ருதத்தில் நாம் அங்கீகரிக்கவேண்டிய விஷயமாகின்றது. அபிப்ராயபேதம் இல்லை என்றவர்களும் உண்டு. ஆனுல் இப்போது நாம் அது இருப்பதாகவே வைத்துப் பேசுகின்ருேம்.

க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து என்ற ஸூத்ரத்தின் அர்த்தத்தை நாம் பராமர்சிக்கவேண்டும்.

**ஸர்வாஸு க்ரியாஸு புருஷேண க்ருதம்**
**ப்ரயத்னம் உத்யோகம் அபேக்ஷ்ய**

என்பது ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீ ஸூக்தி. இங்கு ச்ருதப்ரகாசிகை,

உத்யோகம் அபேக்ஷ்ய, இதி. அநேந ப்ரதம
ப்ரவ்ருத்திதசாயாம் பரஸ்ய உதாஸீநத்வம் தர்சிதம்.

என்று உள்ளது. இதனுல் ஸ்ரீ பாஷ்யத்திலுள்ள உத்யோக பதம் ப்ரதம ப்ரவருத்தியைச் சொல்லுகிறதென்றும் ஸூத்ரத்திலுள்ள ப்ரயத்னபதத்தின் அர்த்தம் இதென்றும் ச்ருதப்ரகாசிகாசார்யரின் கருத்தென்பது ஸ்பஷ்டம். இப்படி ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஈச்வரன் உதாஸீனனுகவே இருக்கிருன். இரண்டாவது ப்ரவ்ருத்தி முதல் அவன் அநுமந்தாவாகிருன் என்று ஸ்ரீ பாஷ்யத்தில் ஸாதித்திருக்க அதற்கு விருத்தமாக முதல் ப்ரவ்ருத்தியிலும் ஈச்வரன் அநுமதி பண்ணி ப்ரேரகனுகிருன் என்பது எப்படி என்னில், இங்கு ஸ்வாமி, இன்னும் சற்று உற்று நோக்கினுல் இந்த ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீ ஸூக்தி நாம் கூறும் பொருளுக்கே அனுகூலமாயிருக்குமென்கிருர். உத்யோகம் என்ற சொல் ப்ரவ்ருத்தியைச் சொல்லுகிறதென்றும் அதிலும் முதல் ப்ரவ்ருத்தியைச் சொல்லுகிறதென்றும் கொள்ளவேண்டிய அவச்யமில்லை. ஸூத்ரத்தில் உள்ள ப்ரயத்ன பதம் ஆத்ம

குணமான யத்னத்தில் ப்ரஸித்தம். சரீரக்ரியையான ப்ரவ்ருத்தியில் ப்ரஸித்தமன்று. ஆகவே ஸ்ரீ பாஷ்யத்திலுள்ள உத்யோக பதமும் ப்ரய்த்னம் என்ற ஆத்மகுணத்தையே கருதி ப்ரயோகிக்கப் பட்டிருக்கிறது. உத்யோகம் முயற்சி உத்யமம், இப்படி ஆத்ம குணமான ப்ரயத்னத்தை அபேக்ஷித்து, அதை ஹேதுவாகக் கொண்டு, மேலுள்ள ஸர்வ ப்ரவ்ருத்திகளிலும் அநுமதி பண்ணி ஈச்வரன் ப்ரேரகனுகிறுன். என்றிப்படி அவதானத்தோடு இந்த ஸ்ரீ பாஷ்யஸூக்தித் துணுக்கை ஆராய்ந்து பார்த்தால் தாம் ஸாதித்த பொருளிலேயே அது நோக்குள்ளது என்கிறுர் ஸ்வாமி.

''ஜீவ: ஸ்வேச்சயா ப்ரவ்ருத்தி நிவ்ருத்திஹேது
பூதம் ப்ரயத்னம் கரோதி. ஜீவேந து க்ருதம்
ப்ரதமப்ரவ்ருத்திஹேதும் அபேக்ஷ்ய ததநுமதிதாநேந''

என்கிற ஸார ஸ்ரீ ஸூக்தியையும்

ஜீவேந ஸ்வபுத்த்யா க்ருதப் ப்ரயத்னமபேக்ஷ்ய

என்கிற தீப ஸ்ரீ ஸூக்தியையும் கவனிக்கவேணும் என்றும் திருவுள்ளம். இங்கே ப்ரயத்னபதம் ப்ரவ்ருத்தி ஹேதுவான ஆத்ம குணபரமாகவே விவரிக்கப்பட்டிருக்கிறது ஸங்கோசப்ரஸங்க மில்லாத ச்ருதி மாத்ரமன்று நாம் சொல்லும் அர்த்தத்தில் ப்ரமாணம். ச்ருதப்ரகாசிகாவ்யாக்யானரீதியில் வேறு பொருளுடையதாகத்தோன்றும் ஸ்ரீபாஷ்யமும் இதே அர்த்தத்தைத்தான் சொல்லுகிறது என்றுர் ஸ்வாமி. இங்கு ஸ்ரீபாஷ்யாதி என்று ஆதிபதம் இருக்கின்றது. இது தத்த்வஸார ச்லோகத்தைக் குறிக்கும் என்கிறுர் சிந்தாமணிகாரர். ''தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய'' என்பது அந்தச் லோகம். இதற்கு சிலர் ''முதல் ப்ரவ்ருத்தியிலே உபேக்ஷையும் மேல் ப்ரவ்ருத்திகளிலே அநுமதியும்பண்ணி'' என்றுஅபிப்ராயம்கூறிஞல் அது யுக்தமன்று. 'தத்ர' என்பது கீழ்ச்சொல்லப்பட்ட ஜ்ஞான சிகீர்ஷாயத்னங்களைக் குறிக்கின்றது. ஒவ்வொரு ஜீவனும் தன் அத்ருஷ்டம் முதலானவற்றுக்கேற்ப ஜ்ஞான சிகீர்ஷாப்ரயத்னங்களைச் செய்து கொண்டிருக்கின்றுன். அவற்றில் உபேக்ஷை பண்ணியும் பிறகு அவனுடைய ப்ரவ்ருத்திகளில் அனுமதி பண்ணியும்'' என்பது அங்கு கருதப்பட்டிருப்பதால் அதுவும் நாம் சொல்லும் பொருளுக்கே அனுகூலம் என்பது ஆழ்ந்து பார்ப்பவர்களுக்குத் தெரியும் என்கிறதாகிறது.

ச்ருதிக்கு ஸங்கோசம் பண்ணுவது தோஷமாகும் ஆனுல் விதிநிஷேதங்களுக்கு வையர்த்த்யம் வாராமைக்காக எவ்வளவு ஸங்கோசம் வேணுமோ அதைமட்டும் அகத்யா அங்கீகரிக்க வேணும் என்கிறுர் வ்யாஸார்யர். அல்பஸங்கோசமும் இல்லா

மல் பராயத்த கர்த்ருவத்தை உபபாதிக்கலாமாகையால் அதை அங்கீகரிக்க வேண்டிய நிர்ப்பந்தமில்லை. பாஷ்யாதி க்ரந்தவிரோதமில்லை. ப்ரத்யுத ஆநுகூல்யமே உண்டு என்கிறார் ஸ்வாமி.

இப்படி தேசிகன் செய்தருளும் ஸித்தாந்தத்தையே மாமுனி பின்பற்றுகிறார். தத்தவத்ரயம் 35-வது சூர்ணிகையின் விவரணத்தில்

அந்த கர்தாவுக்கு தர்மமான ஜ்ஞான இச்சா ப்ரயத்னங்கள் பகவத் அதீனங்களாயிருக்கையாலும், அந்த ஜ்ஞானாதிகள் பகவத் அனுமதியொழிய க்ரியாஹேதுவாகமாட்டாமையாலும் இவனுடைய சர்த்த்ருவம் ஈச்வராதீனம் என்கிறது.''

என்கிறார் அவர். ஜ்ஞான இச்சா ப்ரயத்னங்களில் ஈச்வரன் உதாஸீனன் என்பது ச்ருதப்ரகாசிகாகாரர் பக்ஷம். அவற்றிலும் காரணம் ஈச்வரன் என்பது தேசிகன் பக்ஷம்.

''இவனுடைய புத்திமூலமான ப்ரயத்னத்தை அபேக்ஷித்து ஈச்வரன் அனுமதிதானம் பண்ணுகையாலே''

என்கிறார் மாமுனி. ச்ருதப்ரகாசிகையின்படி, ''ப்ரதம ப்ரவ்ருத்தியை அபேக்ஷித்து'' எனவில்லை.

அவனாலே உண்டாக்கப்பட்ட ஸ்வரூப சக்தியை உடையனான சேதனன் அவ்வோ பதார்த்தங்களிலே உத்பன்ன ஜ்ஞான சிகீர்ஷா ப்ரயத்னனாய்க் கொண்டு வர்த்தியா நிற்கும். அவ்விடத்தில் மத்யஸ்தனாகையாலே உதாஸீநரைப் போலேயிருக்கிற பரமாத்மா

என்று ஜ்ஞான சிகீர்ஷா ப்ரயத்நங்கள் வைஷம்யமுள்ளவையாயிருப்பதில் ஈச்வரன் உதாஸீநன் என்ற தேசிகன் திருவுள்ளத்தையே கூறுகின்றார். முடிவில்

இப்படி ஸர்வப்ரவ்ருத்திகளிலும் சேதனனுடைய ப்ரதம ப்ரயத்னத்தை அபேக்ஷித்துக் கொண்டு பரமாத்மா ப்ரவர்த்திப்பியாநிற்கும் என்றதாய்த்து

என்கிறார். 'ஸர்வப்ரவ்ருத்திகளிலும்' என்பதும் 'ப்ரயத்நத்தை அபேக்ஷித்து' என்பதும் தேசிகன் ஸாதித்ததேயன்றோ, இவருக்கு முன்னே தீபப்ரகாசத்தில் ஜீயரும் இப்படி ஸாதித்திருக்கிறார் என்றும் இவர் ஜ்ஞாபிக்கிறார். மாமுனியின் இந்த விவரணத்தில் சில அவத்யங்களும் இருக்கின்றன.

1. விஹித ப்ரதிஷித்தங்களுக்கு வையர்த்யாதிகள் வாராமைக்காக இச்சேதனன் பண்ணின ப்ரதம ப்ரயத்னத்தை அபேக்ஷித்துக்கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்கும் என்றபடி''

என்று ஸூத்ரத்திற்கு அர்த்தம் ஸாதிக்கின்றார் மாமுனி. இது பாஷ்யவிருத்தம். க்ருதப்ரயத்நாபேக்ஷன் ஈச்வரன். ஏனெனில் விஹித ப்ரதிஷித்தாவையர்த்யாதிகளால் என்பது பாஷ்யத்தில் உள்ள அர்த்தம், ''அவையர்த்யாதிப்ய:'' என்பது பஞ்சமீ. ஹேதுவாசிகை, இதைச் சதுர்த்தி யெனக் கொள்கிறார் இவர். விதி நிஷேதங்கள் வ்யர்த்தமாகக்கூடாதென்பதற்காக ஈச்வரன் க்ருதப்ரயத்நாபேக்ஷனாய் ப்ரவர்த்திப்பிக்கின்றான் என்று பொருள் கூறுகின்றார். இது கதை சொல்வது போல் ஆகின்றது. விசார சாஸ்த்ரத்தில் இதற்கு இடமில்லை. க்ருதப்ரயத்நாபேக்ஷனாய் ப்ரவர்த்திப்பிக்கின்றான் ஈச்வரன் என்பது ஸூத்ரகாரருடைய ப்ரதிஜ்ஞாவாக்யம். அதை எப்படி அறிகிறோம்? அதற்கு ப்ரமாணமென்ன எனில் விஹித ப்ரதிஷித்தாவையர்த்யாதிகளால் அறிகின்றோம். இவையே அதற்கு ப்ரமாணம் என்பது ஸ்ரீபாஷ்யம் கூறும் அர்த்தம். இங்கு இன்றொரு அவத்யம் உள்ளது. விஹிதப்ரதிஷித்தாவையர்த்யம் ஆதி: யேஷாம் தேப்ய; என்று இந்தப் பதத்தில் ஸமாஸம் உள்ளது. இவர் விஹிதப்ரஷித்தயோ: அவையர்த்யாதிப்ய: என்று அநுபபன்னமான மைாஸத்தைக் கொள்கிறார். ''விதி நிஷேதாவையர்த்ய நிக்ரஹாநுக்ரஹேப்யோऽவகம்யதே'' என்று ஸாரஸ்ரீஸூக்தி உள்ளது. ஸமாஸமோ ஸமஸ்தபதத்தின் அர்த்தமோ உள்ளபடி அவர் மனஸ்ஸில் படவில்லை.

2. ''பரமாத்வானவன் அந்த சேதனனுடைய விதிநிஷேத ப்ரவ்ருத்தியிலே அநுமதியையும் அநாதரத்தையும் உடையவனாய்க் கொண்டு'

என்றும், இப்படியே மேல் ''அசாஸ்த்ரீயங்களிலே உபேக்ஷித்தும் சாஸ்த்ரீயங்களிலே அநுமதி பண்ணியும்'' என்றும் மாமுனி ஸாதிக்கின்றார். அசாஸ்த்ரீயங்களிலும் பரமாத்மா அநுமதி பண்ணுகிறான் என்பது ஸித்தாந்தம்.

பாபகர்மஸூ நிவர்த்தநசக்தஸ்யாபி அநுமந்த்ருவம் ந நிர்தயத்வமாவஹதி

என்பது இங்கே ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தி.

யத்து கரணகளேபர சக்தி ஜ்ஞான வாஞ்சாதிஷு விஷம ப்ரதானம், அஹித ப்ரவ்ருத்தெள அநிவாரணம் அநுமந

நம் ப்ரத்யவாய ஜனனம் ச. ததபி அநாதி பூர்வகர்ம வைஷம்யோபாதிகதயா ந ஈச்வரஸ்ய வைஷம்ய நைர்க்ருண்யாபாதகம்.

என்பது தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி ஸ்ரீஸூக்தி

3. ஸர்வேச்வரன் தனக்கு உண்டாக்கிக் கொடுத்த ஜ்ஞாத்ருத்வ ரூபமான ஸ்வாதந்த்ர்ய சக்தியாலே

என்கிறார் டாமுனி. தத்வஸாரத்தில் கூறப்பட்ட ஸ்வாதந்தர்ய சக்தி ஜ்ஞாத்ருத்வரூபமென்று இவருடைய க்ரஹணம். பரதந்த்ரனுக்கும் ஜ்ஞாத்ருவம் இருக்கலாமாகையால் இது ஸ்வாதந்தர்ய சக்தி ஆகாது. ப்ரவ்ருத்தி சக்தஸ்ய அநிவார்யத்வம் என்று ச்ருதப்ரகாசிகையில் ஸாதித்தபடியே ஸ்வாதந்தர்யத்தைக் கொள்ள வேணும்.

ஸாராவள்யாம் தத்வ
  த்ரயவிவ்ருதெள ஸாரதீப பாஷ்யேஷு |
உக்தம் கிமபி ந வேத
  க்ஷிபதி து நிகமாந்ததேசிகம் தார்ஷ்ட்யாத் ||

**2. கைவல்யம் :**

பரப்ரஹ்மாநுபவ மில்லாமல் பரிசுத்தமான ஸ்வாத்மாநுபவ மாத்ரம் பெறுவது கைவல்ய மென்றும் பரப்ரஹ்மாநுபவ ப்ரதிபந்தகமான காமம் கழியவில்லையாகையால் இது முக்யமான மோக்ஷம் அன்று என்றும் இதில் புநராவ்ருத்தி உண்டென்றும் இல்லாமலும் இருக்கலாம் என்றும் சொல்லுவார்கள். ஆனால் கீதையில் ஏழாம் அத்யாயத்தில் சொல்லப்பட்ட ஜிஜ்ஞாஸு எனகிறவன் அத்தகைய கைவல்ய நிஷ்டன் அன்று. பஞ்சாக்நி வித்யா நிஷ்டன் இவன்.

"இவனுக்கு ப்ரஹ்மப்ராப்தி ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கீதா பாஷ்யத்தில் ஆத்ம ஸ்வரூபாவாப்தி சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் இங்கு பரஸ்பரவிரோதம் இருக்கிறது" என்பது தவறு.

"ஆத்ம யாதாத்ம்யவித : பரமபுருஷநிஷ்டஸ்ய
ச ஸ ஏநாந் ப்ரஹ்ம கமயதி" இதி ப்ர
ஹ்மப்ராப்தி வசநாத்."

என்று கீதாபாஷ்யத்திலும் ச்ருதி வாக்யத்தை உதாஹரித்து ஆத்மயாதாம்யவித : என்ற பஞ்சாக்நி வித்யா நிஷ்டனுக்கே

ப்ரஹ்மப்ராப்திசொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இங்குள்ள விரோதத்தைப் பரிஹரிப்பதற்காக ஸ்வாமி மதுவித்யா ந்யாயத்தை இங்கே ஸமந்வயப்படுத்தினர் என்பது சேராது. முக்தியும் மற்றொரு பலனும் சொல்லியிருக்கு மிடத்தில் முதலில் இந்தப் பலனை அநுபவித்துவிட்டுப் பிறகு முக்தி பெறுகிறான் என்று கொள்வது மதுவித்யாந்யாயம். ஜிஜ்ஞாஸு என்று ஜ்ஞானியைக் காட்டிலும் வேறு பட்டவனாக ஒருவனைச் சொல்லுகிற படியாலும் "ஸ யாதி பரமாம் கதிம்" என்று அவனுக்கு பரிசுத்த ஆத்ம ஸ்வரூபத்தை ப்ராப்யமாகச் சொல்லியிருப்பதாலும் இந்தப் பலன் அவனுக்கு உண்டு என்று கொள்ள வேணும். இவனுக்கே அர்ச்சிராதி கதியையும் ப்ரஹ்மப்ராப்தியையும் அபுநராவ்ருத்தியையும் சொல்லுவதால் இந்தப் பலனும் உண்டு என்ன வேணும். இந்த இரண்டு பலனையும் இவன் எப்படிப் பெறுகிறான் என்று விமர்சிக்க வேணும். ப்ரக்ருதி வியுக்த கேவல ஆத்ம ஸ்வரூபாநுபவமே கைவல்யமாகும் அதாவது பரமாத்மாநுபவ மில்லாத ஸ்வாத்ம மாத்ராநுபவம் இது பரமபதம் சென்றவனுக்கு ஸம்பவியாது. அங்கு ப்ரஹ்மாநுபவம் அவச்யம் உண்டாகுமாதலின், ஆகவே மதுவித்யா ந்யாயத்தினல் வேறு ஓர் உலகில் ஸ்வாத்மாநுபவம் பெற்றுப் பிறகு பரமபதம் சென்று ப்ரஹ்மாநுபவம் பெறுகின்றான் பஞ்சாக்நி வித்யா நிஷ்டன் என்று மதுவித்யாந்யாயத்தால் ஸித்தாந்தம் செய்தருள்கின்றார் ஸ்வாமி. ஓரிடத்தில் ப்ரஹ்மப்ராப்தி பலனாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. மற்றோரிடத்தில் இதன்றி வேறு ஒரு பலன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பரஸ்பர விரோதம் என்றால் இதற்குப் பரிகாரம் அங்கும் ப்ரஹ்மப்ராப்தியாகிற பலன் உண்டு என்று, அல்லது இங்கு அதிகாரி வேறு அங்கு அதிகாரி வேறு என்று நிரூபணம் செய்வதேயாகுமே யன்றி மதுவித்யாந்யாயப்ரதர்சனமாகாது.

> பரமபதம் சென்றே இரண்டு பலனையும் அநுபவிக்கின்றான். அதில் ஆத்மாநுபவம் ப்ரதானம். ப்ரஹ்மாநுபவம் அப்ரதானம்.

என்றது பரம புருஷார்த்தத்தின் ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவர்கள் சொல்லக்கூடிய பரிஹாரமன்று. பரமபதத்தில் அநுபவத்தைப் பற்றி இவ்வித விசேஷம் துர்வசம். முக்தர்கள் யாவரும் நித்யஸூரிகள் போன்றவர்களேயாதலால் சிலருக்கு ப்ரஹ்மாநுபவம் அப்ரதானம் என்பது கூடாது. ஆத்மயாதாத்ம்யவித்தானவன் தான் பரமாத்மாவுக்கு சேஷன் என்று அறிந்தவனாகையால் ஸ்வாமி அநுபவத்தை அப்ரதானமாக்கி தன் ஸ்வரூபாநுபவத்தை

ப்ரதானமாகக் கொள்ளமாட்டான். பரமாத்மாநுவத்திற்கு அப்ரா தான்யமாவது என்ன. ஆத்மாநுபவத்திற்கு ப்ராதான்யமாவது என்ன. எதனால் இது வந்தது என்றால் உத்தரம சொல்வது அசக்யம்.

> தத்க்ரது ந்யாயத்தால் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்ம ப்ராப்தி தான் ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மோபாஸனத்திற்கு அநுரூப மான பலன்

என்பது அயுக்தம். பரப்ரஹ்மாத்மாத்மகஸ்வாத்மா, ஸ்வாத்ம சரீரக பரப்ரஹ்ம என்ற இவற்றில் ப்ரதீதியிலும் வ்யவஹாரத்தி லும் விசேஷண விசேஷ்யபாவ ப்ரயுக்தமாக பேதம் இருந்தாலும் ப்ரமேயத்தில் பேதமில்லை. பிதாவோடு கூடின புத்ரன இருக்கு மிடம் சென்றான். புத்ரனோடு கூடின பிதாவிருக்குமிடம் சென்றான் என்றால் இரண்டிடத்திலும் ப்ராப்யத்தில் விசேஷமில்லை. ஆகை யால் பஞ்சாக்னிவித்யாநிஷ்டனுக்கும் மற்ற வித்யாநிஷ்டர்களுக் கும் ப்ரஹ்மப்ராப்தி ஒரே விதமானதுதான் இங்கே தத்க்ரது ந்யாயத்திற்கு இடமில்லை. கார்யத்தை உபாஸித்தால் கார்ய ப்ரா ப்திதான் வரும். பரிசுத்த ஆத்மஸ்வரூபத்தைமட்டும் உபாஸித்தால் தத்ப்ராப்தி மாத்திரமே. ப்ரமஹ்ப்ராப்தி வராது. அதனால் ப்ரஹ் மத்தைஉபாஸிக்க வேணும். இங்கே தத்க்ரது ந்யாயம். எந்த ப்ரஹ் மவித்யாநிஷ்டனானாலும் ஒரேவிதமான ப்ரஹ்ம ப்ராப்தியைத்தான் பெறுவான். "விகல்போऽவிசிஷ்ட பலத்வாத்" என்று ஸர்வவித் யாநிஷ்டனுக்கும் மோக்ஷ பலத்தில் விசேஷமில்லையென்று ஸூத் ரகாரர் அறுதியிடுகிறார்,

> அர்ச்சிராதியால் சென்றவனுக்கு நடுவில் வ்யவதானமில் லாமல் நேராக ப்ரஹ்ம ப்ராப்தி ச்ருதப்ரகாசிகையில் சொல்லப்பட்டிருக்கிறதே. நடுவில் ஆத்மாநுபவம் சொன் னால் அது விரோதிக்குமே எனில்

மதுவித்யையில் எப்படி? வஸ்வாதி பதப்ராப்தி பூர்வகமாகத்தானே அங்கே ப்ரஹ்மப்ராப்தி. வஸ்வாதிபதாநுபவத்திற்குப் பிறகே அங்கு கதி ஆரம்பிக்கிறது என்னில் இங்கும் அது துல்யம். 'ஜிஜ் ஞாஸு' என்றும் "ஸயாதி ப்ரமாம் கதிம்" என்றும் தனியாக ஒரு பலன் சொல்லப்பட்டிருப்பதால், இது இல்லாமலே பஞ்சாக்னிவித் யாநிஷ்டன் முக்தி பெறுகிறான் என்றால் கீதா விரோதமும் அதன் பாஷ்ய விரோதமும் வரும். அர்ச்சிராதி கதி மத்யத்திலேயே இந்த பலத்தின் அநுபவம்உண்டாகிறதென்றாலும் விரோதமில்லையென்று ஸ்வாமி ஸ்பஷ்டமாய் தாத்பர்யசந்த்ரிகையில் ஸாதிக்கின்றார்.

ஸஹஸ்ரநாம பாஷ்யத்தில் "முக்தாநாம் பரமாகதி:" என்ற விடத்தில்

பரமேதி விசேஷணேந முக்தாநாமேவ கேஷாஞ்சித் அர் வாசீநா கதிர் கம்யதே என்று பட்டர் அருளிச் செய்ததும்

வேதார்தஸங்க்ரஹவ்யாக்யானத்தில்

"பரம: ஸ்வராட்" இதி முக்தாத்மா உச்யதே. அத்ர பரம சப்தேந கைவல்ய மோக்ஷவ்யாவ்ருத்தி: என்று ச்ருதிப்ரகாசிகாபட்டர் அருளிச் செய்ததும் பழுதாகும்

என்டதில்லை. பட்டர் ஸ்ரீஸூக்தியில் முக்த சப்தத்திற்கு புநர் ஜந்மஹேதுவான ஸர்வ கர்மமும் கழியப்பெற்றவர்கள், என்பது அர்த்தம். இவர்களுக்குள் கேஷாஞ்சித் என்ற சிலர் ப்ரஹ்ம ப்ராப்தி விரோதியான கர்மம் நீங்கப் பெற்றவர்களல்லாமை யாலே இவர்களுக்கு ப்ரஹ்ம ப்ராப்தி என்கிற அபவர்கம் கிடையாது. அதற்குக் குறைந்த ஒரு கதிதான் உண்டு என்கிறார் பட்டர். இதுவன்றி ப்ரஹ்ம ப்ராப்தி உள்ளவர்களுக்குள்ளேயே ஏற்றத்தாழ்வு உண்டு என்ற கருத்தில்லை. ப்ரஹ்மத்தோடு பரம ஸாம்யத்தை அடைந்தவர்களுக்குள் ஏற்றத் தாழ்வுக்கு ப்ரஸக்தி ஏது?

தத்ராவ்ருத்தி பரப்ராப்தி வைரூப்யாதேரயோகத:

என்கிறார் ஸ்வாமி. வேதார்தஸங்க்ரஹவ்யாக்யானத்தில் ஸ்வராட் என்பதற்கு முக்தாத்மா என்று அர்த்தம் சொல்லி, இங்கு ஸ்வாத் மமாத்ர அனுபவமுள்ள கைவல்யநிஷ்டனை வ்யாவர்த்திக்கிறது பரம என்ற விசேஷணம் எனப்படுகின்றது. இந்த இரண்டு இடங் களிலும் ப்ரஹ்ம ப்ராப்தியில்லாத கைவல்யம் கருதப்படுகின்றது. ப்ரஹ்ம ப்ராப்தி உள்ள பஞ்சாக்நிவித்யாநிஷ்டனுக்கு அவாந்தர பலன் ஸ்வாத்மானுபவம் என்று ஸ்வாமி செய்தருளும் நிஷ்கர்ஷத் தினால் அந்த ஸ்ரீஸூக்திகள் பழுதாவது எப்படி?

"ஏகக்ரந்தசகலாஸ்வாரஸ்யம்" என்று ஸ்வாமி ஸாதித்தது தாம் செய்த நிர்வஹணத்தைப்பற்றியன்று. சிலர் "கீதை ஏழாம் அதயாயத்தில் சொன்ன ஜிஜ்ஞாஸு கைவல்யார்த்தி, ஜ்ஞாநி என்ற முமுக்ஷுவன்று. இவனைப் பற்றித்தான் எட்டாம் அத்யாய மும் பேசுகின்றது. இவனுக்கு புனராவ்ருத்தியில்லை. அர்ச்சிராதி கதி உண்டு. இதைக்கூறும் "யத்ர'காலேத்வநாவ்ருத்திம் ஆவ் ருத்திம் சைவ யோகிந :" இத்யாதி கீதாச்லோகங்களின் அவ தாரிகையின் ஆரம்பத்தில்

அத ஆத்ம யாதாத்ம்யவித: பரம புருஷ நிஷ்டஸ்ய ச ஸாதாரணீம் அர்சிராதிகாம் கதிம் ஆஹ

என்றுள்ள ஸ்ரீஸூக்தியில் ஆத்மயாதாத்ம்யவித் என்று கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட கைவல்யார்த்தியே நிர்தேசிக்கப்படுகின்றான். பரம புருஷ நிஷ்டன் என்று பகவச்சரணார்த்தியான ஜ்ஞாநி. இப்படி ஸ்வரஸமாகத் தோன்றும் அர்த்தத்தைவிட்டு இங்கு ஆத்ம யாதாத்ம்யவித் எனப்பட்டவன் பஞ்சாக்னி வித்யா நிஷ்டன் என்று கொள்ளக்கூடாது. ப்ரகரணத்தினால் உபஸ்திதனான கைவல்யார்த்தியை விட்டு உபஸ்திதியில்லாத பஞ்சாக்னி வித்யா நிஷ்டனை க்ரஹிப்பது அத்யந்தம் அஸ்வரஸம்'' என்றனர். இவர்களுக்கு ஸ்வாமி ஸமாதானம் கூறுகின்றார் :—

ஸ்ரீமத்பாஷ்யம், ஸாரம், தீபம், கீதாபாஷ்யத்திலேயே இங்கு மேலுள்ள பங்க்திகள் என்ற இவற்றையெல்லாம் அநுசரித்து இந்த ஒரு வாக்கியத்தில் ஒரு பதத்தில் உள்ள அஸ்வாரஸ்யத்தை அங்கீகரித்தே நீங்களும் அர்த்தம் சொல்லவேண்டும்—என்று. ஸ்வாமி நிஷ்கர்ஷத்தின்படி ஜிஜ்ஞாஸு என்பது முதல் எல்லாம் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனைப்பற்றினதேயாகையால் அஸ்வாரஸ்யம் எங்கும் சிறிதுமில்லை.

यो देशिकेऽपराध्यति तस्यास्मै तत्पदं वितीर्णवति ।
अस्तीति नास्ति बुद्धिः भगवति तदयं हि नास्तिकः प्रथमः ॥



குரௌ வாதி ஹம்ஸாம்புதாசார்யசிஷ்யே
ஜநா பக்திஹீநா யதீந்த்ராப்ரியா: ஸ்யு:
யதீந்த்ராப்ரியா: விஷ்ணு காருண்ய தூரா:
குதோ முக்தி வார்தா ஹி தாத்ருக் விதாநாம்.

என்ற ப்ரதிவாதிபயங்கரம் அண்ணன் ஸ்ரீஸூக்தியை ப்ரதிதினம் அநுசந்தித்து வருகிறோம். ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறந்தவன் எவனும் தன் பிறப்பு ஸபலமாகவேண்டுமானால் தேசிகன் திருவடியை ஆச்ரயிக்க வேண்டும். தத்வ ஹித புருஷார்த்தங்களை அறிவதற்கு ஒரே ப்ரமாணம் வேதாந்தம். இதற்கு பகவத் ராமாநுஜன் செய்தருளிய விவரணங்களைக்கொண்டு ஸர்வ ஜனங்களுக்கும் நிஸ்ஸந்தேஹமாக பகவத்ஸ்வரூபஸ்வபாவாதி நிர்ணயம் உண்டாகும்

படி பலவித க்ரந்தங்களையும் ப்ரவசநங்களையும் விரோதிநிரஸனத்தையும் செய்ய வேண்டுமென்று "வேதாந்தாசார்யர்" என்ற பிருதத்தை வழங்கி ஸ்ரீரங்கநாதன் சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையானுக்கு ஆஜ்ஞை பண்ணினான். இந்த பகவதாஜ்ஞையை ஸ்வாமி ஆயுஷ்காலம் முழுவதும் ததேகபரராய் இருந்து நிறைவேற்றினார். "ஒரொன்றுதானே யமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு வானேறப் போமளவும் வாழ்வு" என்னும் சிறப்புடைய ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளின் ரஸம் யாவராலும் அநுபவிக்கப்பட வேண்டும். இதற்கு விரோதியான தூஷணங்களைப் போக்கி ஸ்ரீஸூக்திகளின் உண்மைப் பொருளை விளங்க வைக்கவேண்டியது நம் கடமை. இதை நாம் வெகுகாலமாகச் செய்துவருகிறோம். இப்போதும் அது ப்ரஸக்தமாகிறது.

பகவத் விஷயம் எனப்படுகிற திருவாய்மொழி விஷயமாக ஸ்வாமி ஸாதித்த இரண்டு க்ரந்தங்கள் இப்போது இருக்கின்றன. அவை த்ரமிடோபநிஷத்ஸாரம் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்நாவளி என்பவை. இவற்றிலுள்ள விஷயங்கள் தம் ஸம்ப்ரதாயத்தில் ஆதரிக்கப்பட்ட வ்யாக்யானங்களைக் கொண்டே, அவற்றை அநுசரித்தே ஸாதிக்கப்பட்டவை என்று அவற்றுக்கு ஒரு ஏற்றத்தை உண்டாக்க தூஷணம் வெகுகாலமாகப் பாடுபட்டு வருகின்றது. முன்னுள்ளவர்களின் க்ரந்தங்களைப் பின்னுள்ளவர்கள் பார்த்து அவற்றிலுள்ள விஷயங்களைத் தம் க்ரந்தங்களில் எடுத்துக் கூறுகின்றார்கள் என்றால் இதில் விசேஷம் என்ன இருக்கின்றது. ஆகிலும் தம்முடையவர்கள் என்று அபிமானிக்கப்பட்ட ஆசார்யர்களுக்கு ஓர் உயர்வையும் ஸ்வாமிக்கு ஒரு தாழ்வையும் கல்பிக்க அபிநிவேசம் கொண்டு இது ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளின் கருத்தை உள்ளபடி தான் உணராததோடு பிறரும் ப்ரமிக்கும்படியாகச் செய்கின்றது. இது காரணமாக நாம் உண்மையை விளக்கவேண்டியது அவசியமாகின்றது.

## 3. ஆழியங்கண்ணா

திருவாய்மொழி முதல் பத்தில் 8, 9, 10 பதிகங்களின் ப்ரதிபாத்யங்களைப்பற்றி ஸ்வாமி ஸாதித்திருப்பதெல்லாம் பூர்வர்களின் வ்யாக்யானங்களின் விமர்சனமேயன்றி வெறும் அநுவாதமன்று என்று 1952ல் இரண்டு பாகமாக வெளிவந்த நம்முடைய ஸஜ்ஜநாராதனம் என்கிற க்ரந்தத்தில் நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது. அதையெல்லாம் பார்த்திருந்தும் பார்க்காதது

போலவே தான் சொன்னதையே திருப்பித் திருப்பி எழுதி வெளியிட்டு வருகின்றது.

இப்போது புதிதாக ஒன்றைச் சொல்லுகின்றது

"அடிச்சியோம் தலைமிசை நீ யணியாய் ஆழியங்கண்ணா (10. 3-6) என்ற பாசுரத்தில் ஆழியங்கண்ணா என்பதற்கு கடல்போன்ற ச்ரமஹரமான கண்களையுடையவனே என்று பொருள். இங்கு ஆழி என்பதற்கு திருவாழி (சக்கரம்) என்ற பொருளை எந்த ஆசார்யரும் அருளிச் செய்திருக்கவில்லை. ஆறாயிரப்படிமுதல் எல்லா வ்யாக்யானங்களிலும் ஏகரீதியாக 'உன்னுடைய அழகிய திருக்கைகளை அடியோங்களுடைய தலையிலே வைத்தருளித் திருக்கண்களாலே குளிரப் பார்த்தருளாய் என்று சுவைமிக்க பொருளை(ள்) அருளிச்செய்திருக்க (செய்யப்பட்டிருக்க) இந்த ரஸகனமான பொருளை ச்லோகத்தில் அடக்க முடியாமல் ஆழி என்பதற்கு சக்கரமென்று பொருள்கொண்டு "சக்ரராஜாயுதத்வாத்" என்றார் தாத்பர்யரத்நாவளியில்" என்று.

பிறர் சொன்ன அர்த்தமே கூறப்பட்டதாகத் தோன்றும் போது அவர்களுடைய சிஷ்யர் ஸ்வாமி என்கிறது. வேறு அர்த்தம் சொல்லப்பட்டிருந்தால் ரஸகனமான பொருளை விட்டுவிட்டார் என்கிறது. இதனால் ஸ்வாமி பூர்வவ்யாக்யாநங்களில் கூறப்படாத பொருளையும் ஸாதிப்பர் என்பதை இதுவே நிரூபித்து விட்டது. அவற்றில் கூறப்பட்ட பொருளைக் கூறுமிடங்களில் விமர்சாபிஸந்தி உள்ளதை அறிய வேண்டும். இதற்குமேல்

இவை தேசிகன் மீது தோஷாரோபணமாக எழுதுபவையல்ல. நம்பிள்ளை திருவடிகளின் வ்யாக்யானங்களைக் கைவிளக்காகக் கொண்டே தேசிகன் அருளிச் செயற் பொருள்களை அறிவிக்கின்றார் என்பதைக் கல்வெட்டாக்குகிறபடியேயொழியே வேறில்லை

என்கிறது. இந்த ஸாத்யத்திற்கு அவர்கள் சொன்ன பொருளை விட்டு வேறொரு பொருளைச் சொன்னது எப்படி ஹேதுவாகிறது. விபரீத ஹேதுவன்றோ இது. இனி உண்மையைக் கவனிப்போம். ஆறாயிரப்படியில் "ஆழி" என்பதற்குப் பொருள் கூறப்படவில்லை. குளிரப்பார்த்தருளாய் என்றது அதன்பொருள் என்பது யுக்தமன்று. அழகிய கண் என்றுள்ள விசேஷணத்திற்கே அது தாத்பர்யமாகலாம். "தாமரைக்கண் என்னம்மான்" (10. 6-6) என்கிற

விடத்திலும் "அழகிய திருக்கண்களாலே என்னைக் குளிரப்பார்த் தருளாநின்றான்" என்று ஆறாயிரப்படி இருக்கிறது. ஏன் அதற்குப் பொருள் கூறாமல் விட்டார் பிள்ளான் எனில் அது ப்ரஸித்த மாகையால் சொல்லாமலே விளங்குமென்று அவர் கருதினார். ப்ரஸித்த அர்த்தங்களுக்குள் ஒன்று கடல். இதை விவக்ஷித்து நஞ்சீயர் 'கடல் போலே இருக்கிற அழகிய கண்களாலே" என்றார் இதையநுஸரித்து மற்றவர்கள் 'கடல்போலே ச்ரமஹரமாய் தர்சநீயநமான கண்' என்றார்கள். இந்த உபமானத்தைக் கண் விஷயமாக்காமல் கண்ணன் விஷயமாக்கினார் பன்னீராயிரக்காரர்- "கடல்போலே அளவிடவொண்ணாத ஸ்வபாவத்தையுடையாய், அம் தர்சனீயனான, கண்ணா கிருஷ்ணனே' என்று. ஆகவே இங்கு ஆறாயிரப்படி முதல் ஏகரீதியாக வ்யாக்யானம் என்பதில்லை. ஆழி யென்பதற்கு ப்ரஸித்தமான மற்றொரு பொருள் சக்கரம். இதை விவக்ஷித்து ஸ்வாமி சக்ரராஜாயுதத்வாத் என்கிறார். இதில் என்ன தவறு? ஸம்பவிக்கும் பல பொருள்களில் ஒவ்வொருவர் ஒவ்வொன் றைக் கூறினால் ஒன்றை ரஸகனம் என்பதும் மற்றதை அல்லாத தென்பதும் எப்படி. இதற்கு ப்ரமாணமென்ன; வெறும் பக்ஷ பாதத்தினால் சொல்வதை ப்ராமாணிகர் அங்கீகரிப்பார்களோ? சக்ராயுதம் ஏந்தி அதனால் அழகாயிருக்கும் கண்ணனே என்றும் இங்கே பொருளாகலாம் என்பதையும் இங்கே ஸ்வாமி ஜ்ஞாபிக்கின்றார்.

இந்த ரஸகனமான பொருளை ச்லோகத்தில் அடக்கமுடியாமல் என்று கவிஸிம்ஹத்தைப்பற்றிச் சொல்லுகிறோமே என்று லஜ்ஜிக்க வேணும். 'வார்திரம்யேக்ஷணத்வாத்' என்று நாமே வெகு எளிதாக சொல்லக்கூடியது இது: பிறர் சொன்னதில் தம் அபிப் பிராயத்தை வ்யஞ்சிப்பதற்காகவே ஸ்வாமி புத்தி பூர்வமாய் வெகு சமத்காரமாய் அருளிச்செய்தது **சக்ரராஜாயுதத்வாத்** என்று.

## 4. வழித்துணை

> "தாளதாமரை (10-1) ப்பதிகத்தில் தேறின குணமாக ஸத்பதவ்யாம் ஸஹாயம் ஸ்ரீசம் ப்ராஹ' என்றருளிச் செய்தார் தாத்பர்ய ரத்னாவலியில்

எனப்பட்ட இது தவறு. ஸத்பதவ்யாம் ஸஹாயம் என்றது சத கார்த்தமேயன்றி தசகார்த்தமன்று என்று எடுத்துக்காட்டினோம். இப்போது இந்த தசகார்த்தத்தை ப்ரதானமாக வைத்துத்தான் சதகார்த்தமாகக் கூறினார் என்கிறது தூஷணம். இது யுக்தமன்று. சூழ் விசும்பின் ப்ரதிபாத்யமான ப்ராபகத்வத்தை ப்ரதானமாக வைத்து ஸ்வாமி ஸத்பதவ்யாம ஸஹாயம் என்கிறார். அர்ச்சிராதி

மார்க்கத்திலுள்ள விசேஷங்களைக் கூறும் இந்தப் பதிக்கைதத் திரு வுள்ளம் பற்றி இப்பதவியில் ஸஹாயம் என்று ஸாதிக்கிறார் என்பது மிகப் பொருத்தமானது.

## 5. ஸாத்ம்யம்

இவையுமவையும் (1-9) திருவாய்மொழியின் விஷயத்தை ஸ்வாமி "ஸாத்ம்யபோக ப்ரதாநாத்" என்று ஸாதித்தார். இங்கு ஸாத்ம்ய என்ற பதம் ஆறாயிரப்படியில் இல்லை. பெரிய வாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தில்தான் இருக்கின்றது. ஆகை யால் அதைப் பார்த்தே இந்தப் பதத்தை ஸ்வாமி ப்ரயோகித்தார் எனப்பட்டது. இதற்கு நாம் கூறின உத்தரம்

> "ஆர்ஜவகுணாநுஸந்தானம் பண்ணின தம்மிடத்தில் ஈச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தை அருளிச் செய்கிறார்" என்பது இங்குள்ள—ஆறாயிரப்படியில்—அவதாரிகை.

என்பது. இந்த அவதாரிகையை நாம் எடுத்து உதாஹரித்தது மைஸூர் ஸ்ரீபரகால மடத்தில் தெலுங்கு லிபியில் அச்சிடுவித்த பகவத் விஷய க்ரந்தத்திலிருந்து. இப்போது "ஆறாயிரப்படியில் இந்த அவதாரிகை இல்லை. பரகால மடத்தில் சேர்க்கப்பட்டது. அவர்களே பிறகு தனியே ப்ரசுரிக்கப்பட்ட ஆறாயிரப்படியில் இதை எடுத்து விட்டார்கள்" எனப்படுகிறது. இங்கு ஒரு ரஹஸ்யம் வெளியாகிறது. இந்த தெலுங்கு லிபி ப்ரசுரங்களை சோதித்து அச்சிட்டுக் கொடுத்தது இந்த தூஷணமே. இதுவே முதலில் ஒரு துரபிஸந்தியினால் இந்த வரிகளைச் சேர்த்து பிறகு வேறொரு துரபி ஸந்தியினால் தனிப் புஸ்தகத்தில் எடுத்துவிட்டது. நாம் தனிப் புஸ்தகத்தைப் பார்க்காமல் முதல் பிரசுரத்தையே பார்த்து அது ப்ராமாணிகமென்று விச்வஸித்து உதாகரித்தோம். ஸந்தேஹம் உண்டாகாமையால் மற்றப் ப்ரதிகளைப் பார்க்கவில்லை இது நிற்க ப்ரஸ்துத ப்ரதாநவிஷயத்திலும் வஞ்சனை. ஆறாயிரப்படியில் இந்தப் பதிகத்தில் 5, 8, 9 பாசுரங்களின் கீழ் 'ஸாத்மித்தவாறே' என்ற சொல் காண்கிறது. ஆகையால் இந்தப் பதம் ஆறாயிரப் படியில் இல்லை. மற்ற வ்யாக்யானத்திலதான் உள்ளது. அதிலி ருந்தே ஸ்வாமி அறிந்து ப்ரயோகித்தார் என்றது மித்யா.

## 6. வெளிய நீறு

நஞ்சீயர் அவைஷ்ணவராயிருந்து பட்டருடைய அநுக்ரஹத் தால் வைஷ்ணவரானார். இதைப் பொறுக்காத அவருடைய பூர்வ

பந்துக்கள் "இப்போது நீர் பரிக்ரஹித்த புது மதத்திற்கு ப்ரதம ப்ரவர்த்தகரான சடகோப முனிவரே

கரிய மேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்

என்று பாடுகிறரே. இதற்கு அர்த்தம் சொல்லுமையா" என்று அவர் மடியைப் பிடித்துக் கொண்டனர். அவர் தம் ஆசார்யரான பட்டரிடம் ஓடினர். பட்டர் அடிக்கடி கிடாம்பி ஆச்சானிடம் போய் ஸம்ப்ரதாய விசேஷார்த்தங்களைக் கேட்டு அறிந்துகொண்டிருந்தார். ஆகையால் அவர் 'வெளிய நீறு' என்பதற்கு சைவர்கள் பூசிக்கொள்ளும் வெளுத்த விபூதி அர்த்தமில்லை. கண்ணுக்கணியும் அஞ்ஜநசூர்ணம் என்று அர்த்தம் என்று தாம் ஆச்சான் உபதேசத்தால் அறிந்த பொருளைக் கூறினர். இப்பொருளையே தம் ஒன்பதினாயிரப்படியில் நஞ்சீயர் ஸாதித்தார். இதைப் பார்த்து பெரியவாச்சான் பிள்ளை தம் வ்யாக்யானத்தில் எழுதினர். ஆச்சானிடத்திலிருந்து அவர் சிஷ்யபுத்ராதி பரம்பரையாக வந்த இந்த அர்த்தத்தை உபபத்தியுடன் "சக்ஷுஷி ச தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜநபரத்வமாஹுராசார்யா :" என்று தம் ஆசார்ய பக்தியைக் காட்டிக்கொண்டு ஸ்வாமி ஸ்ரீ ஸச்சரித்ர ரக்ஷையில் ஸாதிக்கின்றர். ஆகவே இங்கு பிறர் உரையிலிருந்து ஸ்வாமி அறிய வேண்டியிருந்தது ஒன்றுமில்லை. ஆப்த ஆஸ்திகர் என்று ஸ்வாமியினுல் நிர்தேசிக்கப்பட்ட ஒருவர் இங்கு 'ஆசார்யா:' என்று நிர்தேசிக்கப்படுகிறர் என்பது ப்ராமாணிகர்கள் சொல்லக்கூடியதன்று.

கண் என்பதை விசேஷ்யமாக்கி இந்த அர்த்தத்தை சொல்வது உசிதமானுலும் மேனி என்பதை முக்கியமாகக்கொண்டு ஆறாயிரப்படியில் ஸாதித்திருப்பதை அநுஸரித்து தாத்பர்ய ரத்நாவளியில் 'கர்பூராலேபசோபே' என்று அருளிச்செய்தார்

"நீலமேகநிப திவ்ய ரூபோசித திவ்யாங்கராகத்தாலே அநுலிப்தனுய்"

என்பது அங்குள்ள திருவாறுயிரப்படி. இப்படி அநேகமாக எல்லா இடங்களிலுமே திருவாறுயிரப்படியை ஸ்வாமி அநுஸரித்திருக்க "ஆறுயிரப்படியை கண்ணெடுத்துப் பார்த்தவரல்லர் தேசிகர்" என்று சபதம் பண்ணுவேன்" என்கிறது தூஷணம். இன்றைக்கு இந்த சபதம். நாளைக்கு ஸ்ரீபாஷ்யத்தைக் கண்ணெடுத்துப் பார்த்தவரல்லர் தேசிகர்" என்ற சபதமும் பண்ணும்.

## 7. தூப்புல்

பூர்வமீமாம்ஸையில் ஸ்ம்ருதிபாதத்தில் "ஹேதுதர்சநாச்ச" என்பது ஒரு ஸூத்ரம். இதற்கு சபரஸ்வாமியின் பாஷ்யம்—ஒரு

ஸ்ம்ருதிவாக்யத்திற்கு நாம் காணக்கூடிய காரணம் ஒன்று இருந்தால் அதற்கு ச்ருதியை மூலமாக கல்பிக்க வேண்டியதில்லை. அந்த ஸ்ம்ருதிவாக்யம் அப்ரமாணமேயாகும்—என்பது. இந்த ந்யாயத்தால் தூப்புல் விஷயத்தில் தூஷணம் சொல்வதெல்லாம் அப்ரமாணம் என்று ஒவ்வொருவரும் தானே எளிதில் அறியலாம். திவ்ய ப்ரபந்தத்தில் அதன் ஸம்ப்ரதாயத்தில் நவீநமாகக் கல்பித்த மாறுதல்களுக்கெல்லாம் இடம் கொடுக்காமல் ப்ராசீனமான வ்யவஸ்தையை விளங்கவைக்கின்றது ப்ரபந்தஸாரம். இதை ஸஹிக்க முடியாமல் ப்ரபந்தஸாரம் தேசிகன் க்ருதியன்று ஒரு வாதத்தைக் கிளப்பி அதற்கு ஹேதுவாக அப்பய்ய தீக்ஷிதர் காலத்திற்குப் பிறகு வ்யவஹாரத்தில் வந்த தூப்புல் என்ற சொல் 'தூப்புல் தோன்றும்'' என்று கடைசி பாட்டில் இருக்கிறது பாருங்கள் என்றது தூஷணம். இதற்கு தக்க ஸமாதானம் பாரிஜாத புஷ்பத்தில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்டிருக்கிறது. இப்போது அது சொல்லுகிறது :-

> தூப்புலென்று புராதனமாகவே உண்டென்று கொண்டாலும் ஆழ்வார் திருவாக்கில் அவதரித்த திருத்தண்காவை விட்டிட்டு தூப்புலை யொருகாலும் ஆசாரியர்கள் ஆதரியார்கள்.

என்று. ஆச்சர்யமான, மஹா வித்வான்களுக்கும் துர்நிரஸமான, அனுமானம் இது. அனுமானத்திற்கு வ்யாப்தி உயிர். திவ்யமான பகவந்நாமங்கள் ஆயிரக்கணக்கில் இருக்க சேட்டலூர் செண்டலங்காரர், ஆள்கொண்டி என்றிப்படிப் பேர் வைத்துக்கொள்ள மாட்டார்கள் பெரியோர். ஆகையால் இப்பெயருள்ள சிஷ்யர்கள் அதவா ஆசார்யர்கள் முன்காலத்தில் இருந்ததில்லை என்கிறார் மற்றோர் அநுமாநகுசலர்.

தண்கா என்பது போன்றதே தூப்புல் என்ற சொல்லும். ஸர்வ வைதிககார்யங்களுக்கும் அவச்யாபேக்ஷிதமான பரிசுத்த தர்ப்பப்புல்லை உடைய இடம் என்பது அதன் பொருள்.

கர்த்தா இயற்றின நாள் முதல் இந்நாள்வரையில் அத்யயநம் செய்யப்பட்டும் அது ஸந்தாநம் செய்யப்பட்டும் வரும் ப்ரபந்தமோ அதிலுள்ள பாட்டோ பிறகு ப்ரக்ஷிப்தம் என்று சொல்லி ஒரு ஸித்தாந்தம் செய்ய முற்படுகிறவர்களின் கக்ஷி அதனாலேயே தோற்ற கக்ஷி என்று யாராலும் கொள்ளப்படும். அது நிற்க ஹஸ்திகிரிமாகாத்ம்ய முடிவில் சீராரும் தூப்புல் திருவேங்கடமுடையான் என்ற வேண்பா பிற்காலத்தில் சேர்க்கப்பட்டது என்பதற்கு ''கீழ்ச் செய்யுளில் இல்லாத விஷயம் இதில் ஏதேனும் உண்டோ'' ஹேதுவை கூறுகிறது தூஷணம். இது சரியன்று.

கீழ்ப்பாட்டில் ஸ்ரீரங்கநாதன் தந்தருளின வேதாந்தாசாரியன் என்ற பிருதம் ஸபலமாயிற்று என்று சொல்லி 'வேதாந்தவாசிரியன் விளங்கினேனே' என்றார். இந்த வெண்பாவில் "சீரானும் தூப்புல் திருவேங்கடமுடையான்" என்று "ஸ்ரீமத் வேங்கடநாதன்" என்ற தன் பெயரைக் கூறி என்னுடைய ஜந்மம் இதனால் ஸபலமாயிற்று என்று அநுஸந்தானம் செய்கிறார். ஆரம்பத்தில் "பாவுகரான பகவந் நிஷ்டருடைய ஹ்ருதய ஹ்ருந்நார்த்தமாக.... பரதசாஸ்த்ரத்தின் படியே" என்று ஸாஹித்யத்தை வ்யக்தீபவிக்கிறார் "சீராக" என்றவிதனால். இந்த ரமணீயமான ப்ரபந்த நிர்மாணத்திற்கு மூலகாரணம் பகவத் அநுக்ரஹம் என்று அவனுடைய குண விசேஷத்தையும் தம்முடைய க்ருதஜ்ஞதையையு மநுஸந்திக்கிறார் "தாராரருளாளன் தாள் நயந்து கையிற் கனிபோலக் கண்டு" என்று இதெல்லாம் முன்பாட்டில் இருக்கிறதா? இப்படி உண்மையை விளக்கினேனே இவரிந்த விசேஷம் எதுவும் இல்லாமல் இருந்தபோதிலும் விஷய வைலக்ஷண்யத்தையும் அவன் திருவருளால் அமைந்த தம ப்ரபந்த வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தித்து ப்ரஹ்ருஷ்டராய் அந்த ப்ரஹர்ஷத்தால் முன் சொன்னதையே மறுபடியும் சொல்லுகிறார் என்று கொள்வதை விட்டு கல்பிதம் என்று ஏன் கல்பிக்கவேணும்? த்வேஷவமநம் தவிர வேறு என்ன இங்கே உளளது?

சீரொன்று தூப்புல் தனியனைச் செய்தது **பிள்ளைலோகா சாரியர்** என்பதை பொறுக்கமாட்டாமல் ஸ்வாமிக்கும் அவருக்கும் ஸமாகமமே இல்லை என்ற வாதம் கீழ்ச் சொன்ன 'ஹேதுதர்சநாச்ச' என்ற ந்யாயத்தாலேயே துர்வாதம் என்பது ஸித்தம், இனி அவர் ஆசார்யனாயிருந்து எழுதிய ப்ரசம்ஸா பாட்டு இது என்று செய்யும் கல்பனை அத்யந்தம் உபஹாஸ்யம். நாதோபஜ்ஞம் ப்ரவ்ருத்தமான ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் எந்தத் தனியனாவது ஆசார்யனால் இயற்றப்பட்டிருக்கிறதா? இது வெறும் ப்ரசம்ஸா பாட்டன்றோ. அவிச்சிந்நமாக அநுஸந்திக்கப்படும் தனியனாயிற்றே.

द्वेषनिर्दग्धचित्तेन हन्त किं किं न कथ्यते ।

## 8 ப்ரபந்தஸாரம்

ப்ரபந்தஸாரம் என்கிற பெயரில் ப்ரபந்த பதம் திவ்ய ப்ரபந்தத்தைக் குறிப்பதன்று. வேதம் முதலான ஸகல ப்ரமாண சாஸ்திரங்களைக் குறிக்கின்றது அவற்றின் ஸாரமாகையால் திவ்யப்ரபந்தம் முழுவதும ப்ரபந்த ஸாரமாகிறது. அதை விஷயமாக கொண்டதாகையால் ஸ்வாமியினுடைய க்ருதியும் ப்ரபந்தஸாரமெனப்படுகிறது "அந்தமிலா வாரணங்கள் நாலாய் நின்ற அதன் கருத்தை ஆழ்வார்களாய்ந்தெடுத்து செந்தமிழால் அருள் செய்த" என்பதனுல் ஸ்வாமியே இதனை போதிக்கின்ருர். ஆகவே ப்ரபந்தம் திவ்ய ப்ரபந்தமென்று கொண்டு இங்கு எழும்பும் கேள்விகளுக்கு சிறிதுமிடமில்லை இதை நாம் பாரிஜாத புஷ்பம் 54ம் பக்கத்தில் விளக்கியிருக்கிறோம்.

இனி பிரபந்தஸாரம் ஸ்வாமியினுடைய க்ருதியன்று என்பது ராமாயணம் வால்மீகி க்ருதியன்று, திருவாய்மொழி சடகோபன் க்ருதியன்று, ரகுவம்சம் காளிதாஸன் கருதியன்று, என்ற இவை யெல்லாம் ஸித்திக்கும்போது நிச்சயமாக ஸித்திக்கும் இவ் விஷயத்தை நன்ருக அறிய விரும்புகிறவர்கள் நம்முடைய பாரி ஜாத புஷ்பம் என்கிற ப்ரபந்தஸாரவைபவத்தை வாசிக்கவேணும்.

இங்கு ஒரு ஆக்ஷேபம். "ஆழ்வார்கள் அவதரித்த நாளூர் திங்கள் என்று இருக்கிறது நாளும் திங்களும் காலம். ஊர் என்பது தேசம். அவை இரண்டையும சேர்த்து 'ஊர் நாள் திங்கள்' என்ருே 'திங்கள் நாளூர்' என்ருே பாடவேண்டும். அவற் றின் நடுவில் ஊரைக் கூறியது குற்றம், என்று. இங்கு ஸாதாரணமாகச் சொல்லக்கூடிய ஸமாதானம் இது. ஸந்தி பண்ணினுல் "ஊர் நாடிங்கள்" என்றும் "திங்கணுளூர்" என்றும் இப்பதங்கள் ஒலிக்கும் இவ்வோசை காதுக்கு இனியதன்று ஆகையால் நாளூர் திங்கள் என்றது கவிகளுக்கு ஓசை இனிமையில் மிகுந்த நோக்கு. இது ஒருபுறமிருக்க மேலே ஒவ்வொரு பாட்டிலும் கூறப்படும் தேசம் காலம் பெயர் ப்ரபந்தம் என்ற இவற்றில் ஒரு க்ரமம் விவக்ஷிதமன்று ஒவ்வொரு பாட்டில் ஒவ்வொரு விதமாய் இருக்கலாம். ஆகையால் க்ரமமில்லையே என்று குறை நினைக்க வேண்டாம். க்ரமம் விவக்ஷிதமில்லை என்று ப்ராரம்பத்திலேயே ஸூசனம் பண்ணுவது நடுவில ஊரை வைத்ததற்கும் சிறிதான நாளைக்கூறினபிறகு பெரிதான திங்களைக் கூறினதற்கும் ப்ரயோ ஜனம், ஆகவே இங்கு குற்றமில்லை என்பது மட்டுமன்று. கவி தார்க்கிகஸிம்ஹத்தின் க்ருதியே இதென்று தருடீகரணத்திற்கு உரிய விலக்ஷண சொல் அமைப்பும் உளது.

## 9. சமதமங்கள்

பகவத் கீதையில் சமதம சப்தங்கள் மூன்று இடங்களில் இருக்கின்றன. 10, 16, 18, அத்யாயங்களில். இவற்றில் முதலிடத்தில் தம: சம: என்ற க்ரமம். மூன்றுவது இடத்தில சமோ தம: என்ற க்ரமம் இந்த இரண்டு இடங்களிலும் இரண்டு சப்தங்களுக்கு நடுவில் மற்றொரு சப்தமில்லை சேர்ந்தே காண்கின்றன. வரிசை மட்டும் வேறு. ஆனால் இந்த இரண்டு இடங்களிலும் ஒவ்வொரு பதத்திற்கும் வெவ்வேறு அர்த்தம் நம் பாஷ்யத்தில் சொல்லப்படுகின்றது. முதலிடத்தில் தமம் வெளி இந்திரியங்களை அடக்குதல். இரண்டாவது இடத்தில் மநஸ்ஸை அடக்குதல்' முதலிடத்தில் சமம் மனஸ்ஸை அடக்குதல். இரண்டாமிடத்தில் வெளி இந்த்ரியங்களை அடக்குதல் என்று. இனி நடுவான 16ம் அத்யாயத்தில்

அபயம் ஸத்த்வஸம்சுத்தி ஜ்ஞானயோகவ்யவஸ்திதி:
தாநம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்யாயஸ்தப ஆர்ஜவம்
அஹிம்ஸா ஸத்ய மக்ரோதஸ் த்யாக: சாந்தி ரபைசுநம்

என்று தமம் முதலில் வேறு இடத்திலும் பிறகு சாந்தி என்கிற சமம் வேறு இடத்திலும் கூறப்பட்டிருக்கின்றது. இங்கு நம் பாஷ்யம் தமம் என்பது மனஸ்ஸை அடக்குதல் என்றும் சாந்தி வெளி இந்த்ரியங்களை அடக்குதல் என்றும் அர்த்தம் கூறுகிறது. இதற்கு மாறாக சங்கர பாஷ்யம் முதல் இடத்தில் போலவே தமம் வெளி இந்த்ரிய நிக்ரஹம் என்று, சாந்தி மனோ நிக்ரஹம் என்றும் விவரணம் செய்கிறது. ஆகவே இங்கு நம் பாஷ்யத்திற்கும் சங்கர பாஷ்யத்திற்கும் முரண்பாடு இருக்கிறது. இங்கு தாத்பர்ய சந்திரிகையில் ஸ்வாமி

சிலர் இரண்டு பதங்களுக்கும் மாற்றி விவரணம் செய்தது இதனால் (நம் பாஷ்யத்தினால்) நிரஸ்தமாகிறது.

என்று ஸாதிக்கிறார். இதைப் பற்றி தூஷணம் தூஷணம் செய்கிறது முதலிடத்தில் நம் பாஷ்யத்திலேயே இப்படி மாற்றித்தானே விவரணம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் இதுவும் நம் பாஷ்யகாரருக்கு ஸம்மதமான அர்த்தம். இதை நிரஸ்தம் என்கிறது நம் பாஷ்யத்திற்கு கண்டநம் என்று.

க்ரந்தங்களின் வாஸ்வார்த்தம் இதற்கு தெரிவதில்லையென்று பதினாயிரம் இடங்களில் கண்டிருக்கின்றோம். அவற்றில் இது ஒன்று முதலிடத்திலும் மூன்றாம் இடத்திலும் நம் பாஷ்யத்தில் வெவ்வேறு

பொருளே கூறப்பட்டு இருக்கிறதென்று சொல்லப்பட்டது. இதற்குக் காரணம் என்னவெனில் அதை தேசிகன் ஸாதிக்கிறார்.

ஒவ்வொரு சப்தமும் இரண்டு நியமநத்தையும் சொல்லக் கூடியது. இரண்டு பதங்களும் இருக்கும்போது புநருக்தி தோஷம் வாராமைக்காக ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு நியமநம் பொருள் என வேண்டும். அப்போது இந்த்ரிய நியமநம் பண்ணுகிறவர்கள் முதலில் வெளி இந்த்ரிய நியமநத்தையும் பிறகு மனஸ்ஸின் நியமநத்தையும் செய்வார்களாகையால் இந்த க்ரமத்தை அநுஸரித்து முதலிடத்தில் முதலில் இருப்பது தம சப்தமாகையால் இது வெளி இந்த்ரிய நியமநத்தை சொல்லுகிறது. மற்றொன்று மற்றொன்றை. மூன்றும் இடத்தில் முதலில் இருப்பது சம சப்தமாகையால் இது வெளி இந்த்ரிய நியமநத்தை சொல்லுகிறது. மற்றொன்று மற்றொன்றை. இப்படி இந்த இரண்டு இடங்களிலும் வெவ்வேறு பொருள் கூறியதற்குக் காரணம் சொல்லப்பட்ட படியால் இனி அதைப் பற்றி சொல்லவேண்டியது ஒன்றுமில்லை. இனி நடு இடத்தில் இரண்டு பாஷ்யங்களுக்கும் முரண்பாடு இருக்கிறது. அவற்றில் சங்கரபாஷ்யம் முதலிடத்தில் கூறிய படியே கூறுகிறது. அதை விட்டு ஏன் நம் பாஷ்யம் வேறு விதமாகப் பொருள் கூறுகிறது என்று இங்கே கேள்வி எழுவது ஸஹஜம். இதற்கு ஸமாதானம் பாஷ்யத்தில் வ்யக்ங்யமாக இருக்கிறது,

இந்த இடத்தில் மத்தியில் வேறு பதம் ஒன்றிரண்டு இருந்தாலும் ஜ்ஞானயோகமும் பிறகு தமமும் பிறகு சாந்தி என்கிற சமமும் கூறப்பட்டிருக்கின்றன ஜ்ஞானயோகத்திற்கு முன் நிகழ்வது மநோ நியமனம் அதற்கு முன் நிகழ்வது வெளி இந்த்ரிய நியமநம் ஆகவே ஜ்ஞான யோகத்தை சொல்லி உடனே சொல்லப்படும் தமம் மநோநியமநமாய்த் தான் இருக்கவேண்டுமென்றும் அதன் பிறகு கூறப்படும் சாந்தி வெளி இந்த்ரிய நியமநமென்றும் நிச்சயித்து அப்படியே விவரணம் செய்தருளினர் பாஷ்யக்காரர்.

ஸூக்ஷ்மமான இந்த விஷயத்தை க்ரஹித்த ஸ்வாமி

தமநம் தம:. தச்ச அந்த:கரண கர்மகம். பாஹ்யேந்த்ரிய நியமநம்ஹி சாந்தி சப்தேன வக்ஷ்யதி.

என்று ஸாதித்து இந்த இடத்தில் இப்படி விவரணம் செய்ய வேண்டிய ஸ்வாரஸ்யத்தைக் கவனிக்காமல் முதலிடம் போலவே

பாஷ்யாந்தரத்தில் செய்த விவரணம் நிரஸ்தம் என்று முடித்தார். இப்படி வெகு ஸூக்ஷ்மத்ருஷ்டியோடு பாஷ்யகாரர் ஸாதித்தை ஸமர்த்தனம் பண்ணுவதற்காக அவ்வித ஸூக்ஷ்ம த்ருஷ்டியையே பண்ணி ஸாதித்திருப்பதை பெரியோர்களிடம் கேட்டு ரஸிக்க வேண்டிய இடத்தில் தூஷணம் செய்யப் புறப்பட்டது பெரும்பாப ராசியின் பலன்.

## 10 ப்ரபத்தி

வேதம் முதலிய சாஸ்த்ரம் அப்ரமாணம். ஈச்வரன் இல்லை, என்பது போல் ப்ரபத்திஅநுபாயம் என்ற வாதம் நிச்சங்கமாய் நிஸ்ஸங்கோசமாய் பஹிரங்கமாய் இப்போது செய்யப்பட்டுவருவது கலிகோலாஹலக்ரீடைகளில் ஒன்று. இதன் கண்டநத்தை நாம் விரிவாக ஸஜ்ஜநாராதனத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

> ப்ரபத்தியின் உபாயத்வத்தைக் கண்டித்து எழுதியவர் நம்முடைய ஆசார்ய வர்கத்தில் தேசிகனைப்போல் எவருமில்லை. தேசிக க்ரந்தங்களில் தொட்ட தொட்ட விடமெல்லாம் ப்ரபத்யுபாயத்வ கண்டநந்தான்.

என்கிறது தூஷணம் இது

> ஸ்ரீராகவனுடைய பெருமைகளையெல்லாம் கண்டித்து எழுதியவர் நம்முடைய மஹர்ஷி வர்கத்தில் வால்மீகி போல் எவருமில்லை. ராமாயணத்தில் தொட்ட தொட்ட விடமெல்லாம் ராகவன் பெருமை கண்டநந்தான்.

என்பது போன்றது. இங்கு சொல்ல வேண்டியதை எல்லாம் ஸஜ்ஜநாராதநத்தில் சொல்லியிருக்கிறோம், உபாய விபாகாதிகார ஆரம்ப ச்லோகத்தில் ஸ்வாமி "ஸித்தோபாயம் பகவான் அவன் ப்ரஸந்நனுவதற்கு காரணம் பக்தி ப்ரபத்தி என இரண்டு, இவற்றை அநுஷ்டிப்பது மஹா ஸுக்ருதத்தின் பலன்" என்று ஸாதித்து முடிவில் தன் ப்ராப்தி மாத்ரத்துக்கன்றி அதற்கு ஸாத்யோபாயமான பக்தி ப்ரபத்தி முதலானது உண்டாவதற்கும் பகவான் காரணம் என்று ஸாதித்திருக்கிறார். பக்தி ப்ரபத்திகள் நடைபெறுவதற்கும் ஸர்வகாரணமான பகவான் காரணம் என்றால் அவன் செய்விக்க செய்யப்படும் பக்தி ப்ரபத்திகள் உபாயமல்ல என்று எப்படி ஏற்படும். இது தன் விபரீத வாதத்திற்கு தலையாய ப்ரமாணம் என்கிறது தூஷணம். இதற்குமேல் சரமச்லோகாதிகாரத்திலுள்ள ஸ்ரீஸூக்திகளை விரிவாக உதாஹரித்து தன் மதம் ஸித்தித்துவிட்டதாக மநோரதிக்கிறது. இங்கு முதல் பாகத்தில்

அவன் காட்டின உபாயத்தை அவன் துணை செய்ய அநுஷ்டித்து என்ற வித்தால் ப்ரபத்தி உபாயமென்பதும் இதை அநுஷ்டிசுகா விட்டால் ''ப்ரபந்நாத் அந்யேஷாம் ந திசதி முகுந்தோ நிஜபதம்'' என்றபடி பரகத ஸ்வீகாரம் உண்டாகாதென்பதும ஸ்பஷ்டமாக கூறப்பட்டது. இதற்கு மேல்

> உபாயபூதனை அவன் செய்விக்க செய்கிற வ்யாஜ மாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக வெண்ணுகை உசிதமன்று,

என்றவிதில் ''வ்யாஜம் என்ற அத்யல்பமான உபாயமிது. இத்தை அவனைப் போன்ற உபாயமாக எண்ணுவது உசிதமன்று'' எனப் படுகிறது. இங்கு ப்ரபத்திக்கு உபாயத்வமில்லை என்று எந்த சொல்லால் அறிவிக்கப்படுகிறது? இப்படி ஸ்வாமி ஸ்ரீ ஸூக்தி களையே கொண்டு ப்ரபத்தியின் அநுபாயத்வத்தை அசைக்க முடியாதபடி ப்ரதிஷ்டாபநம் பண்ணின தூஷணம் மேல் எழுது கிறது:

> ரகுவம்சமும் ராமோதந்தமுமே போது போக்காய் இருப் பார்க்கு இந்த ஸ்ரீஸூக்திகளின் சுவையை அறிய விரகில்லையே ஸ்ரீதேசிக ஸித்தாந்தம் இன்னதென்றறியப்பெறாத ஜாட்ய திமிரம் கதிராயிரமிரவி கலந்தெரித்தாலும் கழியமாட்டாதே

என்று. அறியப்பெறும் ஜாட்யதிமிரம் ஒன்று உண்டு போலும். ரமணீயமான வாக்ய விந்யாஸம். இது நிற்க ''ஸ்ரீமச்சப்தத்தில் சொன்ன விசேஷணத்துக்கு'' என்ற தேசிகன் ஸூக்தியில் விசேஷ ணத்துக்கு என்றதை 'விசேஷணத்வத்துக்கு' என்று திருத்துகிறவர் களுக்குத் தான் அந்த ஸ்ரீஸூக்திகளின் சுவையை அறிய விரகுண் டேயன்றி மற்றவர்களுக்கு எப்படி இருக்கும்.

> ''அங்க்ரீ ஹரேராச்ரயே இஷ்டோபாயதயா''

என்ற பட்டர் ஸ்ரீஸூக்தி ஜரத்கவாதி வாக்யம்] போன்றது என்ன வேண்டியவர்கள் இவர்கள். ஸ்வகதஸ்வீகாரமா பரகத ஸ்வீ காரமா என்ற விகல்பததுக்கு இங்கே அவகாசமில்லை. ஸ்வகத ஸ்வீகாரம் உபாயம். பரகதஸ்வீகாரம் பலம். உபாயமா பலமா என்ற கேள்வி உண்டோ. உபாயமில்லாமலே பலம் வருமாகில் ஸர்வமுக்தி ப்ரஸங்கம். [சில பேருக்கு தான் பலமென்றால் ஈச்வர னுக்கு வைஷம்ய நைர்க்ருண்யங்கள். அவன் ஸ்வதந்த்ரனாகை யால் இவை தோஷங்களாகா என்னில் அது ந ஸாபேக்ஷத்வாத் என்ற வேதாந்த ஸித்தாந்தமாகாது.

## 11. இன்னுமொரு நூற்றாண்டு

"தேசிகன் நூறு திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். அவருடைய அந்த்ய காலத்தில் இன்னுமொரு நூற்றாண்டிரும் என்று பாடியது பொருந்துகின்றது." என்றும் பாரிஜாதபுஷ்பத்தில். இப்படி 'அந்த்ய காலத்தில்' என்று நாம் எழுதியிருக்க "இவ்வாழ்த்து தேசிகன் நூறு ஸம்வத்ஸரம் ஜீவித்திருந்த பிறகு தோன்றிய தென்று இவருடைய மருள்" என்கிறது தூஷணம். ப்ரபந்தாநுஸந்தாந தீபிகையின் படி ஸ்வாமியின் எழுபத்தொன்பதாவது ப்ராயத்திலேயே அவதரித்தது இந்த வாழ்த்து. ஆகிலும் இதை இயற்றினவர்கள் ஸ்வாமியின் தேஜோவிசேஷத்தை ஸேவித்து ஸ்வாமி வேத நூற் பிராயம் நூறு புகுவது நிச்சயமென்று த்ருடமாக அத்யவஸித்து இந்த நூறு போக இன்னுமொரு நூற்றாண்டிரும் என்றனர் அப்படியே நடந்தது. இப்போது ஸ்வாமி திருவடியைச் சேர்ந்தவர்கள் அநுஸந்திப்பது பொருந்துகிறது. எழுபத்துமூன்று திருநக்ஷத்ரம் ஆர்த்திப்ரபந்தம் செய்தருளும்படி எழுந்தருளியிருந்த ஸ்வாமி விஷயத்தில் அவர் ஜீவந காலத்தில் ஒருவருக்கும் இவர் ஒரு புருஷாயுஷம் முழுவதும் ஜீவித்திருப்பர் என்ற எண்ணமுண்டாவதற்கு ப்ரஸக்தியே இல்லாமையால் இன்னுமொரு நூற்றாண்டு என்று வாழ்த்துப்பா உதிக்க ஸாதராம் ப்ரஸக்தி இல்லை. ஒரு நூற்றாண்டு இல்லாதவர்விஷயத்தில் அவர் ஜீவந காலத்திற்குப் பிறகு ஸ்வயமாக ஒரு சிஷ்யர் "இன்னுமொரு நூற்றாண்டு" என்றார், என்பது அத்யந்தம் அஸம்பாவிதம். ஆகவே இது அநுகரணம். வெகு காலத்திற்குப் பிறகு ஸ்பர்தையினால் கலஹத்திற்காகவே ஏற்பட்டது. இந்த உண்மையை எவரும் அபலாபம் செய்யமுடியாது.

## 12. கண்ணினுள்ளன

முனிவாஹந போகத்தில் முதற்பாட்டில் "என் கண்ணினுள்ளன வொக்கின்றதே" என்றவிடத்தில் "ஒரு உத்ப்ரேக்ஷையாலேயருளிச்செய்கிறார்" என்றுள்ளது. இங்கு வஸ்தூத்ப்ரேக்ஷையா ஹேதூத்ப்ரேக்ஷையா பலோத்ப்ரேக்ஷையா என்று கேட்பாருளர் என்று சந்த்ராலோகபாண்டித்ய ப்ரக்யாபந புரஸ்ஸரம் கேள்வி கேட்கப்படுகின்றது. உத்ப்ரேக்ஷை வாச்யா என்றும் கம்யா என்றும் இரண்டு விதம். இங்கு கம்யா. கண்ணில் திருக்கமலபாதம் இருப்பதாகிற வஸ்து உத்ப்ரேக்ஷிக்கப்படுகின்றது. இந்தக் கேள்வி 24 வருஷங்களுக்கு முன் கேட்கப்பட்டு ஸமாதானம் பெற்றிருக்கிறது. 1947 ஹு ஜனவரி-பிப்ரவரி மாஸ உத்யான பத்திரிகையில் ப்ரதிபோதனம் என்ற சீர்ஷகத்தின் கீழ் இதைப் பார்க்கலாம்.

இப்படி ஸமாதானம் கூறப்பட்ட பழைய ப்ரச்னங்களையே புதியன போல் வெளியிடுவது யுக்தமன்று. தவிர ஸ்வாபதேசபதம் விவக்ஷிதார்த்த வாசகமாகாது என்ற ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் சொல்லவேண்டிய ப்ரகரணத்தில் இந்தக்கேள்வி கேட்பது அஸம்பத்தம். காலில்...... என்றால் தலையில் என்பது போன்றது

இவர்களுடைய அலங்கார சாஸ்த்ர மஹா க்ரந்தமான சந்த்ரா லோகத்தின் படி இங்கே உத்ப்ரேக்ஷை காணவில்லை. ஆகையால் இங்கே தேசிகன் ப்ராந்தர் அர்த்தமில்லாமல் ஏதோ சொல்லியிருக்கிறார் என்பது இதன் நிர்தாரணம். ஆகையால் இங்குள்ள பரமார்த்தத்தை சிறிது விவரிக்கிறோம்.

இங்கு திருவடிகளில் வைத்த கண் வாங்க வொண்ணாதபடியான போக்யதாதிசயத்தை ஒரு உத்பரேக்ஷையாலே அருளிச்செய்கிறார்.—(என் கண்ணினுள்ளன.) (ஒக்கின்றதே) தேவாதிகளில் தலைவரான ப்ரஹ்மாதிகளுடையவும் ஸநகாதிகளான யோகிகளுடையவும் திவ்ய சக்ஷுஸ்ஸுக்கங்களுக்கும் கூட தூரமாயிருக்கக் கடவை மநுஷ்ய மாத்ரனான மாம்ஸ சக்ஷுஸ்ஸுக்கும் அத்யாஸந்நமாயிரா நின்றனவென்று ஆச்சரியபடுகின்றார் என்று ஸ்ரீஸூக்தியை படிக்கவேணும்.

என் கண்ணினுள்ளன என்பது ஒரு வாக்யம். ஒக்கின்றதே என்பது இது என்ற அத்யாஹாரம் பண்ணின பதத்துடன் சேர்ந்து மற்றொரு வாக்யம். இவற்றில் முதல் வாக்யத்திற்கு அவதாரிகை இருக்கிறது. இரண்டாவதுக்கு விவரணம் மட்டும் இருக்கிறது.

முதல் வாக்யத்தில் ஒரு உத்ப்ரேக்ஷை இருக்கிறது என்கிறார் ஸ்வாமி. அப்படியல்லாததை 'அப்படிப்பட்டது போலும்' என்பது உத்ப்ரேக்ஷை. கண்ணில் இராத திருவடிகளை உள்ளனபோலும் என்கிறார் ஆழ்வார். ஆகையால் இங்கு உத்ப்ரேக்ஷை, போலும் என்ற சொல் இல்லாமலே உத்ப்ரேக்ஷை அறியப்படுகின்றதாகையால் கம்யோத்ப்ரேக்ஷை என்று இதைச் சொல்வார்கள். எம்பெருமானுடைய திருவடிகள் மிகவும் போக்யமாயிருக்கின்றன. ஆகையால் வைத்தகண் வாங்காமல் அவற்றை ஸேவிக்கிறார் ஆழ்வார். கண்ணை விட்டு அவை அகலவேயில்லை. அதனால் என் கண்ணில் இருக்கின்றன அவை என்கிறார். உண்மையில் அவை கண்ணில் இராவாகையால் இருக்கின்றன போலும் என்பது அவர் கருத்து என்று அறிகிறோம். ஆகையால் இது உத்ப்ரேக்ஷை.

இல்லாதவற்றை இருப்பதாகச் சொன்னால் இது அதிசயோக்தியாகுமேயன்றி உத்ப்ரேக்ஷை எப்படியாகுமென்று அறியாதவர்கள் ஆக்ஷேபிக்கக் கூடும். சந்த்ரன் அல்லாத முகத்தை சந்த்ரன் என்றால் இது அதிசயோக்திதானே, ரூபகம் எப்படியாகும் என்று கேட்டால் அவர்கள் வாய் அடங்கிவிடும்.

ஆகிலும் இங்கு தத்வத்தை விளக்குகின்றோம். ஸ்வபாவோக்தி தவிர மற்ற எல்லா அலங்காரங்களிலும் அதிசயோக்தி இருக்கத்தான் செய்யும் ஆகிலும் ஏதோ ஒன்றின் தன்மையை மிகைப் படுத்திக் கூறுவதில் எங்கு நோக்கோ அங்கு தான் அதிசயோக்தி அலங்காரம். இந்த நகரத்து மாளிகைகள் சந்த்ரனைத் தொடுகின்றன என்றவிடத்தில் மாளிகைகளின் உயரம் மிகைப்படுத்திக் கூறப் படுகின்றது. ஆகையால் இங்கு அதிசயோக்தி. ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் ஒன்றையும் மிகைப்படுத்திக் கூறவில்லை. கண்ணில் இராதவை இருப்பதாகக் கூறப்படுகின்றன. அதனால் அதிசயோக்தியில்லை உத்ப்ரேக்ஷையே. இதெல்லாம் முன்பே விளக்கப்பட்டது.

## 13 பிராட்டி உபாயம்

பாரிஜாத புஷ்பத்தில் (ப. 102) "பிராட்டிக்கு புருஷகாரத்வம் தவிர உபாயகோஷ்டியில் ப்ரவேசமுண்டா இல்லையா என்ற வித்யாதி." என்றிருக்கிறது. இங்கு சாஸ்த்ர பரிசயமுள்ளவர்களுக்கு "உபாய கோஷ்டி" என்பது அஹ்ருத்யமாக இருக்கும் உபாயகோடி என்று இருக்க வேண்டும். திருத்தம் இருக்கிறதா என்று பார்ப்பார்கள். தாமாகவும் திருத்திக்கொள்வார்கள். திருத்தம் செய்யப்பட்டிருக்கிறது. கோஷ்டி என்றே வைத்து அதிக ப்ரஸங்கங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

பிராட்டிக்கு உபாயத்வம் உண்டென்று ஸ்தாபிக்கும் ஸ்வாமிக்கு என்ன திருவுள்ளமென்பதை உணரவேண்டும். மோக்ஷார்த்தமாக எம்பெருமானிடத்தில் பண்ண வேண்டிய ப்ரபத்தி அதற்கு விரோதியான ஸகல பாபங்களும் கழிந்து எவ்வித வைகல்யமும் இல்லாமல் நன்றாக நடைபெறவேண்டும், அதற்காக பகவான் அபிகம்யனாக வேண்டுமென்று முதலில் ஸ்ரீ ப்ரபத்தி பண்ணப்படுகின்றது. இந்த ப்ரபத்தியினால் "அள்து தே" என்ற பிராட்டி அநுக்ரஹத்தைப் பெற்றுப்பிறகு த்வயோச்சாரணபூர்வகம் பக்வத் ப்ரபத்தி பண்ணப்படுகின்றது. இதில் ஆத்மரக்ஷாபரஸமர்பணம் அங்கி. இந்த ஸமர்ப்பணம் யாரிடத்தில்? பகவானிடத்தில் மாத்ரமா ஸபத்நீகனான அவனிடத்திலா? எனில் அநுஷ்டான

ப்ரகாசகமான த்வய மந்த்ரத்தில் ஸ்ரீமந் நாராயண என்றிருப்பதா லும் உத்தர கண்டத்தில் போலவே இதிலும் விசேஷணத்தை விடுவதற்கு ஒரு ந்யாயமுமில்லாதபடியாலும் ஸபத்நீகனுன அவ னிடத்தில் என்று ப்ராமாணிகர்கள் இசையாமல் இருக்கமுடியாது. இதை

உத்தேச்யத்வம் ஜநநி பஜதோருஜ்ஜிதோபாதிகந்தம்
ப்ரத்யக்ருபே ஹவிஷி யுவயோரேக சேஷித்வ யோகாத்

என்றும்

மஹேந்த்ராக்நாவிஷ்ணுப்ரப்ருதிஷு மஹத்த்வப்ரப்ருதிவத்
ப்ரபத்தவ்யே தத்வே பரிணமித வைசிஷ்ட்ய விபவாம்

என்றும் ஸ்வாமி ஸ்பஷ்டமாக ஸாதித்திருக்கின்றூர். "இப்படி ஈச் வரன் ஸர்வசேஷியாம் போது "அஸயா மம ச சேஷம் ஹி விபூதி ருபயாத்மிகா. இதி ச்ருதி சிரஸ்ஸித்தம மச்சாஸ்த்ரேஷ்வபி மாநத" என்றும் "உபயாதிஷ்டாநஞ்ச ஏகம சேஷித்வம் என்றும் சொல்லு கிறபடியே ஸபத்நீகனுயிருக்கும் அக்நீஷோமீயாதிகளில் போல ஆத்ம ஹவிருத்தேச்யத்வம் இருவருக்கும் என்று தோற்றுகைக்காக சேஷி கள் இருவராயிருக்க சேஷித்வம் ஏகம என்கிறது." என்பது மூல மந்த்ராதிகார ஸ்ரீஸூக்தி இப்படி விசிஷ்டனே உத்தேசித்து ஸமர்ப் பிக்கப்பட்ட பரத்தை விசிஷ்டனுகவே ஸ்வீகரிக்கிறுன் என்பது தானே ஸித்திக்கின்றது. இதனுல் விசிஷ்டனே ஸித்தோபாயமாக வரிக்கப்படுகிறுன் என்பதும் விசேஷணமாக நிற்கிற பிராட்டியும் உபாயமாகிறுள் என்பதும் தெளிவு. ஸமர்ப்பித்த பரத்தை ஸ்வீகரிக்கவேணும் என்று பகவானிடத்தில் விண்ணப் பித்து அவன் ஸ்வீகரிக்க தானும் ஸ்வீகரிக்கிறுள் என்பது யுக்தம். இனி பரத்தை ஸ்வீகரித்த தம்பதிகள் என்ன செய்கிறுர்கள் என்று பார்க்கும்போது "வேரிமாறுத பூ மேல் இருப்பாள் வினை தீர்க்குமே" என்பது முதலான ப்ரமாணங்களை அநுஸரித்து பல ப்ரதான ஸங்கல்பம் விசிஷ்டனுக்கே அதாவது பத்னி பதி இரு வருக்கு முண்டு எனலாம். விசேஷணமானுலும் சரீராதிகள்போல் அசேதனமன்றி சேதனயாகையால் இந்த விசேஷணத்திற்கு ஸங்கல்பாச்ரயத்வமும் இருக்கலாம். ஆகிலும் விசேஷணமாய் ச்ருதையானபடியாலே எம்பெருமானேடு ஸமமாக பலப்ரதான ஸங்கல்பாச்ரயத்வம் உசிதமில்லையென்று கருதுகின்றவர்கள் "அது பகவானுக்கு மட்டும் இவளுக்கு இல்லை" என்று கொள்ள லாம். ஆனுல் அந்த ஸங்கல்பத்தை த்வரையாகப் பண்ணும்படி வாத்ஸல்யப்ரயுக்தமான நிர்பந்தத்தோடு விண்ணப்பம் செய்வது இவள் வ்யாபாரமாகும். முக்திஹேதுத்வத்தைச் சொல்லுகிற

வசன ஸ்வாரஸ்யத்தை அநுஸரித்து ஸங்கல்பாச்ரயத்வத்தைச் சொல்வதிலும் மந்த்ரத்திலுள்ள விசேஷணத்வத்தைக் கருதி ஸங்கல்பாச்ரயத்வத்தை விட்டு உத்தேச்யத்வ பரஸ்வீகாராதிகளைச் சொல்வதிலும் அநுபபத்தி ஒன்றுமில்லை. உபாயத்வம் மட்டும் துரபஹ்நவம். அபஹ்நவம் பண்ணுகின்றவர்கள் "இதில் அபிநிவிஷ்டர், ப்ராமாணிகராசமாட்டார்கள்" என்கிறார் ஸ்வாமி. ஒன்றில் அபிநிவேசமில்லாமல இப்படி "பரிபூர்ணாநுபவப்ரதாந ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸ்யைவ வா ஸ்பதநீகஸ்யவேதி யதாப்ரமாணம் பவது" என்றிப்படி ஸாதித்திருப்பது ஸ்வாமியின் ப்ராமாணிகத்வ காஷ்டையைக் காட்டுகிறது. அவரவர் ருசிப்படி எதை ப்ரமாணமாகக் கொள்கிறார்களோ அதன் படி இருக்கட்டும். நான் ஒரு பக்ஷத்தில் அபிநிவிஷ்டன் அல்லேன் என்பது கருத்து. இதற்கு முன் வாக்கியம்

மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணாம் கடகதயா
திஷ்டதீதி ச ஸர்வஸம்மதம்.

என்பது. இதற்கு "மோக்ஷத்தைக் கொடுக்கின்ற பகவானிடத்தில் முமுக்ஷுக்களை சேர்த்துவைக்கின்றவள் இவள் என்பது எல்லோருக்கும் ஸம்மதம்" என்பது பொருள். மோக்ஷப்ரதே என்றதினால் மோக்ஷ ஸாதனமான ப்ரபத்தியை அநுஷ்டித்த முமுக்ஷுக்கள் இங்கே கருதப்பட்டனர் என்பது தெளிவு. இதற்கு அடுத்த மேல் வாக்யத்தில் பரிபூர்ணாநுபவப்ரதான ஸங்கல்பத்தைச் சொல்வதால் அதற்கு முன், ப்ரபத்தியநுஷ்டானத்திற்குப் பிறகு, பிராட்டி செய்தருளும் கடநமே இங்கு விவக்ஷிதம் என்பதும் ஸுகமம். ஆகையால் பரஸமர்ப்பணத்தில் உத்தேச்யதையாலும் ஸமர்பிதபர ஸ்வீகாரத்தாலும் அதற்குமேல் "அநாதி காலமாயுள்ள ஸகல அபராதங்களையும் போக்கி இவனைப் பரிபூர்ணனுபவமுள்ளவனாகச் செய்தருளவேணும்" என்றுபதியினிடத்தில் ஸப்ரணயம் ஸாதரம் பண்ணும் விண்ணப்பத்தாலும் பிராட்டிக்கு இருக்கும் உபாயத்வத்தைப் பற்றியது இவ்வாக்யம். பகவத் ப்ரபத்திக்கு முன் இவள் செய்யும் வ்யாபாரத்தைப் பற்றியதன்று. இதற்கும் முன்உள்ள வாக்யம்

ஏவம் ஸ்திதே கத்யாரம்போக்த ந்யாயேந மோக்ஷோபாய
தததிகாரயோஸ்தாவத் ஏதந் மூலத்வம் துரபஹ்நவம்

என்பது. இதனால் ப்ரபத்தியில் அதிகாரமும் அதன் அநுஷ்டானமும் இவளால் ஸித்திக்கிறது எனப்படுகிறது. இது இவளிடத்தில் பண்ணப்படும் ப்ரபத்தியின் பலன். இதை நன்றாகக் கவனித்தால் அடுத்த வாக்கியத்தில் கடகதயா திஷ்டதி என்றது பகவத் ப்ரபத்

திக்குப் பிறகு பிராட்டி செய்தருளும் வ்யாபாரம் என்று சொன்னது த்ருடீக்ருதமாகும்-

அஸ்தி கர்மார்ஹபலதே பத்யள க்ருத்யத்வயம் ச்ரிய :
நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணம் அநுக்ரஹே.

என்ற விடத்திலும் ப்ரபன்னன் விஷயமாக, அவன் செய்த ப்ரபத்தியில் பகவான் போலவே உத்தேச்யையாயும் ப்ரஸ்வீகர்த்ரியாயும் அதனால் உபாயபூதையாயும் இருக்கிற பிராட்டியின் க்ருத்யங்கள் சொல்லப் படுகின்றன. இதனால் பிராட்டிக்கு உபாயத்வம் ப்ரதிஷ்டிதமேயன்றி ப்ரதிஷித்தமில்லை: ஸந்துக்ஷணம் –தூண்டுதல்.

வைஷ்ணவாத்வா எனப்பட்ட பகவத் ப்ராப்தி பிராட்டியின் ப்ரஸாதமின்றி கிடைக்காது என்று ஸ்ரீ ஆளவந்தார் ஸாதித்திருப்பதை உபபாதிக்கும்ப்ரகரணத்தில்'' மோக்ஷப்ரதத்வம் பகவானுக்குத் தானே எங்கும் சொல்லியிருக்கிறது. ஆகையால் பிராட்டி அநுக்ரஹமில்லாமல் முக்தி கிடைக்காது என்பது வெறும் ப்ரசம்ஸாபரமென்று கொள்ளவேண்டும்,' என்ற ஆக்ஷேபத்தை நிரஸநம் பண்ணும்போது,

ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமான குண ஸமுத்ரத்தைத் தாண்டுவதற்குக் காரணமாகையால் லக்ஷ்மீ ஸ்மாச்ரயணம் பண்ணவேணும் என்று ஸ்ரீ ஸாத்வதத்தில் சொல்லி யிருப்பதால் அந்த ஆக்ஷேபம் ஸரியன்று

என்கிறார் ஸ்வாமி, இதனால் உபாயத்வம் பிராட்டிக்கும் உண்டென்பது வ்யக்தம், இந்த உபாயத்வத்தை கடகத்வம் வரையில் எல்லாரும் அங்கீகரிக்கின்றார்கள். கடைசியிலுள்ள புருஷார்த்த ப்ரதான ஸங்கல்பத்தில் அபிப்ராய பேதம் இருக்கிறது. அதை அவரவர் அபிப்ராயப்படி அவரவர்கள் கொள்ளட்டும் என்று ஸ்வாமி திருவுள்ளம். இங்கு'பகவத: ஸ்வஸ்யைவ வா ஸபத்நீகஸ்ய வா' என்று ஸ்ரீஸூக்தி இருக்கின்றது, ஸபத்நீகஸ்ய வா என்றாலும் பத்ந்யா அபிவா என்றாலும் ஒரே பொருள்தான். உபாயப்ரகாசகமான மந்த்ரத்தில் பிராட்டி விசேஷணமாயிருப்பதால் ஸங்கல்ப தசையிலும் அப்படியே நிர்தேசம் பண்ணுவது உசிதம் என்ற திருவுள்ளத்தால் ஸபத்நீகஸ்ய வா என்றார், நாம் "உபாய கோடியில் ப்ரவேசம்' என்றதற்கும் இதே கருத்து.

இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா
என்ற ந்யாய ஸித்தாஞ்சன காரிகையில் விசிஷ்டோபாயத்வமே

விவக்ஷிதம். அன்றேல் "இயம் கேவல ஸர்வேசோபாயத்வப்ரத்ய யாத்மிகா' என்று ஸாதிக்கப்பட்டிருக்கும், மந்திரத்தில் உபலக்ஷண பக்ஷத்தை நிரஸித்து விசேஷண பக்ஷத்தை ஸ்தாபனம் பண்ணின ஆசார்ய ஸ்ரீஸூக்தியில் ததநுரூபமான பதம் ப்ரயோகிக்கப் பட்டிருக்கும் இடத்தில் வேறு பொருள் கூறுவது யுக்தமன்று.

ரஹஸ்யரத்நாவளியில் "பெரிய பிராட்டியார் புருஷகார மாய்க் கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிறாள் " என்று ஸாதித்திருப்பதால் பிராட்டிக்குப் புருஷகாரத்வமாத்ரமே ஸ்வாமி ஸம்மதம். உபாயத்வம் ஸம்மத மன்று, என்பதில்லை. பிராட்டி புருஷகார க்ருத்யத்தைச் செய்வது எப்போது என்று பார்க்க வேண்டும். முமுக்ஷுவான புருஷன் பகவானிடம் சென்று "சரணம் ப்ரபத்யே" என்ற பிறகுதான்' என வேண்டும். ரக்ஷணத்திற்கு பகவான் வ்யாஜஸாபேக்ஷனுகையாலே ப்ரபத்திக்கு முன் ஒருவனைப் பற்றி விசேஷ சிந்தனம் எதுவும் இல்லாமல் இருந்த அவன் ப்ரபத்தி அனுஷ்டித்த பிறகு அதை ஏற்று அவன் கோரிய பலனைத் தரவேண்டியது ப்ரஸக்தமாகிறது. அப்போது அவன், இவன் அநாதிகாலமாகச் செய்துவந்த அபராதங்களை நினைத்துத் தயங்காமல் இவன் அநுஷ்டித்த ப்ரபத்தியை ஏற்றுக்கொள்வதற்காகப் புருஷகாரம் வேண்டியிருக்கிறது. அப்போது பகவானிடத்தில் அநுஷ்டிக்கும் ப்ரபத்தி மாத்ரத்தாலேயே அந்த க்ருத்யத்தைப் பிராட்டி செய்கின்றாளா அதவா அதற்காக இவளிடத்திலும் ப்ரபத்தி பண்ணவேண்டுமா என்று பார்க்க வேண்டும். அபேக்ஷை பண்ணுதவனுக்குத் தானே அநுக்ரஹம் செய்கின்றாள் பிராட்டி என்பதற்கு ஒரு ப்ரமாணம் இல்லாமையாலும் ஔசித்ய மில்லாமையாலும் அவளிடத்திலும் ப்ரபத்தி பண்ணவேண்டுமென்பது அபரிஹார்யம். இனி இந்த ப்ரபத்தி பகவத்ப்ரபத்தியைக் காட்டிலும் வேறுபட்டுத் தனியே செய்யப்பட வேண்டியதொன்றா அதவா அதிலேயே அடங்கினதா என்றகேள்வி எழுகின்றது. ஸ்ரீமந் நாராயண சரணென என்று விசிஷ்டனுக்கே உபாயத்வம் தோன்றுகிறபடியால் பகவத் ப்ரபத்தியிலேயே அவளுடைய ப்ரபத்தியும் அடங்கிவிடுகிறதென்று நிச்சயிக்கப் படுகிறது, மாதாவான பிராட்டி இந்த ப்ரபத்தியை ஏற்றுக்கொண்டு தேவரீரும் இதை அங்கீகரித்து பலப்ரதான ஸங்கல்பம் பண்ண வேண்டுமென்று பகவானிடத்தில் விண்ணப்பிக்கின்றாள். அவனும் அப்படியே செய்கின்றான். அவன் அந்த ஸங்கல்பத்தைச் செய்யும் போது தானும் ஸங்கல்பிக்கிறாள் என்று கொள்வதில் பாதகம் ஒன்றுமில்லை. ஆனால் கொள்ளவேண்டும் என்று நிர்பந்திப்பார் இல்லை. ஆகவே மோக்ஷார்த்தமான ப்ரபத்தியில் பகவான்

போலவே உபாயகமாகப்பற்றப்பட்டு உசித வ்யாபாரத்தினுல் பல ஸித்திக்கு ஹேதுவாகிறபடியால் பிராட்டியும் உபாயமாகிருள் ஆதலால் விமுக்திபலதாயிநீ, ஸமஸாரார்ணவ தாரிணீ, பரமபதம் வா விதீர்ய, இத்யாதிகள் முக்யார்த்த முள்ளவைகளாகின்றன, இவளுடைய உபாயத்வத்திலேயே புருஷகாரத்வமும் அடங்குகின்றது. கத்யத்தில் அருளிச் செய்யப்பட்ட ஸ்ரீப்ரபத்தி மோக்ஷார்த்த ப்ரபத்தியன்று. பகவத் ப்ரபத்த்யர்த்த ப்ரபத்தி. இந்த ப்ரபத்தியினுல் ப்ரஸன்னையான பிராட்டி பகவத் ப்ரபத்திக்கு உபாயமாகவும் அதற்கு விரோதியான நிக்ரஹஸங்கல்பத்தை யெல்லாம் தவிரும்படி பகவானை ப்ரார்த்தித்து அபிகந்தவ்யனுகைச் செய்து புருஷகாரமாகவும் ஆகின்றுள்.

உபாயத்வ நிர்வாஹகம் புருஷகாரத்வம், புருஷகாரத்வத்தினுல் உபாயத்வம் போகாது. அபூர்வத்தினுல் யாகங்களுடைய உபாயத்வம் போல். ஸத்வாரகமான ஸாதனமும் முக்ய ஸாதநமே, சக்ரப்ரமண த்வாரா கடகாரணமானுலும் தண்டம் சக்ரம் போலவே கடகாரணம். அந்யதாஸித்தமன்று. ஸ்வதந்த்ர அந்வயவ்யதிரேகங்கள் இருப்பதால், அருணயா பிங்காக்ஷ்யா என்கிற விடத்தில் த்ரவ்யபரிச்சேத த்வாரா கரணமானுலும் ஆருண்யமும் க்ரயகரணமே த்ருதீயாச்ரவணுத். அது போலவே விசிஷ்டோபாயத்வப்ரதிபத்தியினுல் உபாயதயா ப்ரமிதையான பிராட்டிக்கு புருஷகாரபாவத்வாரா பல ஹேதுத்வமிருந்தாலும் மந்த்ரத்தாலும் மற்றும் அநேகப்ரமாணங்களாலும் ப்ரமிதமான உபாயத்வம் போகாது. புருஷகாரக்ருத்யத்திற்குப் பிறகு பலப்ரதானஸங்கல்பம் பிராட்டிக்கு முண்டு என்ற பக்ஷத்தில் உபாயத்வத்தில் சிறிதும் ஸந்தேஹமில்லை. கடகாரணமான குலாலனுக்கு அவன் பிதா காரணம். இப்படி கடகாரண காரணமான குலாலபிதாவுக்கு கடகாரணத்வமில்லை. ப்ரமணத்வாராகாரணமானதண்டத்துக்குப் போல் அந்வயவ்யதிரேக மில்லாமையாலே. அபூர்வத்வாரா யாகத்துக்குப் போலவும் புரோடாசத்வாரா வ்ரீஹிக்குப் போலவும் ஸாதநத்வம் மந்த்ரத்தினுலும் மற்றவசனங்களாலும் ப்ரமிதமாகையால் புருஷகாரபாவத்வாராபல ஸாதனமான பிராட்டிக்குப் பலஸாதனத்வம் உண்டு. சாஸ்த்ரபரிசயமில்லாதவர்களுக்கு இதை புத்தியில் ஏற்றிக்கொள்வது கடினந்தான். ஆகிலும் இதை மறுக்கமுடியாது. மறுப்பது தகாது.

காநிசித் அக்ருஹீதார்தாந்யுச்யந்தே ஸ்வமததத்பராணீதி.
வாக்யாநி விருத்தாநி து ஜரத்கவாத்யுக்தி ஸத்ருசாநி.

ஏவம் சேத் ஸோபி க்ருதீ ஸ்ரீமத்ராமாயணேபிதத்தே ய:
ராவணவிஜயவிருத்தம் யத் தத் அசேஷம் ஜரத்கவாதிஸமம்.

ப்ரபத்தேரநுபாயத்வம் யே வதந்தி கதம் நு தே
ஸ்ரீருபாயோ ந வேத்யேவம் வாதே ஸ்யுரதிகாலிண:

ஈசாநாம் ஜகதாம் அதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம் ஸம்ச்ரித்ய, ஆச்ரயணோசிதாகிலகுணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே இஷ்டோபாயதயா,

என்கிற அஷ்டச்லோகீச்லோகத்தில் முதலில் ஸாதிக்கப்பட்ட ஸ்ரீப்ரபத்திக்கு என்ன பலன் என்று பார்க்கும்போது இஷ்டோபாயதயா என்பதனால் மேல் செய்ய வேண்டியதாக இஷ்டமான பகவத் ப்ரபத்தி பலன் என்று கொள்ள வேண்டும். பிறகு செய்யப்படும் பகவத்ப்ரபத்திக்கு பலன் மோக்ஷம். இந்த இரண்டு பலனையும் கருதி இஷ்டோபாயதயா எனப்பட்டது. இல்லாவிட்டால் 'மோக்ஷோபாயதயா' எனப்பட்டிருக்கும். பகவான் மோக்ஷ ப்ரதானம் பண்ணும் விஷயத்தில் நீ புருஷகாரமாக இருக்கவேண்டுமென்று பிராட்டியினிடத்தில் தனியே ஒரு ப்ரபத்தி பண்ணும்படி ஒரு விதி இருப்பதாகவோ அப்படி அநுஷ்டானம் நடப்பதாகவோ தெரியவில்லை. வித்யா ஸாதநமாகையாலே ஆத்மவித்யா என்ற பெயர் இருப்பதாலும் கத்யாரம்பத்தில் பகவத்ப்ரபத்தி ஸித்திக்காகவே ஸ்ரீப்ரபத்திபண்ணப்பட்டிருப்பதாலும் தனியான ஸ்ரீப்ரபத்தி பகவத்ப்ரபத்திஸித்திக்கு உபாயமேயாகும். மோக்ஷார்த்த புருஷகாரப்ரபத்தியன்று. பதிப்ராதாந்யேந 'சரணௌ சரணம்' என்று அந்வயித்து உபாயத்வம் ஸித்தமாகிறது. ஆகையால் ச்லோகத்தில் "'ஆச்ரயணோசிதாகிலகுணஸ்ய'' என்கிறவிடத்தில் ஸ்ரீமத்வமும் விவக்ஷிதமென்று கொண்டு புருஷகாரப்ரபத்தியும் அதில் அடங்கியிருக்கிறதென்று அங்கீகரிக்கவேணும். "பரமம் பதம்வா விதீர்ய'' என்ற ஸ்ரீஸூக்தியோடு இதைப்பொருந்தவிடவேணும். இது கத்ய பாஷ்யத்தை அநுஸரித்துச் செய்யப்பட்ட விவரணம். இஷ்டோபாயதயா ச்ரியம் ஸம்ச்ரித்ய ஹரேரங்க்ரீ ஆச்ரயே என்று த்வயத்தில் பிராட்டிக்கு விசேஷணத்வத்தையும் அதனால் ஸித்தமான உபாயத்வத்தையும் ப்ரதிபாதநம் பண்ணுவதே பட்டருடைய இந்த ஸ்ரீஸூக்தியின் உத்தேச்யம். பிராட்டிக்கும் சரணம் ப்ரபத்யே என்றதனால் கிடைக்கும் உபாயத்வத்தை ஸ்பஷ்டமாக்குவதற்காகவே 'ஸம்ச்ரித்ய' என்று தனியே ஒரு ல்யபந்தக்ரியையை ப்ரயோகித்தது என்பது யுக்ததரம் விவரணம்.

மோக்ஷோபாயத்வம் பகவானுக்கு அஸாதாரணமாகையால் நித்யர்களுக்கும் முக்தர்களுக்கும் போலவே பிராட்டிக்கும் இல்லையென்ன வேண்டாவோ எனில் ஈசாநாம் ஜகத: என்று இவள் ஈச்வரகோடியில் சேர்ந்தவளாகையால் ஈச்வரதம்பதிகளுக்கு இது

ஸாதாரணமாகலாம். விசேஷித்து ப்ரமாணங்கள் சொல்லுகின்ற படியால் மறுக்காமல் இதை இசையவேணும்.

லக்ஷண வாக்யத்தில் லக்ஷணம் விசேஷணம் என்றால் வித்யமாநம் ஸத் வ்யாவர்தகம் என்றும் உபலக்ஷணம் என்றால் அவித்யமானம் ஸத் வ்யாவர்தகம் என்றும் விவரணம் செய்வார்கள். மற்ற வாக்யங்களில் உள்ள ஒன்றை "இது விசேஷணமா உபலக்ஷணமா" என்றால் க்ரியாந்வயியா இல்லையா என்றுதான் பொருள் ஸபரிகரோ ராஜா த்ருஷ்ட: என்றபோது த்ருஷ்டத்வம் பரிகரத்திலும் அந்வயிப்பதால் இது விசேஷணம். தார்மிகோ ராஜா த்ருஷ்ட: என்ற போது தார்மிகத்வத்தில் அந்வயிக்காததால் இது உபலக்ஷணம். லம்ப கர்ணமாநய என்றவிடத்தில் லம்பகர்ணத்வம் விசேஷணம். சித்ரகுமாநய என்றவிடத்தில் சித்ரகுத்வம் உபலக்ஷணம் என்றவிது சாஸ்த்ரங்களில் ஸுப்ரஸித்தமான விவேசநம். ப்ரக்ருதத்தில் சரணம் ப்ரபத்யே என்பது ஸ்ரீயிலும் அந்வயிததால் தான் விசேஷணத்வம். இல்லாவிட்டால் உபலக்ஷணத்வம் தான். இந்த பக்ஷத்தை ஸ்வாமி நிரஸிக்கிறார். பெருமாளுக்கு பிராட்டி நித்யம் விசேஷணமாயிருக்கின்றாளா இல்லையா என்ற விசாரமே இங்கு இல்லை. ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸ்வநிஷ்டாபிஜ்ஞாநரதிகாரம் ஒன்றைச் சேர்க்கும் படியான கல்யாணகுண பூர்ணரான ஸ்வாமி ஸாபிநிவேசம் உபலக்ஷணபக்ஷத்தை ஏன் நிரஸிக்கிறார் என்று ஆலோசித்துப் பார்க்க வேண்டும்.

ஆநந்தமயாதிகரணத்தில் பூர்வபக்ஷி நீலம் உத்பலம் என்றவிதில் நீலத்வ உதபலத்வ உபலக்ஷித வஸ்துவின் ஏகத்வமாத்ரம் ஸாமாநாதிகரண்யேந ப்ரதிபாத்யதே என்றான். அங்கு ஸித்தாந்தத்தில் "நீலம் உத்பலம் ஆநய" என்று சொன்ன போது நீல நிறமுள்ள பொருளே கொண்டு வரப்படுகிறது என்பது ஸ்ரீ பாஷ்யம். ஆகவே க்ரியாந்வயித்வமுள்ளபோது விசேஷணத்வம். இல்லாத போது உபலக்ஷணத்வம் ஸர்வஸம்மதம்.

இந்தரனும் மஹேந்தரனும் ஒருவனேயாகிலும் மஹேந்த்ரன் என்றவிடத்தில் மஹத்த்வவிசிஷ்டனே உத்தேச்யன். வெறும் இந்த்ரன் அன்று. அதுபோல் ப்ரக்ருதத்தில் பிராட்டியோடு கூடின நாராயணனே சரணமாக அத்யவஸிக்கப்படுகிறவன். அப்போது அக்நீஷோமீயத்தில் இதரேதரயோகத்தினால் அக்நி விசிஷ்ட ஸோமன் என்றும் ஸோம விசிஷ்ட அக்நி என்றும் விசிஷ்டமாகவே தேவதை ப்ரதீதமாகிறபடியால் தனியே எப்படி தேவதாத்வம், அதாவது ஹவிருத்தேச்யத்வம் இல்லையோ அப்படியே ஆத்ம

ஹவிருத்தேச்யத்வம் கேவல நாராயணனுக்கு இல்லை. சரணம் அடைவது என்பது ஆத்ம ஹவிஸ் ஸமர்ப்பணம். இதில் உத்தேச்யத்வம் இரண்டு பேருக்கும் உண்டு இதனால் ஸமர்ப்பித ஸ்வீகாரமும் இரண்டு பேருக்கும் உண்டு என்பது ஸித்தம். பிறகு பிராட்டியின் புருஷகாரவ்யாபாரம். ஆக ப்ரமாணத்தை அநுஸரித்து இதுவரையில் எல்லோரும் அங்கீகரிக்கவேண்டுமாகையால் பிராட்டிக்கும் உபாயத்வம் அவச்யாப்யுபேயம் என்று ஸ்வாமி திருவுள்ளம். அபேதத்தை மாத்ரம்அங்கீகரித்துபேதச்ருதியையும் கடகச்ருதியையும் பிறர் விடுவது போல் பகவான் ஒருவனுக்கே உபாயத்வம் என்று கொண்டு மந்த்ரத்தில் ஸ்ரீமத்வத்தையும், 'வினை தீர்க்குமே' 'விமுக்தி பல தாயிநீ' இத்யாதிகளையும் முக்யமாகக் கொள்ளாமல் விடக்கூடாது, என்றதாகிறது பகவானுக்கு அஸாதாரணமாகச் சொல்லப்பட்ட மோக்ஷோபாயத்வம் எப்படி நித்யமுக்தர்களான மற்ற பேர்களுக்கு இல்லையோ அப்படியே பிராட்டிக்குமில்லை யென்னவேணும் என்பது கேவலம் ஆபிமாநிகம்- பிராட்டிக்கு அது மந்த்ரலிங்கத்தாலும் ஸாக்ஷாத் வசனங்களாலும் ஸித்திக்கிறது. இதை பாதிக்கும் ப்ரமாணம் ஒன்றும் இல்லை. முக்யார்த்தம் கொள்வதில் அநுபபத்தியில்லாமையாலும் ஸந்நிஹிதமான வேறு விதி வாக்யமில்லாமையாலும் இவை மற்றவை போல் அர்த்த வாதங்கள் என்பது சேராது.

ரஹஸ்யரத்நாவளியில் பிராட்டியை ரக்ஷாஹேது என்று ஸாதித்திருப்பதால் ரக்ஷகத்வம் இல்லை என்பது அயுக்தம். ரக்ஷகனையும் ரக்ஷாஹேது எனலாம். ஸாதநம் உபாயம் ஹேது என்ற இவை பர்யாய பதங்களே. ஆகையால் ஹேது என்பதனால் உபாயத்வம் ஸித்தம். கர்த்தாவும் ஹேதுவாதலால் ரக்ஷாஹேது என்று ரக்ஷகனையும் சொல்லலாம். 'ஏஷ ஹ்யேவாநந்தயாதி' என்ற ச்ருதி வாக்யத்தின் அர்த்தத்தைச்சருதி ''தத்ஹேதுவ்யபதேசாச்ச'' என்கிறார் பாதராயணர். இவ்விடத்தில் 'ஜீவாநந்தஹேதுரயம் வ்யபதிச்யதே' என்பது ஸ்ரீபாஷ்யம். ''ஜீவாந் ப்ரதி ஆநந்தயித்ருத்வ வ்யபதேசாச்ச'' என்பது தீபம். ஆநந்தஹேது என்பதும் ஆநந்தயிதா என்பதும் பர்யாயமே என்பது இங்கு ஸ்பஷ்டம். லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யா காருண்யரூபயா, ரக்ஷக: ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே' என்ற வசனம் ரக்ஷகத்வத்தையே பிராட்டிக்குச் சொல்லுகிறது.

பரிபூர்ணநுபவ ப்ரதான ஸங்கல்பஸ்து பகவத: ஸ்வஸையைவ வா ஸபத்நீகஸ்ய வா இதி யதாப்ரமாணம் பவது

என்று ஸ்வாமி நிர்தாரணமில்லாமல் ஸாதித்திருப்பதின் கருத்தை முன்பே ஸூசனம் பண்ணினோம். ப்ராமாணிக அர்த்தங்களை ஸ்தாபிப்பதையும் மற்ற அர்த்தங்களை நிரஸிப்பதையும் வ்ரதமாகக் கொண்டவர் ஸ்வாமி. இதுபோலவே ஸ்பஷ்டப்ரமாணமில்லாத விஷயத்தில் தாமாக ஒரு நிஷ்கர்ஷம் செய்து அதை அபிநிவேசத்துடன் ஸ்தாபிப்பதில்லை என்ற வ்ரதத்தையும் கொண்டவர், இதை ஸ்வாமி தத்வமுக்தாகலாபத்தின் முடிவில் தாமே ஸாதிக்கின்றார்.

> ஸர்வ வஸ்துக்களுடையவும் ஸ்வரூப ஸ்வபாவங்களை இங்கு நான் ஸ்தாபிக்கின்றேன். ஆகிலும் நான் எந்த விஷயத்தில் உதாஸீநமாய் இருக்கின்றேனோ அல்லது எந்த விஷயத்தில் விகல்பமாகப் பேசியிருக்கின்றேனோ அதெல்லாம் பெரியோர்களுக்கு ஸம்மதமானதே

என்று அருளிச் செய்கிறார் அங்கு. பிராட்டியின் உபாயத்வம் அநந்யதாஸித்த பஹுப்ரமாணப்ரமிதம். ஆகையால் இதை அபிநிவேசத்துடன் ஸாதிக்கின்றார் பலப்ரதானஸங்கல்பம் பிராட்டிக்கு உண்டு என்பதில் ஸ்பஷ்டப்ரமாணமில்லை. உபாயத்வ போதக ப்ரமாணங்களுக்கு பலப்ரதாந ஸங்கல்பாச்ரயத்வத்திலும் தாத்பர்யமிருக்கலாம். பதிப்ராதான்யத்தையும் பிராட்டியின் பாரதந்த்ர்யத்தையும் பராமர்சித்துப் பார்ப்பவர்களுக்கு அவற்றுக்கு அதில் தாத்பர்யமில்லையென்று தோன்றுமாகையால் அப்படியும் இருக்கலாம். ஆகையால் இங்கு விகல்பமே கொள்கிறோம் என்கிறார் ஸ்வாமி, இப்படி நிர்த்தாரணம் இல்லாமல்விஷய நிருபணத்தை முடித்தால் நாம் செய்வது என்னென்னில் இதற்கு ஸமாதானத்தையும் ஸாதிக்கின்றார்.

> ஈச்வரதத்வத்தையும் ஈச்வரதத்வங்களையும் யதாப்ரமாணம் தெளிய ப்ராப்தம். இவ்விடத்தில் ஸர்வஜ்ஞனாகவும் வேண்டா. அத்யந்தாநுபயுக்தங்களிற் போலே ஸ்வல்போபயுக்தங்களானவற்றில் அபிஸந்தி பண்ணவும் வேண்டா அபரிச்சேத்யமான கடலிலே படகோட்டுவார் வழி முதலாக வேண்டுவன தெளியுமாப்போலே இவ்வளவு விவேகிக்கை அவச்யாபேக்ஷிதம்.

என்பது தத்வத்ரய சிந்தநாதிகார ஸ்ரீஸூக்தி.

> இந்த தத்வரத்நாவளியில் ஏதேனும் ஒன்றையும் எல்லாப்ரகாரத்தாலும்தெளிகை ஸர்வஜ்ஞனுக்கல்லது கூடாமையாலே உபயுக்ததமான இவ்வளவு தெளிந்தாலும் உபாயபல ஸித்தியுண்டாம்

என்பது ஸ்ரீதத்வரத்நாவளீ ஸ்ரீஸூக்தி. முமுக்ஷுவானவன் பலஸித்திக்காக உபாயாநுஷ்டானம் பண்ணுவதற்கு வேண்டிய உபாய ஸ்வரூபாதிஜ்ஞாநத்தைப் பெற்று அதை அநுஷ்டித்து விட்டால் சரண்யதம்பதிகள் ரக்ஷித்து விடுகிறார்கள் என்பது நிச்சயம். ரக்ஷா ஸங்கல்பம் ஒருவருக்கு மட்டுமா இரண்டு பேருக்குமா என்கிற விஷயத்தைப் பற்றி நாம் சிந்திக்கவேண்டிய அவச்யமில்லை. இதில் நிச்சயம் நமக்கு அநபேக்ஷிதம், அதனாலேயே சாஸ்த்ரங்கள் ஸ்பஷ்டமாகச் சொல்லவில்லை. ஆகையால் ஒரு பக்ஷத்தை நிஷ்கர்ஷித்துச்சொல்லவில்லை என்பது கருத்து. சதுச்ச்லோகிபாஷ்யத்தில், ஸ்ரீவிஷ்ணுசித்தருடையவும் வ்யாஸார்ய நுடையவும் ஸ்ரீஸூக்திகளை உதாஹரித்தது பகவத்ஸமாச்ரயணத்திற்கு பிராட்டி ஸமாச்ரயணம் உபாயம் என்பதை நிரூபிப்பதற்காக. இதனால் மோக்ஷத்திற்காக பகவத்ஸமாச்ரயண காலத்தில் பிராட்டி ஸமாச்ரயணமில்லை என்பது ஸித்திக்காது. பாஷ்யகாரரருளிச்செய்த ஸ்ரீப்ரபந்நகத்யத்தின் அவதாரிகையன்றோ அவை.

பிராட்டியின் உபாயத்வ விஷயத்தில் இதுவரை செய்த நிருபணத்தின் ஸாராம்சமாவது:—

1. பகவான் மோக்ஷம் தருவதற்கு நீ புருஷகாரமாய் இருக்க வேண்டுமென்று பிராட்டியினிடத்தில் தனியே ஒரு ப்ரபத்தி பண்ணவேண்டியதாக ஒரு ப்ரமாணமோ அநுஷ்டாநமோ இடையாது. ப்ரபத்தியை அபேக்ஷிக்காமல் தானே புருஷகார க்ருத்யத்தைச் செய்கிறாள் என்பதற்கும் ஒரு ப்ரமாணமில்லை.

2. கத்யத்தின் ஆரம்பத்தில் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீப்ரபத்திக்கு மோக்ஷார்த்த பகவத்ப்ரபத்தி ஸித்தியும் அவன அபிகம்யனுகையும் பலம்.

3. பகவானிடத்தில் ப்ரபத்தி பண்ணும்போது கரணமந்த்ரமான த்வயத்தில் சரணௌ சரணம் ப்ரபத்யே என்பது விசேஷணமான பிராட்டியினிடத்திலும் அந்வயிப்பதால் சரண சப்தார்த்தமான உபாயத்வம் பிராட்டிக்கு உண்டு. இருவரையும உத்தேசித்தே பரஸமர்ப்பணம் செய்ய வேண்டும் என்றதாகிறது.

4. பகவான் போலவே உத்தேச்யையான பிராட்டி ஸமாப்பித பரத்தைத் தான் ஏற்றுக்கொண்டு பகவானும ஏற்றுக்கொள்ளும்படி செய்கிறாள்.

5. பிறகு பலப்ரதான ஸங்கல்பத்தில் பகவானுக்கு த்வரையை உண்டாக்கித் தானும் அந்த ஸங்கல்பத்தைப் பண்ணியோ பண்ணுமலேயோ, ப்ரபன்னன் பூர்ணமநோரதனும்படி செய்கிறாள்.

6. இப்படி பகவத்ப்ரபத்தியில் தானும் உத்தேச்யையாயிருந்து ப்ரபந்நனுடைய பலஸித்தி வரையில் வ்யாபரிக்கிறுளாகை யால் பிராட்டியும் உபாயமாகிறாள்.

7. இவையே மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகமாகத் தோற் றின வர்த்தங்கள். இவற்றை மறுத்துச் சொல்லுமவை யெல்லாம் த்ருடபூர்வ ச்ருதோமூர்க்க இத்யாதிகளால் சொல் லப்பட்ட தசையைத் தரும் விபரீதார்த்தங்கள்.

ஆஞ்ஜைஸ்யமாகமாந்தார்யஸௌக்திநாம் அநவத்யதாம்
அகம்ப்யதாஞ்ச விக்ஜாதும் க்ருதிந: கேசநேசதே

''லக்ஷ்மீவிசிஷ்டமுமாய், குணவிசிஷ்டமுமாய், விக்ரஹவிசிஷ்டமு மான வஸ்து உபாயமெனுமிடத்தில் யாதொருபடி வாத்ஸல் யாதிகுணங்கள் உபாயகாரயமான அநிஷ்டநிவ்ருத்த்யாதிகளுக் குறுப்பான ஜ்ஞான சக்த்யாதிகள போலன்றியே ஆச்ரயணஸௌ கர்யமாகிற கார்யாந்தரத்துக்கு உறுப்பாயிருக்கும் விக்ரஹம் சுபாச்ரயத்துக்குறுப்பாயிருக்கும் ...அப்படியே லக்ஷ்மீஸம்பந்தம் இக்குணேந்மேஷத்தைப்பண்ணி கார்யம் செய்வித்துக் கொடுக்கை யாகிற புருஷகார பாவமாயுள்ள கார்யபேதத்திலே உபயுக்தமாயி ருக்கும் என்றதாயிறறு'' என்கிற தீபப்ரகாசக்ரந்தம் இங்கு அநுஸந்தேயம்.

## 4 திருப்பாவை வாஸ்தவார்த்தம்

ஸமீபத்தில் நாம் எழுதி வெளியிட்ட ஒருசிறு நூலின் பெயர் இது. யார் எதை எழுதி வெளியிட்டாலும் அதில் குற்றம் கூறி தான் மிகப்பெரிய வித்வான என்று உலகத்திற்குக் காட்டிக்கொள் வதில் அபாரமான ஆர்வம் கொண்ட தூஷணம் இதிலும் தன் ஸ்வபாவத்தைக் காட்டியிருக்கிறது வழக்கம் போல் நூலைக்காட் டிலும் நூலாசிரியரையே தாக்கியிருக்கிறது.

1. ''இன்னதை எண்ணி இன்னது எழுதுகிறுர், என்று ஒரு வரும் தெரிந்து கொள்ள முடியாதபடி'' நாம் எழுதியிருப்பதாக கூறுகிறது.

படிப்பவர்கள் உண்மையை அறிவார்கள்

2. "சிலரோ பலரோ விரும்பாமலிருக்கக் கூடுமாயினும் வாஸ்தவார்த்தத்தை வெளியிடவேண்டியது நமது கடமை" என்றோம். இதைப்பற்றி எழுதுகிறது—

> "சிலரோ பலரோ வெறுப்பார்கள் என்பதைத்தாமே காட்டி எழுதியுள்ளார். " இதில் சிலர்க்கு வெறுப்பிருந்தாலும் " என்றெழுதலாம்."

என்று. விருப்பமின்மையை நாம் கூறியிருக்க அதை வெறுப்பாக்கி விட்டது. பலர் விரும்பாவிட்டாலும் "நாம் கூறியிருப்பது வாஸ்தவார்த்தம்" என்பதை மறுக்கவியலாது என்பது நம்கருத்து.

3. மூலக்ரந்தங்களில் கோபஸ்த்ரீகள் விஷயமான க்ருஷ்ணன் நடத்தை ஒருவிதமாகச் சொல்லப்பட்டிருப்பதால் திருப்பாவையிலும் அப்படிச் சொல்லவேண்டும் என்பது நியாயமன்று" என்றோம். இதைப்பற்றி எழுதுகிறது-

> எந்த விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது, என்று கேட்டால் காமுகவ்யாபாரம் என்பர் இவர். இது இவருடைய அந்யதா ஜ்ஞான ஸாம்ராஜ்யம் இருந்தபடி

என்று. இங்கு" எந்தவிதமாக" என்ற கேள்விக்கு 'காமுகவ்யாபாரமாக" என்று விடையிருக்கவேண்டும். 'காமுகவ்யாபாரம்' என்றது தவறு, இனி இந்த விடையில் குற்றமென்ன! கமலா காமுகன் என்றும் கச்சித் காமீ என்றும் பகவான் கூறப்படுகின்றார். இதில் அந்யதாஜ்ஞானமேது. ஹேயமான லௌகிக காமுகவ்யாபாரம் போன்றது இந்த லோகாதீத காமுகனுடைய வ்யாபாரம் என்று சொன்னாலல்லவோ இது அந்யதாஜ்ஞானம் எனவேண்டும். கிருஷ்ணனுடைய ப்ரஹ்மசர்யம் கெடவில்லை என்றும்அவனுடைய தூர்த்தாயித கீர்த்தநம் பரம பாவநம் என்றும் ஆசார்யர்கள் ஸாதித்திருப்பதை எடுத்துக் காட்டவேணும். இந்த ஆசார்யர்கள் கிருஷ்ணன் கோபிகளை ஸம்மோஹனம் செய்யவில்லை என்றும் அவனுக்கு தூர்த்தாயிதம் இல்லையென்றும் ஸாதிக்கவில்லையே. இவை இருந்தாலும் அவனுக்கு அவத்யம் ஒன்றுமில்லை என்றும் நமக்குக் கீர்த்தனத்தால் ச்ரேயஸ் உண்டாம் என்றுமன்றோ ஸாதிக்கின்றார்கள். கீதகோவிந்தத்திலும் காமுகசேஷ்டைகள் பல உள்ளவையாகவே கூறப்பட்டிருக்கின்றன. இவை அவற்றைச் செய்தவனுக்கோ கேட்பவர்க்கோ பரமபோக்யங்கள் என்பதில் விப்ரதிபத்தி ஏது. ஆனல் இங்கு சொல்ல வேண்டியது ஒன்று உண்டு. எம்பெருமான் தன் ப்ரியைகளை இப்படிக் களிப்பித்து தானும் களிக்கிறன் என்று இப்படியே வைத்து ரஸிக்கவேண்டும் இதை,

ஸ்வாபதேசம் என்று கொண்டு உண்மையான ரஸத்தை ஸ்வாபம் என்கிற நித்ரைக்கு தேசமாக, விஷயமாக, ஆக்கக்கூடாது. விஷயத்தை விரஸமாக்குவது கூடாது.

4. 'இத்தகைய போகத்தை ஆய்ப்பெண்டுகள் விரும்பியதாகவோ அது திருப்பாவையில் இருப்பதாகவோ யாரேனும் சொல்லுகிறார்களோ, எழுதியிருக்கிறார்களோ,' "என்று கேழ்க்கப்படுகின்றது. மூலக்ரந்தங்களில் எத்தகைய போகம் விரும்பப்பட்டதாகக்கூறப்பட்டிருக்கின்றதோ அத்தகைய போகத்தை விரும்பியே திருப்பாவை கோபகுமாரிகள் நோன்பு நோற்கின்றனர் என்று வைத்துத்தான் முன் வ்யாக்யாநங்கள் எல்லாம் ப்ரவர்த்தித்திருக்கின்றன.

1. "பெண்களும் க்ருஷ்ணனும் கூடவிருந்து "திருக்குரவை கோத்த ராத்ரிபோலே, பெண்காள். இதுவும் நமக்கொரு ராத்ரியே என்று கிருஷ்ணன் கொண்டாடி" என்று அவதாரிகையில் இருக்கிறது. குரவை கோத்தது கீதா காலக்ஷேபத்திற்காகவன்று..

2. " இவள் மடலூராதே நோன்பிலே கைவைத்ததென்" என்பதுகேள்வி, மடலூர்வது எதற்கு.

3. "க்ருஷ்ணவிரஹத்தால் பிறந்த தாபம் ஆறும்படி போய்க்குளிக்க, இத்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ச்லேஷம். தமிழரும் கலவியை சுனையாடல் என்றார்கள் "
இங்கு நாயிகாநாயகபாவம் அபிப்ரேதமா அன்று? பக்தரான புருஷர்களுக்கா இங்கே க்ருஷ்ணஸம்ச்லேஷம் விவக்ஷிதம்?

4. இங்கு ஐச்வர்யமாகச் சொல்லுகிறது க்ருஷ்ணப்ரத்யாஸத்தியை. அதாவது வலிபாதி வழக்குப்பாதி தர்மம் பாதியாகபஞ்சலக்ஷம்குடியில் பெண்களில் அவனால் புஜிக்கப்படாதார் ஒருவருமில்லை. வலியாகிறது தன்செல்லாமை. வழக்காகிறது மைத்துனமை. தர்மமாவது ஆந்ருசம்ஸ்யம். (ஆந்ருசம்ஸ்யமாவது தன்னோடு கலவாவிடில் தரியாத பெண்களிடத்திலே பண்ணும் காருண்யம்) இங்கே புஜிக்கையாவது என்ன?

5. பத்நீத்வம் அவிசிஷ்டமானாலும் க்ருஷ்ண வல்லபை நீயன்றோ.

6. உடம்பை க்ருஷ்ணனுக்குக்கொடுத்தால் எங்களுக்குப் பேச்சாகிலும் தரலாகாதோ.

7. "கிருஷ்ணன் தங்களை வசீகரித்து ஸம்ச்லேஷியாமல் துடிக்க விடுவன் என்று கருத்து."

8. "கண்ணன்கிடாய் பெண்கள்கிடாய் என்கிற நாட்டாரும் இசைந்து அவனும் நாமுமாய் ஜலக்ரீடை பண்ணி அவன் மடியிலே சாயலாம் காலத்தைப் பெற்றுவைத்து, படுக்கையை மோந்து கொடுகிடப்பதே."

9. திருவாய்ப்பாடியில் கண்ணன் பிறந்ததுக்குப் பின்பு ஸ்ரீநந்த கோபருக்கு மருமகளல்லாதாருண்டோ.

10. அந்ய பரதையென்னென்னில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களும் முன்னே நிற்கையாலே இவர்கள் மூலையிலும் இடையிலும் கண்ணிலும் முகத்திலும் துவண்டு ஆனைக்குப் பாடுவாரைப் போலேயிருக்கையாலே தட்டி எழுப்புகிறார்கள்.

5 "கோபிகளின் நோன்பைச் சொல்லுவது திருப்பாவைக்கு முக்யமன்று. ஸ்வகீய பாரார்த்த்யத்தை எம்பெருமான் திருமுன்பே விண்ணப்பம் செய்வதுதான் விஷயமென்று ஸ்பஷ்டமாகக் காட்டுகிறதன்றோ நீளாதுங்க என்ற தனியன்" எனப்படுகிறது. நம் பாவை என்று நிர்தேசிக்கப்பட்டதும் "உனக்கே நாமாட் செய்வோம்" என்று ப்ரார்த்திக்கப்பட்டதுமான கைங்கர்யம் திருப்பாவைக்கு முக்ய விஷயம். கைங்கர்யம் புருஷார்த்தமாய் உத்தேச்யமாவதற்கு நிபந்தனம் பாரார்த்த்யம். நாங்கள் சேஷபூதர்கள். எங்களுடைய பாரார்த்த்யம் அதாவது சேஷத்வம் பயனுள்ளதாக ஆகவேண்டும். அதன் பயன் நாங்கள் செய்யும் கைங்கர்யமே. அதைச் சேஷிகளான நீங்கள் ஏற்க வேண்டும். அதற்காக நீங்கள் துயிலெழவேண்டும் என்கிறது குத்துவிளக்குப்பாட்டு. இப்பாட்டின் பொருளைத் திருவுள்ளத்தில் வைத்து நீளாதுங்க என்ற தனியன் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. பாரார்த்த்யம் ஸ்வயம் புருஷார்த்தமன்று. நித்ய ஸித்தமான இதை மட்டும் உணர்த்துவதும் நிஷ்ப்ரயோஜனம். ஆகையால் "எங்கள் பாரார்த்த்யம் பயன் பெறுவதற்காக நாங்கள் அநுஷ்டிக்கும் நோன்பை நீ ஏற்க வேண்டுமென்று கிருஷ்ணனை உணர்த்துகின்ற" என்பது "ஸ்வம் பாரார்த்த்யம் அத்யாபயந்தீ" என்பதன் பொருள். ஆனால் இத் தனியன் இதை ப்ரதானமாகச் சொல்ல வந்ததன்று. "பிராட்டி போகஸுகத்தில் ஆழ்ந்திருக்கும் எம்பெருமானைச் சிறிதும் ஸங்கோசமில்லாமல் மிகுந்த தைர்யத்துடன் எழுப்பித் தங்கள் கார்யத்தை அறிவித்து இப்படி பலாத்காரமாக அவனை நோன்புக்கு உத்தேச்யமாக்கி அனுபவிக்கின்றுளே அந்த ஆண்டாள்" என்று இத்தனை தைர்யத்துக்குக் காரணமான அவளுடைய பக்தி ப்ரகர்ஷத்தை அநுஸந்தித்து

''நமோ நமஸ்தேஸ்து ஸஹஸ்ர க்ருத்வ: புநச்ச பூயோபி நமோ நமஸ்தே' என்ற அர்ஜுனன் ரீதியில் நமஸ்கரிக்கிறார் பட்டர்.

6 திருப்பாவை உத்தமமான ஒரு த்வநி காவ்யம். இதில் ஸ்பஷ்டமாகக் கூறப்பட்ட விஷயங்களைக் காட்டிலும் த்வநி என்கிற வ்யஞ்ஜநா மார்கத்தால் அறியப்படவேண்டிய விஷயங்கள் அதிகமானவை. இவற்றையெல்லாம் நமது திருப்பாவைக் கதையில் விளக்கியிருக்கிறோம். இது முன் ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்தது.

யமுனையாற்றின் கரை பாவைக்களம். பெண்கள் எல்லாரும் கூடி நந்தகோபன் திருமாளிகை சென்று முறைப்படி ஸ்ரீ கிருஷ்ணனை எழுப்பி அவன் உதவிய வஸ்துக்களைக் கொண்டு அவனுடன் ஊர்வலமாகச் சென்று யமுனைக்குப்போய் நோன்பை ஸங்கல்பித்து நீராடி மறுபடியும் யாத்ரையாக நந்தன் திருமாளிகை வந்து ஸ்ரீக்ருஷ்ணனை ''அங்கே விட்டு விட்டுத் தம் க்ருஹங்களுக்குப் போய் உபவாஸத்தை அவரவர் சக்திக்குத் தக்கவாறு அநுஷ்டித்து அன்றே அவர்கள் ப்ரார்த்தித்தபடி மறுநாள் காலையில் எழுந்தருளின ஸ்ரீ கிருஷ்ணனோடு கூடியிருந்து பாரணை செய்து நோன்பை முடித்தார்கள்.

நோன்பு பல நியமங்களோடு கூடின உபவாஸம். இதை பகவத் ஸ்மரணத்துடன் அவரவர்கள் தனியே செய்யக் கூடுமாகையால் இதன் ஸ்வரூபத்தை வையத்தில் விளக்கி விட்டு இதைப் பற்றி வேறொன்றும் சொல்லாமல் இருந்து விட்டாள் ஆண்டாள். நோன்புக்கு அங்கம் நீராட்டம். இதற்காக ஸ்ரீகிருஷ்ணனை அழைத்துக்கொண்டு வீதி வலமாகச் செல்லவேண்டும். இதற்கு வாத்யம் முதலானவை வேண்டும். இவற்றுக்கு உபலக்ஷணமாகப் பறை கூறப்படுகிறது. கன்னிப்பருவத்திலுள்ள தன்னுடைய பகவதநுபவத்தை ஒரு ப்ரபந்த ரூபமாக வெளியிட ப்ரவர்தித்த ஆண்டாள் அந்தப் பறையை கிருஷ்ணனிடத்திலேயே பெறுவதாக வைத்து அதன் ப்ரார்த்தனையை விஷயமாகக்கொண்டால் ப்ரபந்தம் பகவத் குணசேஷ்டிதாதிப்ரதிபாதகமாக அமையுமென்று பார்த்து அப்படியே செய்தாள். அவளுடைய உத்தேசம் அற்புதமாக நிறைவேறிற்று. திருப்பாவை ப்ரபந்தம் உலகத்திற்குக் கிடைத்தது. பறை தருவான் என்றுஆரம்பித்தாள். பறை தாராய் என்றுப்ரார்த்தனையை வெளியிட்டாள். பறை கொண்டார்கள் என்று முடித்தாள். இதனால் நோன்பு நன்றாக நடந்தது தானே கிடைக்கின்றது. ஸ்பஷ்டமாகச் சொல்ல வேண்டிய அவச்யமில்லை. பெண்களை எழுப்பி

னது சொல்லப்பட்டது. அவர்கள் எழுந்து வந்ததைச் சொல்லவில்லை. அதுபோல் இதுவும்.

நோன்பு போய்யானல் அதையும் அதற்கு உபகரணமாகப் பறையையும் ப்ரஸ்தாவிக்க வேண்டியதே இல்லை. பெண்கள் கூடினார்கள், ஸம்ச்லேஷத்தை அபேக்ஷித்தார்கள், பெற்றார்கள், என்றே விஷயமிருக்கலாம்.

7 ''சாலப்பெரும் பறையே'' என்று விசேஷணம் இருப்பதாலும் மற்ற உபகரணங்களோடு சேர்ந்திருப்பதாலும் இங்கு மட்டும் பறை வாத்யம் எனப்படுகிறது. இப்படி ஓரிடத்தில் அவச்யமானபோது இதுபோலவே மற்ற எல்லா இடங்களிலும் முக்யார்த்தம் கொள்வதற்கு பாதகமென்ன? பாதகமில்லாத போது ஒரு சொல்லுக்குப் பலவிடங்களிலும் ஒரேவிதமாக முக்யார்த்தம் கொள்வதே ந்யாய்யம். உனக்கே நாமாட்செய்வோமென்று கைங்கர்யம் ப்ரார்த்திக்கப்பட்டிருப்பதால் அதையே மற்றவிடங்களிலும் கொள்ளவேணுமென்னில் ''சாலப்பெரும் பறையே'' என்று பறையும் ப்ரார்த்திக்கப்பட்டிருக்கிறது. ப்ரார்த்திக்கப்படுவது ஒன்றாயிருக்கவேண்டுமென்னில் ஏன் அந்த நிர்பந்தம், க்ரந்தம் எப்படிக் கூறுகிறதோ அப்படி ஒன்று மிருக்கலாம் பலவும் இருக்கலாம். அன்றைக்கு வேண்டிய பறை ப்ரார்த்தனை ஒன்று. எற்றைக்கும் ஏழேழ் றவிக்கும் கைங்கர்யப்ரார்த்தனை ஒன்று ஆக ப்ரார்த்தனை இரண்டு. அவற்றுக்கு விஷயம் இரண்டு. பறை கைங்கர்யமன்றே. அது எப்படி ப்ரார்த்தனீயமாகலாம் என்னில நோன்பு கைங்கர்யம் அதற்கு அங்கமாகையால் பறை ப்ரார்த்தநீயமாகக் குறையில்லை.

8 ஆண்டாள் தானான நிலையில் நோன்பு நோற்கவில்லை. கோபகுமாரிகளில் ஒருத்தியாய், அவர்களுக்கெல்லாம் நாயகப் பெண்ணாகி நோற்கிறாள்.

9 நோன்பு ஆசாரப்ரமாணத்தால் ப்ராப்தமான நித்ய கர்ம. அதற்குத் தானே உண்டாகும் பலன் மழை. அநுஷ்டிப்பவர்களுக்கு உத்தேச்யம் பகவத்ப்ரீதி; இதற்கு ஸாதநமாகையாலே இது கைங்கர்யமாகிறது. இந்த பகவத்ப்ரீதி பரம்பரயா மோக்ஷஹேது. இது போயபிழையும் என்றும்வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து என்றும் சொல்லப்பட்டது.

10 இற்றைப்பறை கொள்வான் அன்று என்றவிடத்தில் முன் ப்ரார்த்தித்ததற்கு ப்ரதிஷேதமில்லை. மேலும் யாவதாத்மபாவியான கைங்கர்ய ப்ரார்த்தனை இது.

11 ''ஆண்டாளுடைய ஸ்ருஷ்டியான இந்த ப்ரபந்தத்தில் அவளுடைய மனப்போக்குக்கு தக்கபடி பல மாறுதல்கள் இருக்கின்றன.''

என்றோம். நேர்மதிகளுக்கு இந்த வாக்யத்தின் பொருளை உணர்வதில் ச்ரமமிராது. மனப்போக்குக்குத் தக்கபடி மாறுதல்கள், என்றால் மனப்போக்கில் மாறுதல் என்று யாருக்காவது அர்த்தம் தோன்றுமா? இங்கு தூஷணம் எழுதுகிறது—

முன்னிருந்த மனப்போக்கு மாறிவிட்டதென்று தானே இதற்குப் பொருள்.

என்று. நம்முடைய இந்த வாக்யத்திற்கு முன்வாக்யம் ''மூலக்ரந்தங்களில் கோபஸ்த்ரீகள் விஷயமான க்ருஷ்ணன் நடத்தை ஒரு விதமாக—அதாவது பக்தபஜநீயபாவமன்றி நாயிகாநாயகபாவ முள்ளதாக—சொல்லப்பட்டிருப்பதால் திருப்பாவையிலும் அப்படிச்சொல்லவேணுமென்பது ந்யாயமன்று'' என்றுள்ளது. இதில் சொன்னதை உபபாதநம் செய்வதற்காக மூலக்ரந்தங்களில் உள்ள விஷயங்களில் பல மாறுதல்கள் திருப்பாவையில் இருக்கின்றன என்றோம். புராணங்களில் சொன்னது காத்யாயநீவ்ரதம் திருப்பாவையில் க்ருஷ்ணவ்ரதம். அது க்ருஷ்ணன் காந்தனாக வேணுமென்று செய்த காம்யவ்ரதம். இது பரமைகாந்திகள் அநுஷ்டிக்கும் கர்மங்கள் போல் பகவத்கைங்கர்யரூபமான வ்ரதம். இந்த மாறுதல்கள்போலவே கோபீக்ருஷ்ண ஸம்பந்தத்திலும் நாயிகாநாயக பாவமல்லாமல் பக்தபஜநீயபாவம் என்ற மாறுதல் இருக்கிறது என்பது ஆண்டாள் திருவுள்ளப்படி உசிதம் என்கிறோம், பூர்வ வ்யாக்யானங்களில் நாயிகாநாயகபாவம் கூறப்பட்டிருப்பதைக் கீழே விளங்கவைத்தோம் இப்படிக் கூறுவதற்கு சிறிதும் திருப்பாவையில் ஆதாரம் இல்லை என்கிறோம். திருப்பாவையில் உள்ளது கந்யாவ்ரதம். இதில் நாச்சியார் திருமொழியிலும் மற்ற ப்ரபந்தங்களிலும் போல் கோபகுமாரிகளை நாயிகைகளாகவும் க்ருஷ்ணனை நாயகனாகவும் கருதி ஒன்றும் கூறப்படவில்லை, ஆகையால் இக்கருத்து இருப்பதாகக்கொண்டு வ்யாக்யானம் செய்வது உசிதமில்லை என்றோம் இது தவறு என்பவர்கள் திருப்பாவையில் அக்கருத்து உள்ள பாகங்களை எடுத்துக் காட்டவேண்டும். அல்லது வ்யாக்யானங்களில் கூறியது உசிதமில்லை என்று நாம் கூறுவதை அங்கீகரிக்கவேண்டும் புராணங்களிலும் ப்ரபந்தங்களிலும் சொல்லப்பட்ட நாயிகாநாயக வ்ருத்தாந்தங்களை நாம் இழிவாக நினைத்துக் கலங்கியதாகக் கொண்டு வாகாடம்பரம் செய்வது எதற்கு. வ்யாக்யாநங்களில் இவ்விஷயங்கள் கூறப்படவில்லையென்பது ப்ரத்யக்ஷபாதிதம்.

12 "திருப்பாவையில் அந்யாபதேசார்த்தத்தோடு நில்லாமல் ஸ்வாபதேசார்த்தத்தையும் கொள்ளவேணும்" என்பதற்கு என்ன ப்ரமாணம், இரண்டு அர்த்தம் இருந்தாலன்றோ இப்படிச் சொல்லவேணும். ப்ரஸ்துதாங்குர அலங்கார உதாஹரணத்தில் வண்டு மாலதியை அநாதரித்து கேதகிக்குப்போகிறது. அதை நாயிகை வர்ணிக்கிறாள். மற்றொருத்தியைக் காதலிக்கிற தன் நாயகனுக்கும் அதனால் தன் எண்ணத்தை அறிவிக்கிறாள் இப்படி ஒரு ஸ்த்ரீ அந்யாஸக்தனை தன் கணவன் ஸன்னிதியில் பேசுவது அங்கு இரண்டாவது அர்த்தத்துக்கு ஜ்ஞாபகமாகிறது. திருப்பாவையில் வேறொரு அர்த்தம் இருக்கிறது என்பதற்கு என்ன ஜ்ஞாபகம். ப்ரஸ்துதாங்குரம் என்பது அப்பய்ய தீக்ஷிதர் ஸ்ருஷ்டித்த புது அலங்காரம். இது ரஸகங்காதரத்தில் கண்டிக்கப் பட்டிருக்கிறது. ஒரு வாக்யத்திற்கு இரண்டு அர்த்தங்களில் தாத்பர்யம் இருக்க முடியாது வாக்யபேதம் வரும். கிம் ப்ருங்க ஸத்யாம் மாலத்யாம் என்கிற உதாஹரணத்தில் விவக்ஷிதாந்யபர வாச்ய த்வனி என்று தான் சொல்லவேண்டும். இது திருப்பாவையில் துர்வசம்.

13 அந்யாபதேசம் ஸ்வாபதேசம் என்ற இந்த சப்தங்களை இங்கே ஸங்கதமாக்குவது ப்ரஹ்மஜ்ஞப்யசகயம். அபதேச சப்தமும் வ்யபதேச சப்தமும் பர்யாயமென்பதனால் என்ன ஸித்திக்கிறது. அந்யமென்றால் எது? ஸ்வம் என்றால் எது? அபதேசம் என்கிறதோடு அவற்றுக்கு ஸமாஸம் எப்படி? வஸ்துதஸ்து அபதேசம் என்ற சொல் காவ்ய உலகில் வ்யாஜமாகக் கொள்வது என்ற பொருளில் ப்ரஸித்தம் வைசேஷிகதர்சநத்தில் அநுமாநஹேது என்ற பொருளில் ப்ரஸித்தம். வ்யபதேசம் என்ற சொல் 'சொல்லுகிறது' என்ற பொருளில ப்ரஹ்மஸூத்ரத்தில ப்ரஸித்தம், பேதவ்யபதேசாச்ச இத்யாதிகளில் சூழ்விசும்பில் ஆழ்வார் தம் அனுபவத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார் என்றார்கள் முன்னோர்கள். அதேபோல் ஆண்டாள் தன்னுடைய பகவத் அனுபவத்தை கோபகுமாரிகளின் நோன்பு அபதேசத்தால் பேசுகிறாள் எனலாம் இதுவன்றி ஊர்கதையை எல்லாம் பேசுவது இங்கு ஸங்கதமாகாது

14 மஹர்ஷிகள் பெருமாளுடைய திருமேனியை அணைய விரும்பினார்கள். அப்போது பெருமாள் இது மற்றோர் அவதாரத்தில் ஆகும் என்றார். அம்முனிவர்கள் தாமே க்ருஷ்ணாவதாரத்தில் கோபிகளாக வந்து பிறந்து யதாமநோரதம் அநுபவித்தார்கள் என்றதனால் கோபிகளின் ஸம்ச்லேஷம் ஆலிங்கநரூபம் என்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. இந்த ஆலிங்கநம் அநுமாருக்கு ராகவன்

கொடுத்த ஆச்லேஷம் போன்றதா வேறு விதமானதா. ச்லிஷ்யதி காஞ்சித் சும்பதி காஞ்சித் ரமயதி காஞ்சித் என்றன்றோ பக்தர்கள் அந்தபோகங்களை அநுபவிக்கிறார்கள். கோபிகாக்ருஷ்ண வ்யா பாரங்கள் யாவையும் நாயிகாநாயக பாவத்தையே அடிப்படையாகக் கொண்டவை, தத்கீர்த்தநம் நமக்குப் பரம பாவனமானது. ஆகிலும் ஆண்டாள் திருப்பாவையில் இந்த பாவத்தை வைத்து ஒன்றும் சொல்லவில்லையென்கிறோம். இது இங்கு ஆண்டாள் செய்த ஒருமாறுதல், கந்யைகள் க்ருஷ்ணபக்திமாத்ரத்தாலே அநுஷ்டிக்கும் நோன்பு இங்கு ப்ரதானவிஷயம். பதிபத்நீ பாவம் நாச்சியார் திருமொழியில்.

## 5. திருப்பாவை (பரிசிஷ்டம்)

உள்ள அர்த்தத்தை சொல்லவே கூடாது இராத அர்த்தத்தையே சொல்லவேண்டும். என்ற இரண்டு நியமங்களை த் நடமாகப்பற்றி இவற்றால்தான் உயர்ந்த பாண்டித்யமும் பரமாஸிகயமும் ஸித்திக்கு மென்று கருதி ப்ரவர்த்திப்பித்த வழிகளிலேயே வெகுகாலமாகச் சென்று பழகினவர்களுக்கு நாம் கூறுவது [illegible] விபரீதமாகத் தோன்றுவது இயற்கையே, ஆனால் அழகிய நூல்களின் வாஸ்தவப் பொருள்கள் மறைந்து போவதை உபேக்ஷிக்க முடியவில்லையாகையால் இவற்றை எடுத்துரைப்பதை நாம க்ரந்தகாரர்களுக்குச் செய்யும் உயர்ந்த கைங்கர்யம் என்று கருதி வெளியிடுகின்றோம்.

சாஸ்த்ரவிஹிதமான கர்ம அநுஷ்டிக்கப்பட்டால் அது ''யஜ்ஞாத் பவதி பர்ஜந்ய:என்றபடி மழைக்குக்காரணமாகும்என்பதைத் திருப்பாவைக்கதையில் விசதமாக உபபாதித்திருக்கின்றோம். அது ஸத்த்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் என்கிறபடி ஸத்வகுணம் ஓங்கி நிற்கப்பெற்றவர்களுக்குத் தான் ஹ்ருதயங்கமமாகும்

'மிக்குள்ள பிள்ளைகளும் போவான் போகின்றாரைக்காத்து' என்றதற்கு வாஸ்தவமும் ஸ்வரஸமுமான பொருள் கூறியிருக்கின்றோம அது ''பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார'' என்றதன் கருத்தை உள்ளபடி உணர்ந்தால் புத்த்யாரூடமாகும். ஸ்வரஸமான அர்த்தமெல்லாம் ஸஹ்ருதயரல்லாதார்க்கு புத்தியில் படுவதில்லை பட்டாலும் உபேக்ஷணீயமாகத் தோன்றுகிறது இப்படி, உள்ள அர்த்தத்தை க்ரஹிக்கவில்லை யென்பது மட்டுமன்று. இல்லாத பொருளைச்சொல்லி 'எல்லாரும வந்தழைக்கும்படி க்ருஷ்ணனும் வேண்டப்பாடுடையாள் ஒருத்தியை' எனப்

படுகிறது. கிருஷ்ணனுக்கு கந்யைகளிடத்தில் உள்ள ப்ரீதியில் வைஷம்யத்தை ஏன் கொள்ளவேணும்.

மார்கழி நீராட்டம் பலகால் சொல்லப்பட்டிருக்கிறது. நீராட்ட மஹோத்ஸவம் ஆங்காங்கு நடத்தப்பட்டு வருகிறது. ஆண்டாள் திருவவதாரஸ்தலமான ஸ்ரீவில்லிபுத்தூரில் நடத்தப்பட்டு வருகிறது. ஆகிலும் திருப்பாவையில் நீராட்டமென்பது ஸ்நாநமன்று. ஏனெனில் அத்புதமான யுக்தி. கேளுங்கள். 'நீராடப் போதுவீர் போதுமினோ' என்றழைத்தவர்கள் நீராடுமிடமான நீர் நிலைக்குச் செல்லவில்லையே' "மெய்யாகவே நீரில் தோய்வதை உத்தேசித்திருப்பதாக ஸ்பஷ்டமாகிறதே (து. ஆனாலும்) மேலே அந்த அனுஷ்டானம் செய்ததாகத் தெரியவில்லையே" என்பது அந்த யுக்தி. பிள்ளாயெழுந்திராய் என்று எழுப்பினார்கள். ஆனால் அந்தப்பெண் எழுந்து வந்ததாகச் சொல்லவில்லை, அதனால் அவள் எழுந்து வரவில்லையென்றே நிச்சயிக்கவேண்டும். திற என்றார்கள். திறந்ததாகச் சொல்லவில்லை. தாராய் பறை என்றார்கள், தந்ததாகச் சொல்லவில்லை, மற்றை நம்காமங்கள் மாற்று என்றார்கள். மாற்றினதாகச் சொல்லவில்லை. இவற்றில் ஒன்றும் நடைபெறவில்லை, என்னவேணும். அலம் அதிகேந. நீராடப்போதுமினோ என்ற அழைப்பே நீராடினார்கள் என்றதை அறிவிக்கிறது ஆகையால் நீராடினார்கள் என்று சொல்லவேண்டியது அவச்யமில்லை காவ்யமிது, வெறும் கதையில்லை. தானே அறியப்படுவதை ஸ்பஷ்டமாகச் சொன்னால் புநருக்தி என்ற தோஷம் வரும். நீராடினார்கள், உபவாஸம் இருந்தார்கள், மறுநாள் காலை பாரணை செய்தார்கள் என்பது வ்யங்க்யமான கதாவஸ்து சேஷம்.

இனி நீராட என்பதன் முக்யார்த்தத்தை விடுவதற்கு என்ன காரணம்? உபக்ரமோபஸம்ஹாரௌ என்றபடி நோன்புக்கு அங்கமாக நீராட்டம் உத்தேசிக்கப்பட்டது என்பது ஆதிமுதல் அந்தம் வரையில் உள்ள ஸ்பஷ்டார்த்த சொற்களால் அறியக்கிடக்கிறது. உத்தேசப்படி நடைபெற்றது என்று கொண்டால் சொல் முக்யார்த்தத்தையே குறிப்பிடுவதாகும். நடைபெறவில்லையென்றால் முக்யார்த்தம் பாதிதமாகின்றது, இது வாக்ய ந்யாய விருத்தம். இப்படி முக்யார்த்தத்தை விடுவதற்கு ப்ரமாணமில்லையென்பது போல் க்ருஷ்ண ஸம்ச்லேஷம் என்ற லக்ஷ்யார்த்தத்தைக் கொள்ள வேணும் என்பதற்கும் ப்ரமாணமில்லை, பாதகப்ரமாணமுண்டு. கிருஷ்ண ஸம்ச்லேஷம நாயிகா நாயக பாவத்தாலா? சேஷசேஷி பாவத்தாலா? இது சுத்த கந்யாவ்ரதமாகையால் முதல் பக்ஷத்திற்கு சிறிது மவகாசமில்லை, இரண்டாவது பக்ஷத்தில் சயனக்ருஹத்தில் சென்று துயிலெழ பாடுவதும் தர்சனமும் மங்களா

சாஸனம் பண்ணுவதும் கடாக்ஷிக்கப் பெறுவதும் மற்றுமிப்படி நடப்பதெல்லாம் தாஸஜனங்கள் பெறக்கூடிய ஸம்ச்லேஷமாகை யாலும் அவனுடன் நீராடுவதும் ஒரு ஸம்ச்லேஷமாகையாலும் நீராட்டம் என்ற சொல்லுக்கு லக்ஷணயா காத்ரஸம்ச்லேஷ ஸாதாரணமாக ஸம்ச்லேஷம் என்ற பொருள் கொள்ளவேண்டி யது அவச்யமில்லை.

கிருஷ்ணனைத் தடாகமாக ரூபணம் செய்திருப்பதால் இங்கு நீராட்டம் தத்ஸம்ச்லேஷமாகாது. ஸ்ரீக்ருஷ்ணதிவ்யௌஷதம் என்றிருப்பதால் நீராட்டம் தத்ரூப ஔஷதஸேவனமாகாது. அதுபோல் ப்ரக்ருதத்திலும், ஆண்டாள் வர்ணித்த மார்கழி நீராட்ட மஹோத்ஸவம் பல விடங்களில் நடந்து வருவதால் முன் ஞேர்கள் யாவரும் நீராட்டத்தை தீர்த்தஸ்நாநமாகவே கருதினர் கள் என்றும் அதை மறுப்பவர்கள் மூலக்ரந்த விரோதிகள் என்றும் புத்திமான்கள் அறியலாம்.

இனிப் பெண்கள் தம் தோழிகளை எழுப்புவது ஸ்பஷ்டமா யிருக்க பாகவதர்கள் எழுப்பப்படுகிறுர்கள் என்பது ஒரு பெரும் அபத்தம். இது கந்யாவ்ரதம், அவர்கள் பாகவதர்களை எழுப்பு வதற்கு என்ன ப்ரஸக்தி. தூங்காத பாகவதர்கள் தூங்கும் பாக வதர்களை எழுப்புகிறுர்கள் என்றால் இதைச்சொல்லும் ப்ரபந்தம் வேறு ப்ரபந்தமாயிருக்கவேண்டும். திருப்பாவையாயிருக்க முடி யாது. பெண்கள் தம் தோழிகளை எழுப்புவதன்றே இங்குள்ளது.

எழுப்பப்படும் பெண்களுக்குத் தூக்கமில்லை. மயக்கம் என்பதும் அயுக்தம். துயிலணைமேல் கண்வளரும், கும்பகரணனும் பெரும் துயில்தான் தந்தானே, ஈதென்ன பேருறக்கம், என்று ஸ்பஷ்டமாக தூக்கத்தைச் சொல்லியிருக்க இதை விடுவதற்கும் புதிதாக ஒன்றைக் கல்பிப்பதற்கும் காரணமென்ன. அநுபவ அபிநிவேசம் எல்லார்க்கும் ஒத்திருந்தாலும் சரீரகுணபேதத் தாலும் ப்ரவ்ருத்தி ச்ரம விசேஷத்தாலும் சிலர் அயர்ந்து தூங்குவர். இது லோகத்தில் ஸர்வத்ர காணும் நிலை. இப்படித் தூங்குகிறவர்களையும் உபேக்ஷிக்காமல் பகவதநுபவத்திற்கு அழைத்துச் செல்லவேணும் என்கிறுள் ஆண்டாள். எழுப்புகிற வர்கள் துடிக்கவில்லை. அமைதியாய்ச் சென்று காரணங்களைச் சொல்லி எழுப்புகிறுர்கள். உள்ளிருப்பவர்கள் மயங்கியிருக்கிறுர் கள் என்பதற்கு ஜ்ஞாபகம் சிறிதுமில்லை. பகவத்குணநுபவத்தில் மயங்கினவர்கள் பரமயோகிகள். அவர்களுக்கு யோகவிச்சேதம் செய்வது மஹாபாதகம். இதை ஆண்டாள் ஸ்ருஷ்டித்த பெண் கள் ஒருகாலும் செய்யார்கள்.

'சேயிழையார் நோன்பு நோற்றவாற்றைக் கோதைசொன்ன' என்றுதானே சொல்லியிருக்கவேண்டும். மெய்யே நோன்புநோற்பவர்கள் நந்தகோபர் திருமாளிகைக்குச் செல்லவும் அங்குக் கோயில் காப்பானையும் தோரணவாசல்காப்பானையும் நந்தகோப யசோதாகிருஷ்ண பலராமர்களையும் எழுப்ப என்ன ப்ரஸக்தி?'' என்று கேட்பவர்கள் திருப்பாவையைத் தொடுவதற்கு அநதிகாரிகள். இதில் கதாவஸ்து என்ன என்பதையே அறியாதவர்கள்.

திருப்பாவை பொய்யான நோன்பைச் சொல்லுகிறதேயன்றி மெய்யான நோன்பைச் சொல்லவில்லை என்பவர்கள் தான் 'ஸ்ரீமத் ராமாயணத்தில் ராவணவதம் சொல்லப்படவில்லை. ராமவதம் தான் சொல்லப்பட்டிருக்கிறது' என்று உபபாதிப்பவர்கள்.

''நாமுரைக்கும் உள்ளுறை பொருள்களுக்கு ஓர் எடுத்துக் காட்டு'', என்று தலைப்புவைத்து காயத்ரீபோல் தாயாகக் கொள்ளக்கூடிய திருவஷ்டாக்ஷரத்தில், குடலான நமஸ்ஸின் பொருளை விளக்கிக்கொடுக்கிற ஆசார்யன் தாமோதரன் என்கிறது தூஷணம். நடுவில் உள்ள ஒருவரிக்கு இப்படி ஸாத்ருச்யத்தினால் ஒரு அர்த்தம் சொல்லிவிட்டால் போருமா? முன்னும் பின்னுமுள்ள வரிகளுக்கு என்ன கதி? அவற்றுக்கும் ச்ரமப்பட்டு ஒரு அர்த்தம் சொல்லப்புகுவது யுக்தமா. இப்படி ஒருஅர்த்தம் சொல்லவேண்டுமென்பதற்கு கமகமென்ன? ஸ்வேச்சையாலே கட்டுண்டான் பகவான். எல்லா ஆசார்யர்களும் இப்படியா? இப்போதுள்ள ஆசார்யர்கள் குடல்விளக்கம் செய்கின்றவர்கள் அல்லரா? இவர்கள் ஸ்வேச்சையாலே கட்டுண்டவர்களா.

தாயின் உதரத்தை இவன் விளக்கினான். அவள் இவன் உதரத்தைக் கட்டினாள் இதைப் பொறுத்துக்கொள்கிறான். இவன் இத்தனை எளியவனாகிறான் என்பது எத்தனை ரஸமான கருத்து? இது தோன்றிற்று?

இந்த இடத்திலும் ''காயத்ரீச்சந்தஸாம்மாதா'' என்று மந்த்ரத்தை வதம் செய்து எழுதுகிறது. இதற்கு முன்னமே ஒரு ப்ரகரணத்தில் இப்படி செய்திருப்பதை எடுத்துக் காட்டினோம். எனக்கா தெரியாது? முன் அச்சிட்ட வேறு க்ரந்தத்தில் காயத்ரீம் என்று தானே பதிப்பித்திருக்கிறேன் என்கிறது. அது அவிமர்சதசை. அவிமர்சதசையில் எல்லாம் உள்ளபடி வெளிவந்தது. இப்போது உள்ள விமர்சதசையில் தானே ஸர்வ க்ரந்தங்களுக்கும் வதம்.

ஆழிமழைக் கண்ணாவில் ''நம்மாழ்வார் போன்ற ஒரு ஆசார்யரை ''ஆழிமழைக்கண்ணா வென்று விளித்து ........எம்பெருமான்

தொடங்கி நிகழ்கின்ற ஆசார்ய பரம்பரையில் ப்ராப்தமான அர்த்தங்களை மேலெழக் கொள்ளாமல் உள்புக்கு முகந்து கொண்டு . ஸ்ரீஸூக்திகளைத் தாராளமாகப் பெய்து எங்களை உஜ்ஜீவிப்பித்தருள வேணுமென்கிற ப்ரார்த்தனையே அந்தரங்கப் பொருளென்னத் தட்டில்லை, ''எனப்பட்டிருக்கிறது.

ஒரு பாட்டுக்கு மணிக்கணக்காக அர்த்தம் சொல்லுகிறார் என்ற பேர் பெற விரும்புகின்றவர்களுக்கு இதெல்லாம் விஷயமாகலாமேயன்றி இந்தப்பொருள் கவிக்கு விவக்ஷிதம் என்பதற்கு ஒரு ஜ்ஞாபகமில்லையென்பதை மறுக்கமுடியாது. பணக்கார வீட்டுப் பையன் ஒருவன் பரம மூடனாக இருந்தான். அவனுக்குக் கல்வி கற்பிப்பதற்காகப் பல உபாத்யாயர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்களில் ஒருவர் எவ்வளவோ சொல்லிப்பார்த்தார். பலன் ஒன்றுமில்லை, அவர் ''நீங்கள் முயன்று பாருங்கள்'' என்று மற்றவர்களைக் கேட்டுக்கொண்டார். அவர்கள் முயன்று பார்த்தார்கள் எல்லாம் நிஷ்பலம். பிறகு அந்த உபாத்யாயர் பையனுடைய தகப்பனைப்பார்த்து உன்பிள்ளை எதுவும் பேசமாட்டேன் என்கிறான். ஊமையா அல்லது நாங்கள் சொல்வது அவன் காதிலே படுவது இல்லையா, செவிடா? தூங்கி விழுகிறான், அநந்தலா அறிவு இவனுக்கு வரக்கூடாது என்று யாராவது மந்திரம் போட்டார்களா, ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டானா என்றார் பிறகு எல்லாரும் சேர்ந்து பகவானை ப்ரார்த்திப்போம் என்று நிச்சயித்து பஜனை பண்ணினார்கள், என்று தூமணி மாடத்திற்கு அந்தரங்கப் பொருள் என்று ஒருவர் கூறுகிறார். அதற்கும் இதற்கும விசேஷம் சொல்லவேண்டும். இது நிற்க, நம்மாழ்வார் போன்ற ஒரு ஆசார்யரைப் பார்த்து சிஷ்யர்கள் ''மேலெழக்கொள்ளாமல் உள்புக்கு முகந்து கொண்டு'' என்று கேட்பார்களா! இது எவ்வளவு அஸமஞ்ஜஸம். உடனே அந்த ஆசார்யன் மானமுள்ளவனாயிருந்தால் எனக்கு மேலெழத்தான் கொள்ளத் தெரியும். நீங்கள் அப்படியல்லாத வேறொரு ஆசார்யனிடம் போங்கள்'' என்று சொல்லி அவர்களை உதறித்தள்ளமாட்டானா? மேலும் இந்தப்பாட்டில் ஒன்றும் நீ கைகரவேல் என்றிருக்கிறது. ஒன்றையும் ஒளிக்காமல் சொல்லு என்று விவேகிகளான சிஷ்யர்கள் தம் ஆசார்யனை ப்ரார்த்திப்பார்களா. இவையெல்லாம் அர்த்தாந்தரத்திற்கு பாதகப்ரமாணங்கள்.

முதல் பாட்டில் நந்தகோபரையும் யசோதையையும் நிர்தேசித்தது எதற்காக வென்று விமர்சம் பண்ணி அம்பரமே தண்ணீரில் அவர்களை எழுப்புவதற்கு அடி இது என்றார் ஒரு ஆசிரியர். அங்கு பலராமனும் எழுப்பப்படுகிறார். அவருக்கு இங்கு நிர்தேசமில்லை. கிருஷ்ணனுக்கு அபாயம் வந்தால் என்ன

செய்வது என்று சங்கித்து அதற்குப் பரிஹாரம் கூர்வேல் கொடுந் தொழிலன் நந்தகோபன் என்று கூறப்படுகிறது என்றும் யசோதையும் அபாயமின்றிக் காப்பவள் தான் என்றும் மற்றொரு ஆசிரியர் கருதினர். தாய் தந்தையர்கள் உள்ளவனானாலும் க்ருஷ்ணன் வெறும் மனிதன் அன்று. கார்மேனி, செங்கண், முதலிய அடையாளங்கள் உள்ளவனாகையால் இவன் ஸாக்ஷாத் நாராயணனே என்று தம்முடைய பரதத்த்வ நிஷ்கர்ஷத்தைக் காட்டுவதற்காக இப்படிப் பேசினர்கள் என்பது எவ்வளவு ஸங்கதம் என்பதை உணரவேணும். அவஜாநந்தி மாம்மூடா மாநுஷீம் தநும் ஆச்ரிதம், எனப்பட்டகோஷ்டியில் சேர்ந்தவர்களல்ல இந்த கோபகுமாரிகள், "பரம் ப்ரஹ்ம பரம் தாம" என்ற அர்ஜுனன் போன்றவர்கள் இவர்கள் என்பதை விளக்க வந்தது இந்த ப்ரகரணம். இதில் சங்காவ்யஞ்ஜகம் நந்தகோபன் குமரன் என்றதும் யசோதை இளம் சிங்கம், என்றதும். இது வாஸ்தவமாய் அவச்யம் சொல்ல வேண்டியதான கருத்தா அன்று?

நந்தகோபனையும் யசோதையையும் இங்கு எடுத்ததற்கு ஒரு கருத்து இருக்க வேண்டுமென்று பூர்வ வ்யாக்யாதாக்கள் நினைத்தது அபிநந்தநீயம். அக்கருத்து அவர்கள் சொன்னதாகவே இருக்க வேண்டுமென்று அவர்கள் அபிநிவேசம் கொள்ளமாட்டார்கள். அஜ்ஞர் ஸ்ரீஸூக்திகளுக்கு தாத்பர்யவர்ணநம் செய்யக்கிளம்புவது துஸ்ஸஹம்.

பெருமாள் திருமேனியின்மேல் ஓடுகிற எலியின் அநுபவம் வேறு. திருக்கமலபாதம் எனகிற ஆழ்வாருடைய அநுபவம் வேறு.

15. இப்படியே "கோபாலக்கிழவர்கள் அதிசங்கையினால் கோப குமாரிகள் க்ருஷ்ணனைப் பார்க்க முடியாதபடி தடுத்திருந்தார்கள்." என்பது மூலக்கரந்தங்களில் கூறப்பட்டிருந்தபோதிலும் ஆண்டாள் தன ப்ரபந்தத்தில் அதை நிபந்திக்கவோ ஸூசநம் பண்ணவோ விரும்பவில்லை, அதனால் வ்யஞ்சனையினாலும் காட்டவில்லையென்கிறோம். இதுவும் ஒரு மாறுதல். "சீர்மல்கும் ஆய்பாடிச் செல்வச் சிறுமீர்காள்" என்ற இது முதலான அன்புச் சொற்களையிட்டு கோப கன்யைகளை அழைக்கின்ற ஆண்டாள் காதில இவர்கள் நிலவறையில் அடைபட்டிருந்தார்கள் என்று தன் திருப்பாவைக்கு இட்ட அவதாரிகை விழுந்தால் உடனே அவள் உயிரே போய்விடும். இப்படியே துர்பிக்ஷமிருந்ததென்றும் நோன்பு பொய் யென்றும் தான் கருதியதாகச் சொல்லும் வார்த்தை காதில் விழுந்தாலும் "பன்னீர் கத்தம் கமழுமிடத்தில்

மத்தாப்பூப் புகையை விட்டதுபோல்'' என்றார் ஒருசமயம் திருக் கண்ணபுரம் பட்டப்பா ஸ்வாமி. அதற்கு மிகப்பொருந்திய உபமே யம் இதெல்லாம். இச்சிறுமிகளிடத்தில் பொய் ஸமர்த்தநார்த் தம் மரணாந்தாவஸ்தையைச் சொன்னதுண்டே அது இது எல்லாத் துக்கும் சிகரம். ''எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும், என்றதும் நென்னலே வாய்நேர்ந்தான் என்றதும் இதற்கெல்லாம் ஜ்ஞாபகமாகாது.

16. திருவாய்ப்பாடியில் நடவாத மல்லவதத்தையும் குவ லயா பீட பஞ்ஜனத்தையும் அறிந்தவர்கள் திருப்பாவை கோப குமாரிகள். இதற்குத் தக்கபடி காலக்ரமத்தின் மாறுதலும் அவச்யமான மற்ற மாறுதல்களும் ஆண்டாள் இசைந்து புத்தி பூர்வமாகச் செய்தவை. ''அபாரே காவ்ய ஸம்ஸாரே கவிரேக: ப்ரஜாபதி: யதாஸ்மை ரோசதே விச்வம் ததேதம் பரிவர்ததே''

17. பலன் விஷயமான விளக்கம் வாஸ்தவார்த்தத்திலேயே செய்யப்பட்டிருக்கிறது. இங்கும் 6-ம் பர்வத்தில். ஸாவதான மாகவும் கருத்தை உள்ளபடி உணரவேண்டுமென்ற அத்யவஸா யத்துடனும் க்ரந்தத்தைப் பூர்ணமாகப் படிக்கவேண்டும்.

18. 'தர்போதக்ர' என்ற ச்லோகத்தில் ரூபகம் இருக்கிறது. ராமாயணத்தின் அர்த்தாந்தரமில்லை ''காவ்யத்துக்கு பலம் உபதேசம்'' என்ற ஆலங்காரிகர்கள் ''ராமாதிவத் வர்திதவ்யம், ந ராவணாதிவத்'' என்பது ராமாயணம் செய்யும் உபதேசம் என் றார்கள். ஸம்ஸாரத்தில் அவதிப்படும் ஜீவர்களுக்கு உபமானம் இலங்கையிலிருந்த ஸீதை என்றார் ஸ்வாமி.

19. சந்த்ராலோகமும் குவலயாநந்தமும் அலங்கார சாஸ்தி ரத்திற்கு அரிச்சுவடி. இவற்றுடன் அலங்கார சாஸ்திரமே முடிந்து விடவில்லை. எது எதற்கு வ்யங்க்யம் அதவா வ்யஞ்ஜகமாகும் என்பதை அந்த சாஸ்திரத்தின் உத்க்ரந்தங்களை அப்யஸிக்காத வர்கள் அறிய முடியாது. உண்மை வ்யங்க்யத்தைப் பழிக்கவும் அல்லாத பொருளை வ்யங்க்யமாக உபந்யஸிக்கவும் ப்ரவ்ருத்தி உண்டாகும் என்பது ப்ரத்யக்ஷம், ''மாமீர் அவளை எழுப்பீரோ உன்மகள்தான்'' என்ற பஹுவசனத்தாலும் ஏக வசனத்தாலும் கிடைக்கும் வ்யங்க்யப் பொருளைக் கூறியிருக்கிறோம். இதைக் காட்டிலும் எவ்விதத்தில் சிறந்தது பிறர் கூறியிருப்பது? இதில் என்ன குறை என்பதை விளக்கியல்லவோ விமர்சனம் செய்ய வேண்டும். யக்ஞத்திற்காகக் கொண்டுபோன பசுவை [ஆட்டை] நான்குபேர் கட்டுப்பாடாக நின்று நாய் நாய் என்று கூறிக்

கொண்டு போகிறவர்களைக் கலங்க வைத்தார்களாம். அப்படி இருக்கிறது இங்கு தூஷணம் கூறுவதெல்லாம்.

20. 'பேச்சு கேட்டிலையோ' என்னாமல் "பேச்சரவம் கேட்டிலையோ" என்றதில் விசேஷம் அறிய வேண்டாவா. பேச்சை மட்டும் கேட்டுப் பயனில்லை. பேச்சிலிருந்து தொனிக்கும் பொருளையும் கேட்கவேணுமென்று ஆண்டாள் தானே காட்டியிருக்கிற படியன்றோ" எனப்படுகிறது. தொனிக்கும் பொருளைக் கேட்க வேணுமென்பது புத்திமான்கள் யாவரும் அறிந்த விஷயம். இதை அறிவிக்க ஆண்டாள் ஒருகாலும் கருதியிருக்கமாட்டாள். அது நிற்க, பேச்சு என்னாமல் பேச்சரவம் என்றதனால் இப் பொருள் எப்படிக் கிடைக்கின்றது என்பதைச் சிந்திக்க வேண்டும். பேச்சரவம் பேச்சின் ஓசை. இதற்கும் தொனிப்பொருளைக் கேட்க வேணும் என்பதற்கும் என்ன ஸம்பந்தம் அதிலிருந்து இது எப்படித் தொனிக்கிறது? இதற்கு நேர் விபரீதமாக "நாறுதாய் நாவுடையாய்" என்பதனால் நா இருக்கிறதென்று ஏதாவது சொல்லலாமோ. ஸம்பந்தமில்லாத பொருளை இஷ்டம்போல் கூறுவதில் வெட்கப்படவேண்டாமோ "என்று, பெரியோர்களின் ஸூக்திகளில் எது தொனிப் பொருளாகும் எது ஆகாது என்பதை ஆழ்ந்து ஆராய்ந்து நிச்சயித்துக் கூறவேண்டும்" என்கிறாள் ஆண்டாள், என்பது மிகப் பொருத்தமானது.

பேசின பேச்சு என்று மட்டும் சொன்னால் பக்ஷி எப்படிப் பேசும் என்று ஆபாதப்ரதீதியில் விரோதம் தோன்றும். அதற்காக அரவந்தான் அது எனப்படுகிறது. ஆனால் அந்த அரவம் பக்ஷிகளினுடைய அபிப்ராயத்தை ஸ்பஷ்டமாக வெளிப்படுத்துவதால் நம் பேச்சுப் போன்றது. ரஸமயமான சப்தம் என்று கருதி பேசின பேச்சரவம் என்கிறாள் ஆண்டாள்.

21. 'மாமீர்' என்ற பன்மையிலும் 'உன் மகள் தான்' என்ற ஒருமையிலும் ஒரு விசேஷமிருக்கிறது என்பதைக் கொள்ளாமல் சிலர் உரையிட்டிருக்கிறார்கள். பெண்ணின் மாதா ஒருத்தியையே முதலில் மாமீர் என்று அழைத்தார்கள். பிறகு 'உன் மகள்' என்றார்கள். இதில் விசேஷம் என்ன இருக்கிறது என்பது இவர்கள் கருத்தாயிருக்கலாம். மூவாயிரப் படியில் "மாமீர் அவளுடைய திருத்தாயாரென்று அவளுறவாலே சொல்லுகிறார்கள். பின்னையும் உணரக் காணாமையாலே சிவிட்கென்று உன்மகள்தான் . என்கிறார்கள்" என்று முதலில் கௌரவமாக தாங்கள் அழைத்த ஸ்திரீயையே பெண் எழாமையினால்

உண்டான மநோவேதனையால் கௌரவச் சொல்லை விட்டு ' உன் என்று ஸாதாரணமாக நிர்தேசித்தார்கள் என்று விசேஷம் கூறப் பட்டிருக்கிறது. ஏக வசனத்தால் நிர்தேசிக்கப்பட்ட தாயாரைக் காட்டிலும் வேறுபட்ட பல ஸ்திரீகளே ' மாமீர் ' என்று அழைக் கப்பட்டனர் என்று கொள்வதில் பாதகம் ஒன்றுமில்லை. இந்த அபிப்பிராயத்தினால்

> மாமஹானின் (மாமான்) மனைவிகளான மாமிகள் பலர் இருந்ததாலே மாமீரெனப் பன்மையாக விளித்தது. பிறகு எழுந்தவள் மகளின் தாயாரான மாமி. ஆகவே உன் என ஒருமை

என்றார் அபிநவ தேசிக ஸ்வாமி. நாம் மாமானுடைய மனைவிகள் என்னுமல் பல பெண்டுகள் என்று மட்டும் கொண்டு அவர்கள் எல்லாரும் எழுந்து வந்தவர்கள் என்றும் " அவளை எழுப்பீரோ " என்று வெளியில் இருந்தவர்கள் கேட்டுக் கொண்டபடி அவர்கள் செய்தார்கள்- ஆனால் பலனில்லை என்றும் கூறினோம். பிறகு அவர்களுக்குள் ஒருத்தியான பெண்ணின் தாயைக் குறித்து "' உன் மகள்தான் '' என்றார்கள் என்றோம். இங்கு வசன பேதம் ஸாபிப்ராயம் என்பது ஸமானம். பல பேர் எழுப்பியும் எழாமை யால் பெண்ணின் தூக்கம் பெரிது என்று காட்டி ஊமையோ இத் யாதி கேள்விகளுக்கு ப்ரஸக்தியை உண்டு பண்ணுவதால் நாம் கூறின கருத்து மிகப் பொருத்தமானது. இப்படி நாம் எழுதி யிருப்பதை ஸஹ்ருதயர்கள் ரஸிக்காமல் இருக்கமாட்டார்கள். தூஷணம்

> இப்படிப்பட்ட அவலக்ஷண பங்க்திகளை அநுவதிப்பதும் பாதகமே

என்கிறது.

மகாப்பிரபுவுக்கு மந்திரியுரைத்த மோக்ஷம் (ரா 261 ப 73) என்ற தலைப்பின் கீழ் காணும் வரிகள் போல் இருந்தால் விலக்ஷண பங்கதிகள் ஆகும். அல்லாமையால் நம்முடையவை அவலக்ஷண பங்க்திகளே. ந குத: பரிதப்யதே.

**22.** "' இவருடைய அபத்தச் சுவடியை திடீர் திடீரென்று எந்தப்பக்கமெடுத்துப் பார்த்தாலும் வாயால் சிரிக்க வகை யில்லை ''

என்கிறது. அத்வைதாபிநிவேச விவசர்கள் ஸ்ரீ பாஷ்யத்தைப் பற்றிப் பேசுவது போன்றது இது,

**23.** திருப்பாவை வ்யங்க்யப் பொருள் மிகுந்த உத்தம காவ்யம் என்று கூறி அதை விளங்க வைப்பதற்காக 'கோவலர் தம் பொற்கொடியே' என்ற விதில் உள்ள பன்மையினாலும் நற் செல்வன் தங்காய்' என்றவிதில் உள்ள ஒருமையினாலும் வ்யங்க்ய மாகத்தோன்றும் பொருளை எடுத்துக் காட்டியிருக்கிறோம். இதற்கு முன் வ்யங்க்யப் பொருள் எது என்பதைச் சொல்லி அதற்கு உதாஹரணமாக

> ''ஒரு மஹானைப் பார்த்து 'இவர் பகவான்' என்ற விடத்தில் பகவான் என்ற சொல் தன் முதல் (முக்கியப்) பொருளான ஸ்ரீமந் நாராயணன் என்ற பொருளை விட்டு லக்ஷணை என்னும் அமுக்க்ய ஆற்றலால் 'ஸ்ரீமந்நாராயணன் போன்றவர்' என்ற பொருளை உணர்த்தும். இதனால் ''இவரை வணங்க அதனால் க்ஷேமம் உண்டாகும்'' என்ற கருத்து தோன்றுகிறது. இது வ்யங்க்யம்.

என்றோம். இதைப்பற்றி

> கதிரவன் குண திசைச் சிகரம் வந்தணைந்தான், என்பதில் குளத்துக்குப் போகச் சொல்வதும் காபி குடிக்கச் சொல்வதும் வ்யங்க்யம் என்பதோ டோக்குமிது.

என்று தூஷணம் கூறுகின்றது. குளத்திற்குப் போகவும் காபி குடிக்கவும் பழக்கப்பட்ட ஒருவரைக் குறித்து அதற்காக அவரை எழுப்பக் கருதிய ஒருவர் 'கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந் தான்' என்றால் குளத்துக்குப் போவதும் காபி குடிப்பதும் வ்யங்க்ய மாகும் என்பது அத்யந்தம் உபபந்நம். அப்ரதிஷேத்யம். இங்கு உதயம் கூறப்பட்டிருக்கின்றது, அஸ்தமயத்தை வைத்து இப்படியே பல வ்யங்க்யப் பொருள்களை ஆலங்காரிகர்கள் கூறியிருக்கின்றனர்.

> ஆகவே 'ஸூர்யன் அஸ்தமித்துவிட்டான்' என்பதிலிருந்து சத்ருவைத் தகைவதற்குரிய காலம் என்றும், ஆசை நாயக னிருப்பிடம் செல்லலாம் என்றும், உன் காந்தன் வந்து விட்டான் என்றே வைத்துக்கொள் என்றும், வேலையை நிறுத்துவோமென்றும், அந்திச் சடங்கு ஆரம்பிக்கலாம் என்றும், தூரம் செல்ல வேண்டாமென்றும், பசுக்களைக் கொட்டாயில் கட்டவேணும் என்றும், தாபம் இப்போது இல்லையென்றும், கடையை மூடலாம் என்றும் இன்னும்

காந்தன் வரவில்லை யென்றும் இப்படி எல்லையற்ற வ்யங்க்யப் பொருள் தோன்றுகின்றது

என்றான் காவ்ய ப்ரகாசத்தில் மம்மடபட்டன்.

24 வ்யங்க்யப் பொருள் தோன்றுவதற்கு ஹேதுக்கள் "வக்த்ரு போத்தவ்ய காகூநாம்" என்று ஆரம்பித்துக் கூறப்பட்டிருக்கின்றன. இவை உள்ள விடத்தில்தான் வ்யங்க்யம் தோன்றும். இல்லாத விடத்தில் தோன்றாது. ஒரு மஹாபுருஷர் வந்தபோது ஒரு தந்தை தன்மகனைக் குறித்து 'இவர் பகவான்' என்றால் இதன் கருத்து ஒன்றிருக்கவேண்டியது அவச்யம். அது எது என்றால் அந்த ப்ரகரணத்தில் 'இவரை வணங்கு, இதனால் க்ஷேமம் உண்டாகும்' எனபதோ இதுபோல் மற்றொன்றோ என்பது ஸ்பஷ்டம் "பகவத்போதாயன க்ருதாம்" என்ற விடத்தில் 'பகவத்' என்ற சொல் போதாயனர் ஆப்ததமர் என்றும் அவர் வ்ருத்தி ஸூத்ரங்களின் உண்மைப் பொருளை போதிக்கும் க்ரந்தம் என்றும் ஸ்ரீ பாஷ்யகாரருக்கு அவரிடத்திலுள்ள பக்தியையும் மற்றும் இவ்வித உசித விஷயங்களையும் வ்யஞ்ஜநாவ்ருத்தியினால் போதிக்கின்றது. ஒரே சொல் வெவ்வேறு ப்ரகரணங்களில் வெவ்வேறு கருத்துக்களை வ்யஞ்ஜிப்பிக்கும். சடகோபன் சொல் என்ற விடத்திலும் இப்படி வ்யங்க்யப்பொருள் உண்டு. சடகோபன் என்ற பெயரைக் கேட்டவுடன் ஒருவர் கை கூப்பினால் அது பக்தியினால் உண்டான செயல், சொல்லின் வ்யங்க்யப் பொருளன்று. ஹாமௌக்த்யம்.

25. கிடையாது என்று பெரியோர் சொன்னால் அதை மறுக்க விரும்பும் குழந்தைகள் கிடையும் என்னும், அது போன்றது அந்யாபதேசம் என்றதற்கு ப்ரதியோகியாகக் கூறப்படும் ஸ்வாபதேசம் என்ற சொல்—பாஷாவ்யுத்பத்தியும் சாஸ்த்ரஜ்ஞானமும் உள்ள ப்ராசீனர்கள் நஞ்சீயர் வரை எவரும் ப்ரஸ்துதார்த்தம் அல்லது விவக்ஷிதார்த்தம் என்ற பொருளில் ஸ்வாபதேசம் என்ற பதத்தை ப்ரயோகித்திலர்-திருப்பாவையில் ஸ்வாபதேசம் என்கிற ஸ்வவ்யபதேசம் உள்ளது என்றால் ஸ்வம் என்பது யாரைக்குறிக்கின்றது. அபதேசம் என்கிற வ்யபதேசம் என்பது என்ன 'அபதேச: பதே லக்ஷ்ய (யே?) நிமித்த வ்யாஜயோரபி" என்று நாநார்த்த ரத்நமாலையில் படிக்கப்பட்ட அர்த்தங்களில் எந்த அர்த்தம் இங்கே விவக்ஷிதம், இதையெல்லாம் விளக்கியன்றோ ஸமர்த்தனம் செய்ய வேண்டும். "எப்பொருள் எச்சொலின் எவ்வாறுயர்ந்தோர் செப்பினர் அப்படி செப்புதல் மரபே" என்று நன்னூலாசிரியர் கூறியிருப்பது ப்ராமாணிகமே. ஸ்வாபதேசம் என்ற சொல்லை இப்பொழுது கூறப்படும் பொருளுடையதாக உயர்ந்தோர் செப்பி

யிருக்கவில்லை. ஆகையினால் இது அநுபடந்நமென்கிறோம்.

26. 'ததுக்தி: பரிபாவ்ய ச' என்றவிதில் பரித: பாவயித்வா பாவநாம் க்ருத்வா சிந்தநாம் க்ருத்வா என்பது பொருள். பரிபவம் ப்ரிந்தி என்பது பொருளன்று. இதை உணர்த்தும் சொல் 'பரிபூய' என்பது.

27. "வாயெடுத்தால் ப்ரபூதம் என்பவர் ப்ரபூதபலிபா கொடுக்கிறார்" என்பது ஸ்வபக்ஷபராஜயத்தினால் உண்டான ஆர்த்திபரிவாஹமான ப்ரச்னம். ப்ரபூதம் என்ற சொல் அதிகம் என்ற பொருளில் உலக ப்ரஸித்தம். நிகண்டுவில் படிக்கப்பட்டிருக்கிறது. பலி என்ற விசேஷ்யம் சேர்ந்தால் அதனால் மற்றொரு பொருள் தோன்றும். அதில்லாதபோது வெறும் விசேஷணமாய் தன் அர்த்தத்தை உணர்த்தி நிற்கிறது இதில் தப்பென்ன. ஆநந்தமயாதிகரணத்தில விகாரசப்தாத் என்ற ஸூத்ரபாஷ்யம்

யதுக்தம் ஆநந்த ப்ராசுர்யம் அல்ப துக்கஸத்பாவம் அவகமயதீதி. தத்அஸத் தத்ப்ரசுரதவம ஹி தத் ப்ரபூதத்வம .. ..... — ப்ரஹ்மாநந்தஸ்ய ப்ரபூதத்வம் அந்யாநந்தஸயால்பத்வம் அபேக்ஷத இதி உச்யதே ச தத் ஸ ஏகோ மானுஷ ஆநந்த இத்யாதிநா. ஜீவாநந்தாபேக்ஷயா ப்ரஹ்மாநந்தோ நிரதிசய தசாபந்ந: ப்ரபூத இதி

என்றுள்ளது. இச்சொற்களின் விவக்ஷிதார்த்தங்களை க்ரஹிக்க சக்தியில்லாதவர்களுக்கு வேறு ஒரு பொருள் உபஸ்திதமாகுமாகிலும் விவக்ஷிதார்த்தங்களை போதிக்கும் சக்தியுள்ளவைகளே இவை. இப்படியன்றே ஸ்வாபதேசம் என்ற சொல். இதற்கு விவக்ஷிதார்த்தத்தை உணர்த்தும் சக்தியே இல்லை என்பதன்றோ தேறிநிற்கின்றது மமயோநிர் மஹத் ப்ரஹ்ம, சாஸ்த்ரயோநித்வாத், யோநிச்ச ஹி கீயதே, யோநித்ய இத்யாதிகளில் அர்த்தாந்தர ப்ரதீதி வருகிறதென்று குற்றம் கூறும் அபிஜ்ஞர் எவருமில்லை.

28. "உத்ப்ரேக்ஷ்யதே புதஜநைருபபத்திபூம்நா"
என்றவிடத்திலும் எவ்விதமான உத்ப்ரேக்ஷையென்று
கேட்பாருளர்.

எனப்படுகிறது. இப்படிக்கேட்பவர் உலகில் இரண்டாம்பேர் இருக்கமாட்டார். இது அலங்காரோத்ப்ரேக்ஷையன்று ஸம்பாவ்யதே அநுமீயதே என்பது விவக்ஷிதம். எம்பெருமானுடைய மணியின்

அவதாரம் இவரென்று அநுமிக்க புஷ்கல ஹேதுக்கள் இருக்கின்றன வாகையால் அறிவாளிகள் இப்படி அநுமாநம் செய்கின்றனர் என் பது கருத்து. ஆப்தவாக்யத்தினல் அறிந்த இந்த விஷயத்தை அநு மானத்தினலும் ஊர்ஜிதம் செய்கிறர்கள் வித்வன்கள் என்றதா கின்றது. "ப்ரத்யக்ஷத்ருஷ்டமப்யர்த்தம் அநுமாநேந புபுத்ஸந்தே தார்க்கிகா:" என்ற வாசஸ்பதியின் வார்த்தை இங்கே அநுஸந் தேயம். அலங்கார உத்ப்ரேக்ஷை. உத்ப்ரேக்ஷா சப்தத்தினல் போதிக்கப்பட மாட்டாது. மன்யே சங்கே இவ இத்யாதி சப்தங் களால் போதிக்கப்படும்.

29. அவ்விடங்களிலே இவர் சர்ச்சிப்பதைவிட்டு ஸர்வாத்மநா சங்கைக்கு ஆஸ்பதமல்லாதவிடத்தை எடுத்துக் கொண்டு "ததாநீம் யதாநீம்" என்பது விரலுக்கு தகாத வீக்கம்.

என்றதைப் பற்றிக் கூறுகிறேம். தூஷணம் ஸ்வகீய க்ரந்தங்களில் உள்ள குற்றங்களைப் பரிசீலனம் செய்யாமல் பரகீய க்ரந்தங்களி லும் லேகநங்களிலும் குற்றங் கூற முற்படுவது ஏன்?

அபேதபேதாபேதவாதங்களை நிரஸித்து ஸர்வ ச்ருதி ஸமர்த் தநம் பண்ணுவதுபோல் திருப்பாவைக்கு அபார்த்ததிரஸ்காரம் பண்ணி வாஸ்தவார்த்தத்தை வெளியிட்டதில் குற்றமென்ன? திருப்பாவைக்கு ஸ்வாபதேசார்த்தம் என்று ஒரு அர்த்தம் இருக் கிறது என்பதற்கு என்ன ப்ரமாணம்? அந்த அர்த்தம் எது? அதற்கு ஸ்வாபதேசம் என்ற வியவஹாரம் எப்படிப் பொருந்தும்? என்ற இவ்விஷயங்களை விளங்கவைத்தால் அது வைதுஷ்ய லக்ஷண மாகும். எவ்விதத்திலும் சங்காஸ்பதமல்லாத ஸ்வாமி ஸ்ரீஸூக்தி களில் விப்ரபத்தி பண்ணுகிறவர்கள் இது கூறத்தகாது. விப்ரதி பத்தி உண்டானல் ஸர்வம் சங்காஸ்பதம் என்று வைத்து வித்வான் கள் ஸ்வபக்ஷ ஸாதநம் செய்யவேணும். எம்பெருமானல் வேதாந்த தேசிக பதத்தில் வைத்து அநுக்ரஹிக்கப்பட்டு ஸித்தாந்த ஸ்தா பநத்திற்கு அவச்யம் வேண்டியவையான ப்ரௌட அநேக அநவத்ய க்ரந்தங்களை ஸாதித்தருளிய ஸ்வாமி விஷயத்தில் தூஷணத்திற் காகவே பூவரம்புகள் கட்டி

ஸ்ரீபாஷ்ய காரருடைய திருவுள்ளத்திற்கு நேர் விருத்தமாக நிகமாந்த குரு புத்திபூர்வகமாகவும் ப்ராமாதிகமாகவும் ஸ்வோக்திகளுள் பரஸ்பர விருத்தமாகவும் எழுதியிருப்பவை அனேகம்

என்று இது கோஷிப்பது விரலுக்குத் தகுந்த வீக்கம். உண்மையை

விளக்குவதற்காக நாம் தூஷணாபிஸந்தியில்லாமல் பிறர் க்ரந்தங்களில் உண்மையாய் உள்ளனவும் அபரிஹார்யங்களுமான குறைகளை அறிவிப்பது விரனுக்குத் தகாத விக்கம்' தன்று. தைலம் ஒன்று இருக்கிறது என்ற எண்ணம் இருந்தால் இப்படியெல்லாம் பேசவிடாது. அது இல்லை. ஆகையால் எதையும் பேசத்துணிகின்றது.

**30.** முடிவில் உண்மையை உரைக்கின்றோம். ஸ்வாமி ஸ்ரீஸூக்திகளில் ஒன்றிலும் ஒரு குறையும் கூற முடியாது. இருந்தாலன்றோ கூற முடியும். அறியாமையினாலும் அபிநிவேசத்தாலும் கூறப்படும் ஒவ்வொரு குற்றத்திற்கும் ஸரியான ஸமாதானம் கூறி உண்மையை விளக்குவோம். வஞ்சனைக்கு இழக்கப்பட்டு மிகுந்த வருத்தத்துடன் பிறர் க்ரந்தங்களில் நாம் கூறும் குறை எதுவும் உண்மையாக உள்ளதேயாகும். மறுமொழி ஒன்றும் கூற முடியாது.

## 6. ப்ரத்யஸ்த்ரம்

1. தத்வத்ரயம் 165ல் லோகத்தில் கார்யோத்பத்தியில காரணம் நிமித்த உபாதாந ஸஹகாரி ரூபேண த்ரிவிதமாயிருக்கும என்று காரணத்தை விபஜித்து இவற்றுக்குத் தனித்தனியே லக்ஷணம் சொல்லி, லௌகிக கார்யத்தில் உதாஹரணம் காட்டி "இங்ஙனன்றிக்கே ஜகத்ரூப கார்ய உத்பத்தியில ஈச்வரனே த்ரிவித காரணமுமாயிருக்கும்'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணி இதை விவரிக்கும் போது ''ஜ்ஞான சக்த்யாதிவிசிஷ்டனாய்க் கொண்டு ஸஹகாரி காரணமாயும இருக்கும்'' என்றார் மாமுனி. இங்கு லௌகிக கார்யத்தில் மூன்று காரணங்களும் வெவ்வேறானவை. ஜகத்ரூப ஈச்வர கார்யத்தில் ஈச்வரன் ஒருவனே மூன்றுவித காரணமாயும் இருக்கிறான்'' என்ற விசேஷம் கூறப்படுகிறதேயன்றி நிமித்தத்வமும் ஸஹகாரித்வமும் ஒன்றாகவே இருக்கலாம் என்று கருதவில்லை. நிமித்தத்வ உபாதாநத்வ ஸஹகாரித்வங்கள் வெவ்வேறு ஆகாரத்தால் வந்தவையாகையால் பரஸ்பரம் விலக்ஷணமானவையே என்பதில் ஸந்தேஹத்திற்கு இடமில்லை. ''நிமித்தகாரணமாவது உபாதானமான வஸ்துவை கார்யரூபேண விகரிப்பிக்கும் கர்த்ருவஸ்து'' என்று நிமித்தகாரணத்திற்கு லக்ஷணம் ஸாதித்தார் மாமுனி. இதனால் மேல் 'பஹு ஸ்யாம் என்கிற ஸங்கல்பவிசிஷ்டனாய்க்கொண்டு நிமித்தகாரணனாயும்'' என்று சொல்லும்போது 'ஸங்கல்ப விசிஷ்டனாய்க் கொண்டு' என்றவித்தால் 'கர்தாவாயிருந்து' என்பதே விவக்ஷிதம் என்பது ஸ்பஷ்டம். ஜ்ஞான சக்த்யாதிகளும் ஸங்கல்பம் போலவே கர்த்ருதர்மம். இதை 35வது சூர்ணையில் ''அந்த கர்தாவுக்கு தர்மமான ஜ்ஞாந, இச்சா ப்ரயத்னங்கள்'' என்று மாமுனி

களே விளக்கியிருக்கிறார். ஆகையால் ஸங்கல்பம் போல ஜ்ஞாந சக்த்யாதிகளும் நிமித்த காரணத்வ ப்ரயோஜகங்களேயன்றி ஸஹகாரிகாரணத்வ ப்ரயோஜகங்கள் ஆகமாட்டா, ஆனால் என்ன முழுகிப்போய் விடும் எனில் கடம் படமானால் என்ன முழுகிப்போய் விடும். ஆகிலும் விஷய நிரூபணம் பண்ணுகிறவர்கள் ப்ரமாண ஸித்த வ்யவஸ்தையை அதிலங்கநம் பண்ணாமல நிரூபணம் பண்ணவேணும். ஸங்கல்ப விசிஷ்டத்வம் நிமித்த காரணத்வ ப்ரயோஜகமாவதும் ஸஹகாரிகாரணத்வ ப்ரயோஜகமாகாததும் ஏன்? அந்த காரணம் ஜ்ஞான சக்த்யாதிகளுக்கும் உண்டா இல்லையா? சாஸ்த்ரயோநித்வாதிகரணத்தில் அநுமானத்தினாலே யே ஜகத்கர்த்தா ஸித்திக்கிறான் என்பது

> ஸமர்த்த கர்த்ருபூர்வகத்வ நியத கார்யத்வ ஹேதுநா ஸித்த்யந் ஸ்வாபாவிக ஸர்வார்த்தஸாக்ஷாத்கார தந்நியமந சக்தி ஸம்பந்ந ஏவ ஸித்த்யதி

என்ற ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்தியினால் ப்ரதிபாதிக்கப்படுகிறது. இங்கே ஜ்ஞான சக்திவிசிஷ்டன் ஸித்திக்கிறான் என்று ஜ்ஞான சக்திகளை கர்த்ரு விசேஷணமாக ஸாதித்திருப்பதை நன்கு உணரவேணும். ஆகையால் இவற்றை ஸஹகாரித்வ ப்ரயோஜகமாகச் சொன்னது பாதிதம். முகம் சந்த்ரனாகவுமிருக்கும் பத்மமாகவுமிருக்கும். ஆஹ்லாதகத்வேந சந்த்ரன். ப்ரகாசாதிசயத்தாலே பத்மம் என்றால் எப்படியோ அப்படி இது. ப்ரகாசாதிசயமும் சந்த்ர னுக்கேயன்றி பத்மத்திற்கு இல்லை. "ஸஹகாரி வேணுமாகில் அவனது திருக்குணங்களான ஜ்ஞான சக்த்யாதிகளையே ஸஹகாரி யாகக் கொள்ளவடுக்கும்—என்பது தான் வேதாந்திகளின் கொள்கை" என்றதை ஒரு வேதாந்தியின் வாக்யத்தை உதா ஹரித்து ப்ராமாணிகமாக்க வேண்டும். ஐம்பூத்வீபே இப்படிச் சொல்லும் வேதாந்தி ஒருவர் இருக்கமாட்டார். "க்ஷீரவதத்தி" என்று ஸஹகாரிநிரபேக்ஷத்வம் ஸித்தாந்தமான பிறகு ஸஹகாரி வேணுமாகில் என்பதற்கு இடமேது. இடமுண்டானாலும் காலாந் தர்யாமியாய் ஸஹகாரியாகிறான் என வேண்டுமேயன்றி ஜ்ஞான சக்த்யாதிகளை எடுக்கக்கூடாது. இப்படி ஜ்ஞான சக்த்யாதிகளை ஸஹகாரித்வ ப்ரயோஜகமாகச் சொன்னது ஒரு துஷ்பரிஹரமான தோஷம். இனி "காலாந்தர்யாமிருந்து ஸஹகாரி காரணமுமா கிறான்" என்று மூலத்தில் மேலே நிரூபித்திருக்கிறபடி சொல்ல வேணும். இப்படிச் சொல்லாமல் மூலத்தில் சொல்லப்படவில்லை யென்றும் அதற்குக்காரணம் ஸர்வஜ்ஞத்வாதிகளைச் சொன்னதால் தன்னடையே ஸித்திக்குமது என்றும் சொன்னது மற்றொரு தோஷம். 175 முதல் மூன்று சூர்ணைகளில் ஈச்வரன் காலத்திற்கு

அந்தர்யாமியாயிருந்து ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 120ல் இது (காலம்) ஈசுவரனுக்கு க்ரீடாபரிகரமாய் சரீரபூதமாயிருக்கும். என்ற இதன் விவரணத்தில் "ப்ரக்ருத்யாதி பரிணாம ஸஹகாரியான காலம் ஈசுவரனுக்கு சரீரமாயிருக்குமென்கையாலே ஸஹகாரி காரணமும் ஈச்வரனே என்னுமதுக்கு விரோதமில்லை" என்று மாமுனி ஸ்வயமே ஸாதித்திருக்கின்றார். வேதாந்த ஸூத்ரத்தில் சொல்லப்படாததற்கும் அதே காரணம் என்றதும் தவறு. உபாதேயமான ஸஹகாரி காரணம் ஒன்று இல்லை என்று அங்கு 'க்ஷீரவத்தி' என்ற த்ருஷ்டாந்தத்தால் விளக்கப்பட்டிருக்கிறது.

2. தத்வத்ரயத்தில் ஸத்வ சூந்யமாவது காலம் (119) என்றது ஸமஞ்ஜஸம். ரஜஸ் தமஸ்ஸுக்களோடு கலசாத ஸத்த்வகுணமுள்ளது நித்யவிபூதி. அவற்றோடு கலசின ஸத்த்வகுணமுள்ளது மூலப்ரக்ருதி. எவ்வித ஸத்த்வகுணமும் இல்லாதது காலம், என்பது பொருள்: இங்கு மாமுனி ஸாதிக்கின்றார்—

> ஸத்வகுணம் ரஜஸ் தமஸ்ஸுக்களுக்கும உபலக்ஷணமாய் ஸத்வ சூந்ய மென்றது குணத்ரய சூந்ய மென்றபடி.

என்று. இங்கு மூன்று குணங்களுடைய ஸமுதாயாபாவம் விவக்ஷிதமானால் சுத்த ஸத்வத்தில் ஸத்வம் ஒன்று இருந்த போதிலும் ஸமுதாயாபாவம் இருப்பதால் அதிவ்யாப்தி. ப்ரத்யேக குணாபாவ ஸமுதாயம் விவக்ஷிதமானால் ஸத்த்வாபாவம் ஒன்றே லக்ஷணமாக அமையுமாதலால் மற்ற இரண்டு குணாபாவங்களை லக்ஷணத்தில் சேர்க்கவேண்டியது அநபேக்ஷிதம். சீதஸ்பர்சவத்ய ஆப: இங்கு சீதஸ்பர்சம் உஷ்ணஸ்பர்ச அநுஷ்ண சீதஸ்பர்சங்களுக்கு உபலக்ஷணம். அவற்றோடு கூடின சீதஸ்பர்சம் லக்ஷணம், என்பது போன்றது இது. சாஸ்த்ரவாஸநாமாந்த்யமத்ர அபராத்யதி.

3. "வசநபூஷணத்தில் "இத்தை வேதமென்கிறது வேதயதீதி வேத: என்கிற வ்யுத்பத்தியாலே புபுத்ஸுக்களாய் ஆஸ்திகராயிருப்பார்க்கு ஸ்வார்த்த ப்ரகாசகமாயிருக்கையாலே" என்கிறார் மாமுனி. இந்த வ்யுத்பத்தியால் ப்ரத்யக்ஷமும் அநுமானமும் பௌருஷேய சப்தமும் கூட வேதமாகும்.

> ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்யதே
> ஏநம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா.

என்கிற வ்யுத்பத்தி இவருக்கு ச்ரவணகோசரமாகவில்லை.

4. பூர்வமீமாம்ஸையில் சாகாந்தராதிகரணம் என்ற ஒன்று இருக்கின்றது. அதில் ஒரே கர்ம பல சாகைகளிலும் விதிக்கப்படும் அதாவது கர்ம ஒன்றே, எனப்பட்டிருக்கிறது. இந்த நிர்ணயத்திற்கு ப்ரயோஜனம் வேறு சாகையில விதிக்கப்பட்ட அங்கங்களையும் அநுஷ்டிக்க வேண்டுமென்பது. ப்ரஹ்ம ஸூத்ரத்தில் ஸர்வ வேதாந்த ப்ரத்யயாதிகரணம் என்ற ஒன்று இருக்கிறது. இதில் ஒரே வித்யை பல வேதாந்தங்களில விதிக்கப்படும் எனப்பட்டிருக்கிறது. இந்த நிர்ணயத்திற்கு ப்ரயோஜனம் வேறு வேதாந்தங்களில் உபதேசிக்கப்பட்ட குணங்களையும சேர்த்து உபாஸனம் பண்ணவேணும் என்பது. இது உள்ளபடி மனஸ்ஸில் படாமல் மாமுனி வசன பூஷணம் முதல் சூர்ணை விவரணத்தில் 'இது தான் செய்யும் போது ஸகல சாகாப்ரத்யய ந்யாயத்தாலும் ஸகல வேதாந்த ப்ரத்யய ந்யாயத்தாலும் செய்யவேணும் என்று ஆரம்பித்து ஸகல வேதவேதாந்தங்களில் உள்ள விஷயங்களையெல்லாம் நிர்த்தாரணம் செய்ய வந்த ந்யாயங்கள் இவை என்று தோற்றும்படி ஏகோதேசா ஸாதிக்கின்றார் பூர்வ மீமாம்ஸையிலுள்ள சாகாந்தராதிகரணத்தைத் தாமே நேரில அதிகரிக்கவில்லை என்பது தோற்றும்படி. "சாகாந்தராதிகரண ந்யாயத்தாலும்" என்று சொல்லவேண்டிய ஸ்தானத்தில் ஸர்வ வேதாந்த ப்ரத்யயம் என்பதை அநுஸரித்து 'ஸகல சாகாப்ரத்யய ந்யாயத்தாலும' என்கிறார்

5. "புருஷகாரத்துக்கும் உபாயத்துக்கும் என்று தந்த்ரேண உபாதாகம் பண்ணி அருளிச் செய்கிறார" (15) என்கிறார். இங்கு தனித்தனியே உபாதாநம் இருக்கும்போது தந்த்ரேண என்பது பாதிதம். 'ஒரே வாக்யத்தில் சேர்த்தெடுத்து' என்று சொல்லக்கருதி இப்படி ஸாதிக்கின்றார்.

6. ஸ்வரூபவிரோதியான ப்ராபகாந்தரம் ஜ்ஞாநிகளுக்கு பயஜநகமுமாய் சோக ஜநகமுமாயிருக்கும்" என்கிறார் (120). இது

> தேஷாம் துஸ்தரதயா ஆத்மநோ பக்தியோகாநர்ஹதாம் ஆலோச்ய சோசதோ அர்ஜுநஸ்ய சோகமபநுதந் ஸ்ரீபகவான் உவாச

என்ற கீதாபாஷ்யத்திற்கு விருத்தம். தேஷாம் துஸ்தரதயா உபாயவிரோதி பாவங்களைப் போக்க சக்தியில்லாமையாலே சோகம். உபாயம் ஸ்வரூப விருத்தம் என்பதாலன்று.

7. 'அக்நீஷோமீயம் பசுமாலபேத' என்கிறவிடத்தில் ஆலம்ப சப்தம் 'ஆலம்ப: ஸ்பர்சஹிம்ஸயோ:' என்கையாலே ஹிம்ஸா

வாசியிறே (129) என்றது "அக்நீஷோமீயாதிஷு ச ந ஹிம்ஸா பசோ:" என்ற கீதா பாஷ்யத்திற்கும், அக்நீஷோமீயாதே: ஸம்ஜ்ஞபநஸ்ய ஸ்வர்கலோக ப்ராப்தி ஹேதுதயா ஹிம்ஸாத்வா பாவசப்தாத்" என்ற ஸ்ரீபாஷ்யத்திற்கும் விருத்தம்.

8. "இவ்வழியாலுமிது அபராத கோடி கடிதமாயிருக்கும்" (146) என்கிறார். "கடகமாயிருக்கும்" என்றிருக்க வேண்டும்.

9 நாயமாத்மா மந்த்ரம் ஸ்வகத ஸ்வீகாரரூபமான பக்தி யோகத்தில் நிரதிசயப்ரியத்வரூப விசேஷணத்தை போதிக்கிறது என்கிறார் பாஷ்ய காரர்.

> புநச்ச 'நாயமாத்மா' இதிவிசேஷணாத். அத்யர்த்த ப்ரியரூபம் ஸ்ம்ருதி ஸந்தாநமேவ உபாஸந சப்தவாச்யமிதி ஹி நிச்சீயதே

என்று. இதற்கு நேர் விருத்தம் பரகத ஸ்வீகாரத்தை இந்த மந்த்ரம் சொல்லுகிறது என்பது, பரகதஸ்வீகாரம் பலம். அது விதேயமாகாது.

10. மோக்ஷோபாயமாய் விதிக்கப்பட்ட ப்ரீதிரூபாபந்நஸ்ம்ருதி தாரை பரபக்தி இதுவிசததமமாய் ஸாக்ஷாத்காரதுல்யமாம்போது பரஜ்ஞானம் எனப்படுகிறது. இதனால் உண்டான ஸத்ய: ப்ராப்தித்வரை பரமபக்தி. இதனால் பரபக்தியின் மேல் அவஸ்தா விசேஷங்களே பரஜ்ஞான பரமபக்திகள் என்பது ஸ்பஷ்டம். பகவத்கீதையில்

> பக்த்யா த்வநந்யயா சக்ய அஹமேவம்விதோர்ஜுந.
> ஜ்ஞாதும் த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப

என்று கூறப்பட்ட ஜ்ஞானதர்சநப்ராப்திகளில் ஜ்ஞாநம் என்பது சாஸ்தர ஜந்யஜ்ஞாநம். தர்சனம் பரபக்தியினால் உண்டாகி பரமபக்திக்குக் காரணமான விசததமஸாக்ஷாத்காரம். இதுவே பரஜ்ஞானம் என்று பேசப்பட்டது. சரீரம் விட்டபிறகு உண்டாகும் ஸ்ரீவைகுண்டப்ராப்தி ப்ராப்தி எனப்பட்டது. ஆகவே இங்கு பரபக்தி பரஜ்ஞானம் பரமபக்தி என்ற உபாயமான பக்தியின் மூன்று அவஸ்தைகளும் நடுவில்உள்ள தர்சநத்தில் அடங்குகின்றன. முதலிலுள்ள ஜ்ஞானம் சாஸ்த்ரஜ்ஞானம். மேலுள்ள ப்ராப்தி மோக்ஷம்.

> தத்த்வத: சாஸ்த்ரைர் ஜ்ஞாதும் தத்த்வத: ஸாக்ஷாத்கர்தும்
> தத்த்வத:ப்ரவேஷ்டுஞ்ச சக்ய:

என்றுள்ளது இங்கு பாஷ்யம். இப்படி தத்தவஸ்திதி இருக்கிற படியால், பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகளை ''இவை ஜ்ஞாநதர்ச நப்ராப்த்யவஸ்தைகள்'' என்று ஆசார்ய ஹ்ருதயத்தின் முடிவில் ஸாதித்ததும் அங்குள்ள மாமுனிகளின் விவரணமும் ஸ்ரீபாஷ்யாதிகளுக்கும் மற்றுமுள்ள பூர்வாசார்யர்களின் ஸ்ரீஸூக்திகளுக்கும் விருத்தம்.

11. பராயத்தாதிகரணத்தில் ஸ்ரீ பாஷ்யத்திற்கு விருத்தமாகவே தேசிகன் ஸாதித்திருக்கின்றார் என்ற தூஷணத்திற்கு நிரஸநம் ஸ்ரீரங்கநாத பாதுகையில் வெளிவந்திருக்கிறது. இங்கும் அது சேர்க்கப்பட்டிருக்கிறது. அங்கு தேசிகன் ஸாதித்ததையே தான் மாமுனிகளும் ஸாதிக்கின்றார் என்பதை விளக்கிவிட்டுப் பிறகு அங்கு மாமுனிகளின் உக்திகளில் உள்ள சில தோஷங்களையும் எடுத்துக்காட்டியிருக்கிறோம். அவை பின்வருமாறு:

1) க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து என்ற ஸூத்ரத்தில் விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய: என்ற பதத்திற்கு அர்த்தம் சொல்லியிருப்பது ஸரியன்று.

2) சேதநன் நிஷேதப்ரவ்ருத்தி பண்ணும் போது ஈச்வரன் அநாதரித்திருக்கிறான் என்றது ஸரியன்று.

3) ஜ்ஞாத்ருத்வரூபம் ஸ்வாதந்த்ர்ய சக்தி என்பது அயுக்தம். பரதந்த்ரனுக்கும் ஜ்ஞாத்ருத்வமுண்டு.

ஸஜ்ஜநாராதனம் இரண்டாம் பாகத்தில் வெளியிட்ட ப்ரதிப்ரச்னங்கள். உபதேசரத்ந மாலையில் உள்ளனவாக பாரிஜாத புஷ்பத்தில் கூறப்பட்ட தோஷங்கள், இந்த ப்ரத்யஸ்த்ரங்கள் இவை எல்லாவற்றுக்கும் ஸமாதானம் சொல்லமுடியுமானால் சொல்லவேண்டும். இல்லாவிட்டால் பரதூஷணத்திலிருந்து விரதி பெறவேண்டும்.

12. யானே யென்னை (2-9-9) யின் தாத்பர்யத்தை

''தம்முடைய இழவை அநுஸரித்து ஸ்வபாவத ஏவ அஸ்கலித ஞாநராய் ஒரு க்ஷண மாத்ரமும் எம்பெருமானை இழவாதே திருநாட்டிலே இருந்து அநுபவிக்கிறவர்கள் ஆரோ என்கிறார்'

என்று பிள்ளான் அருளிச்செய்தார். திருநாட்டிலே இருந்து அநுபவிக்கிறவர்கள் ஆரோ எப்படிபட்டவர்களோ என்ற கேள்விக்கு தாங்களும் அப்படிபட்டவர்களாகி அநுபவிக்க வேண்டியவர்கள் தானே. ஆகிலும் இழந்திருக்கின்றோமே என்பது கருத்து.

இதை நஞ்சீயர் "இஸ் ஸம்பந்தத்தில் எங்களுக்கும் அவர் களோபாதி ப்ராப்தி உண்டாயிருக்க இழப்பதே என்று கருத்து" என்று ஸ்பஷ்டமாக ஸாதித்தார். இதில் நித்யமாய் அநுபவிக்கிற வர்கள் பலர் இருக்கின்றனர் என்பது நான்காம் அடியினாலும் அவர்கள்போல் நமக்கும் ப்ராப்தி உண்டு என்பது மூன்றும் அடியி னாலும் இழவு முதல் இரண்டு அடிகளாலும் போதிக்கப்படுகின்றது.

இங்கு மூன்றும் அடியில் காணும் வ்யவஹாரம் எங்குள்ளதெ னில் அதைச் சொல்கிறது நான்காமடி, என்று 24 ஆயிரத்தில் அவ தாரிகை இருக்கிறது.

"இது எங்கேயுள்ள பரிமாற்றமென்ன, "வானே யேத்தும்" என்று. இதற்கு விவரணம்.

"வானிலுள்ளார் முறையறிந்தேத்த, நீ சேஷியான உத்கர்ஷத்தோடே இருக்குமவனல்லையோ"

என்றிருக்கிறது. இதனால் அந்த பரிமாற்றம் வானிலுள்ளது, என்று வ்யாக்யாநகாரர் அபிப்ராயபடுகிறார்என்று தோன்றுகிறது. அங்கு யாருடைய பரிமாற்றம் இது எனில் அதைச் சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏத்துகின்ற வானவருடையதே என இவர் கருத்தாகக் கொள்வது ந்யாயம். ஆனால் ஈட்டில் நித்யருடைய பரி மாற்றத்தைக் கண்டு முக்தர் சொல்லும் வார்த்தை இது எனப் பட்டிருக்கிறது.

"அஹம் மநுரபவம் ஸூர்யச்ச என்று நிற்பர்களாயிற்று முக்தர்"

என்றும், இதற்கு மேல்

இது எங்கே பரிமாறக்கண்டு சொல்லும் வார்த்தை? என்ன நித்ய ஸூரிகளுடைய இப்படியன்றோ உன்னை அநுபவிப்பது

என்றும் அங்குள்ளது. இவையெல்லாம் முன்னோர் க்ரந்தங்க ளில் காணுதலையும் ஸம்பந்தமில்லாதவையும் ஸ்ரீபாஷ்ய விருத்தங் களுமான உக்திகள். சாஸ்த்ர த்ருஷ்ட்யா து உபதேசோ வாம தேவவத் என்ற ஸூத்ர விவரணத்தில் சாஸ்த்ர த்ருஷ்டியினால் செய்யப்பட்ட உபதேசத்திற்கு வாமதேவருடைய உக்தி 'அஹம் மநுரபவம்' என்றது த்ருஷ்டாந்தமாகக் கொடுக்கப்பட்டிருக்கின் றது. ப்ரஹ்ம உபாஸநம் பண்ணுகிற ரிஷி வாமதேவர் முக்த ரன்று. மத்த: ஸர்வமஹம் ஸர்வம்' என்ற ப்ரஹ்லாதன் போன்றவர் இவர்.

சாஸ்த்ரத்திஞலே அறிந்ததை இப்பாட்டில் பின் இரண்டு அடி களால் ஆழ்வார் பேசுகிருரேயல்லது நித்யர்களுடையவோ முக் தர்களுடையவோ பரிமாற்றத்திற்கு இங்கு எவ்வித ப்ரஸக்தியு மில்லை.

நஞ்சியர் வரையிலுள்ள பூர்வர்களின் க்ரந்தங்களில் இப்படி அயதாயத உக்திகளைக் காணமாட்டோம்.



ரத்தின் மற்ற விளைவுகளில் விரும்பிப் பெற்றுப் போற்ற
-யவை பல. அவற்றைக் கூறுகின்றார்.

नदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् । आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥
षु वैराग्यमनहङ्कार एव च । जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥
भिष्वङ्गः पुत्रदारगृहादिषु । नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥
नयोगेन भक्तिरव्यभिचारिणी । विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥
ानित्यत्वं तत्त्वज्ञानार्थचिन्तनम् ।

இவற்றின் பொருள்:—

மாநித்வம்—பெரியோர்களை அவமதிக்கச் செய்யும் கர்வம்
மை

தம்பித்வம்—பிறர் புகழவேண்டுமென்பதற்காக ஒன்றை
தாகிற டம்பம் இல்லாமை

ஹிம்ஸா—வாக்கினாலும் மனஸ்ஸினாலும் சரீரத்தாலும்
கு பீடை செய்யாமை

க்ஷாந்தி—பிறர் பீடித்தாலும் அவர்களிடத்தில் பொறுமை

ர்ஜவம்—மனோ வாக்குக் காயங்கள் ஒரே விதமாயிருத்தல்

சார்யோபாஸனம்—ஆத்மஞானத்தை உண்டாக்கும்
யனை பணிவிடை வணக்கம் முதலிவற்றால் உபாஸித்தல்.

சௌசம்—மனோ வாக்குக் காயங்களுக்கு சாஸ்த்ர விதிப்படி
-ான சுத்தி

ஸ்தைர்யம்—வேதாந்த சாஸ்த்ரம் உபதேசிக்கும் பொருளில்
ிற்றல்

த்ம விநிக்ரஹம்—ஆத்மா தவிர மற்ற விஷயங்களில்
ாதபடி மனஸ்ஸை கட்டுப் படுத்துதல்

ந்த்ரியார்த்தேஷு வைராக்யம்—கண் முதலிய புலன்களால்
விக்கக் கூடிய விஷயங்களில் வெறுப்பு

நஹங்கார:—உடலையே உயிரென்று கொள்ளும் பொய்
இல்லாமை

ன்ம ம்ருத்யு ஜரா வ்யாதி துக்க தோஷாநு தர்சனம்—பிறப்பு
பு மூப்பு நோய் இவற்றால் உண்டாகும் கஷ்டங்களை நினை
வைத்திருப்பது

ஸக்தி—விஷயங்களில் பற்றில்லாமை